# டால்ஸ்டாய் கதைகள்

ஆசிரியர் :

**லியோ டால்ஸ்டாய்**

தமிழாக்கம் :

**வல்லிக் கண்ணன்**




## அலேய்டு பப்ளிஷிங் கம்பெனி

பிலிப்ஸ் தெரு, :: சென்னை-1.



காப்பி ரைட்]


[விலை ரூ. 2-0-0

# முன்னுரை

மகத்தான இலக்கியங்களை சிருஷ்டித்து, உயர்வடைந்தவர்களில் ரஷ்ய மேதை டால்ஸ்டாயும் ஒருவர். இலக்கிய வானில் குன்றாத ஒளி வீசித் திகழும் தனிப் பெரும் நட்சத்திரம் அவர். செல்வ போகங்கள் நிறைந்த உயர்குடியில் பிறந்தவர் அவர். செல்வ வளமும் வாலிபமும் வாழ்க்கையில் பெற்றுத்தரக் கூடிய சகல சுகங்களையும் அனுபவித்து உல்லாசமாக வாழ்ந்தார். உணர்ச்சிகள் ஆட்டி வைத்த வழியில் கண்மூடித்தனமாகச் சென்று கொண்டிருந்த அவருக்கு அறிவின் விழிப்பு ஏற்பட்டது. தான் வாழ்கிற முறை சரியானது அல்ல என்று உணர்ந்தார் அவர். தன்னைச் சுற்றிலும் வசிக்கிறவர்களும் பிறரும்—மனித வர்க்கத்தில் பெரும் பலரும்—வாழ்கிற முறை ஒழுங்கானது அல்ல என்று கண்டார். மனித குணங்களைப் பற்றி, மனித வாழ்வின் தன்மைகள் தவறுகளைப் பற்றி, வாழ்வின் உயர்வுக்கான வழிகளை எல்லாம் பற்றி, அவர் சிந்தித்தார். தனது எண்ணங்களையும் அனுபவங்களையும் அவர் கட்டுரைகளாகவும், நல்ல கதைகளாகவும், சிறந்த நாவல்களாகவும் உருவாக்கிக் குவித்தார். நல்வாழ்வு வாழ்வதற்கு ஏற்ற வழிகள் எனத் தான் உணர்ந்த உண்மைகளைப் பிறருக்கும் கற்றுக்கொடுப்பதற்காக அவர் தனது வாழ்நாளில் பல முயற்சிகள் செய்தார். அவரது வாழ்க்கை முறைகளினாலும் சிந்தனைக் கருத்துகளினாலும் வசீகரிக்கப்பட்டவர்களில் மகாத்மா காந்திஜீயும் ஒருவர். டால்ஸ்டாயைத் தனது குருவாக மதித்தார் காந்திஜீ என்பது குறிப்பிடத் தகுந்தது.

உண்மையின் உயர்வு, எளிய வாழ்வு, தெய்வ நம்பிக்கை, மனித அபிமானம், பரோபகாரச் சிறப்பு போன்ற கருத்துக்களை வலியுறுத்துவதற்காகவே டால்ஸ்டாய் பெரும்பாலான கதைகளை எழுதியிருக்கிறார். என்றாலும், அவருடைய கதைகள் வெறும் உபதேசக் கதைகள் மாதிரி சாரமற்றவை அல்ல. எளிமையும் இனிமையும் கதைச் சுவையும் நிறைந்த இலக்கியப் படையல்கள் அவை.

டால்ஸ்டாய் கதைகளில் அநேகம் தமிழில் வெளிவந்து விட்டன. ஆயினும், 'இரண்டு பேர்' எனும் நெடுங்கதை இதுவரை தமிழில் வரவில்லை.

மரண பயம் மனிதரை வேட்டையாடிக் கொண்டே இருக்கிறது. தான்—தனக்கு—தன்னுடைய என்ற குறுகிய நினைவுகளோடு வாழ்கிற வரையில் தான் மரணம் மனிதரை பயமுறுத்தும். தன்னை மறந்து, பிறருக்கு உதவத் துணிகிற போது, மனிதன் மரண பயத்தை வென்றுவிடுகிறான். அதுவரை அவனுக்குக் கிட்டாத மன அமைதி தானாகவே அவனை வந்து அடைகிறது.—இவ் உண்மையை விளக்குவதற்காக டால்ஸ்டாய் இரண்டு கதைகள் எழுதினார். அவற்றில் ஒன்று தான் 'இரண்டு பேர்'. இக்கதையில் மனித உள்ளத்தின் போராட்டங்களையும், இயற்கை வெறியின் தன்மைகளையும், மிருகங்களின் நுண்ணறிவையும் பற்றி அழகாகச் சித்தரித்திருக்கிறார்.

டால்ஸ்டாய் கதைகளில் சிறந்தவைகளுள் முக்கியமானது 'குற்றமும், தண்டனையும்'.

டால்ஸ்டாய் கதைகளைத் தமிழாக்கும் வாய்ப்பை எனக்கு அளித்து, அவற்றைப் புத்தகமாகப் பிரசுரிப்பதில் அக்கறை கொண்டு ஆர்வம் காட்டிய அலையிடு பப்ளிஷிங் கம்பெனி உரிமையாளர்கள் எஸ். ஆர். எஸ். சகோதரர்களுக்கு எனது இதயபூர்வமான நன்றி உரியது.

வல்லிக்கண்ணன்

# பொருளடக்கம்

## 1. இரண்டு பேர்

குளிர்காலத்தில், புனித நிக்கலஸ் திருநாளுக்கு மறுதினம், அது நிகழ்ந்தது. அந்த வட்டாரம் பூராவும் அன்று ஒரே கொண்டாட்டம்தான்.

விடுதித் தலைவன் வாஸிலி ஆன்ட்ரீவிச் பிரகுனோவ் பிரபலமான வியாபாரி. அவன் மாதா கோயிலின் பிரதானியாக இருந்ததனால் அன்று கோயிலுக்குப் போகவேண்டியது அவசியமாயிற்று. அதேபோல, உற்றார் உறவினர்களையும் நண்பர்களையும் தனது வீட்டில் உபசரித்து அனுப்ப வேண்டிய அவசியமும் அவனுக்கு ஏற்பட்டிருந்தது.

ஆனாலும், வந்திருந்தவர்கள் அனைவரும் விடை பெற்றுச் சென்ற உடனேயே அவன் பிரயாணம் போவதற்குரிய ஏற்பாடுகளைச் செய்யத் தொடங்கினான். பக்கத்து ஊரில் உள்ள நிலச் சொந்தக்காரன் ஒருவனை, ஒரு தோப்பு விஷயமாகக் கண்டு பேசக் கிளம்பினான் அவன். நீண்ட நாட்களாக அவன் பேரம் பேசி வந்த விவகாரம் அது. தனக்கு லாபகர மான முறையில் அந்த பேரம் முடியாதபடி, நகரத்தி லுள்ள வியாபாரிகள் முந்திக்கொண்டு காரியத்தைக் கெடுத்து விடக்கூடாதே என்ற அவசரம் அவனுக்கு.

இளைஞனான நிலச் சொந்தக்காரன் அந்தத் தோப்புக்கு பத்தாயிரம் ரூபிள்கள் கேட்டான். வாஸிலி ஆன்ட்ரீவிச் ஏழாயிரம் தருவதாகச் சொன்ன காரணத்தினாலேயே அவன் அவ்வளவு கேட்டுக் கொண்டிருந்தான். பார்க்கப்போனால், ஏழாயிரம்

என்பது தோப்பின் உண்மையான மதிப்பில் மூன்றில் ஒரு பங்குதான் ஆகும். வாஸிலி ஆன்ட்ரீவிச் கணக்குப் பண்ணிய கிரயத்திற்கே அந்தத் தோப்பு முடிந்துவிடும் என்ற நிலைமை இருந்தது. ஏனெனில், மரங்கள் எல்லாம் அவனுடைய வட்டாரத்திலேயே நின்றன. ஒருவனது வட்டாரத்தில் நிலவும் விலை மதிப்பை இதர பகுதியில் உள்ளவர்கள் தலையிட்டு உயர்த்தி விடக்கூடாது என்று அவன் பக்கத்து ஊர்களில் வசிக்கும் வியாபாரிகளோடு நீண்டகால ஒப்பந்தம் செய்து வைத்திருந்தான். ஆனால், இப்போது நகரத்தில் உள்ள மர வியாபாரிகள் சிலர் அந்தத் தோப்பை விலைபேசி முடித்துவிட முன் வந்திருப்பதாக அவனுக்குச் செய்தி எட்டியது. அதனால், உடனடியாகச் சென்று அந்த விஷயத்தை முடித்துவிட அவன் தீர்மானித்தான்.

ஆகவே, விருந்து முடிந்ததும் அவன் தனது பணப் பெட்டியிலிருந்து எழுநூறு ரூபிள்களை எடுத்தான். அதை மூவாயிரம் ஆக்குவதற்காக, தனது பாதுகாப்பிலிருந்த மாதாகோயில் பணம் இரண்டாயிரத்து முந்நூறு ரூபிள்களையும் சேர்த்தான். நோட்டுகளை அதிகச் சிரத்தையோடு எண்ணிப் பார்த்து, சட்டைப்பைக்குள் பத்திரமாக வைத்துக் கொண்டு, புறப்படுவதற்கு அவசரப்பட்டான் அவன்.

வாஸிலி ஆன்ட்ரீவிச்சின் வேலைக்காரர்களில் நிகிட்டா என்பவன் மட்டுமே அன்று குடிவெறி இல்லாமல் இருந்தான். அவன்தான் வண்டியில் குதிரையைப் பூட்டுவதற்காக ஓடினான். நிகிட்டாகூட வழக்கமாகக் குடிக்கும் குணம் உடையவன்தான். எனினும் அன்று அவன் குடிக்காமல் இருந்ததற்கு

ஒரு காரணம் உண்டு. கடைசி முறையாகக் குடித்த போது அவன் தனது மேல் சட்டையையும் தோல் பூட்ஸையும் 'தலைமுழுக' நேரிட்டது. அதனால் இனி மேல் குடிப்பதில்லை என்று அவன் சபதம் செய்து கொண்டான். அன்று முதல் இரண்டு மாதகாலம் அவன் தனது வைராக்கியத்தைக் காப்பாற்றி விட்டான். இப்பொழுதும் காத்து வந்தான். பண்டிகை யின் முதல் இரண்டு தினங்களிலும் எங்கு பார்த் தாலும் குடிமயம்; ஆயினும் மது ஆசையை எதிர்த்துச் சமாளித்து விட்டான் அவன்.

நிகிட்டா பக்கத்து கிராமம் ஒன்றைச் சேர்ந்த ஒரு விவசாயி. ஏறத்தாழ ஐம்பது வயதிருக்கும் அவனுக்கு. 'சரியான நிர்வாகி அல்ல' என்று இதர விவசாயிகள் அவனைப்பற்றிக் குறிப்பிடுவது உண்டு. அதாவது, அவன் வீட்டோடு இருந்து சிக்கனமாக வாழ்க்கை நடத்தும் குடும்பத் தலைவன் அல்ல; வீட்டைவிட்டு வெளியேறி கூலியாளாகவே பெரும் பங்கு காலத்தை ஓட்டுகிறவன். சுறுசுறுப்பு, சாமர்த் தியம், வேலையில் உறுதி, இவற்றிக்கெல்லாம் மேலாக இரக்கமும் இனிமையும் நிறைந்த அவனது சுபாவம் ஆகியவற்றினால் அவனுக்கு எங்குமே தனி மதிப்பு ஏற்பட்டிருந்தது. ஆனால் அவன் எந்த இடத்திலும் நெடுங்காலம் நிலைத்திருக்கவில்லை. ஏனென்றால், வருஷத்திற்கு இரண்டு தடவைகள்—அல்லது அதைவிட அதிகமாகவே—குடிவெறி அவனைப்பற்றிக் கொள்ளும். அப்பொழுதெல்லாம் அவன் தனது உடுப்புகள் அனைத்தையும் குடியிலே தொலைத்து விடுவான். அத்துடன், அமைதியற்றவனாகவும் சண்டைக்காரனாகவும் மாறிவிடுவான்.

வாஸிலி ஆன்ட்ரீவிச் கூட அவனை அநேக தடவைகள் வேலையை விட்டுத் துரத்திவிட்டது உண்டு. ஆனாலும் அவனே மீண்டும் நிகிட்டாவை வேலைக்கு எடுத்துக் கொள்ளத் தயங்கியதுமில்லை. அவனுடைய நியாயமான போக்கு, பிராணிகளிடம் அவன் காட்டும் அன்பு, முக்கியமாக குறைந்த கூலி ஆகிய காரணங்களுக்காக வாஸிலி மதிப்பு அளித்தான். அவனைப் போன்ற ஆளுக்கு நியாயமாகக் கொடுக்க வேண்டிய 'வருஷத்துக்கு எண்பது ரூபிள்கள்' என்கிற கணக்கின்படி வாஸிலி நிகிட்டாவுக்குப் பணம் தருவதில்லை. ஏறக்குறைய நாற்பது ரூபிள்கள்—சில்லறை சில்லறையாகவும் பல தவணைகளிலும்—கொடுத்தான். அதைக்கூட அநேகமாக அவன் ரொக்கமாய் கொடுப்பதில்லை. தனது கடையிலிருந்து சாமான்களாகக் கொடுத்தான். சாமான்களின் விலையை அவன் அதிகப்படுத்தி விடுவதும் வழக்கம்.

நிகிட்டாவின் மனைவி மார்த்தா ஒரு காலத்தில் வலிவும் வனப்பும் பொருந்திய மங்கையாக இருந்தவள், தனது ஒரு மகனையும் இரண்டு பெண்களையும் வைத்துக் கொண்டு குடும்பத்தை நிர்வகித்து வந்தாள். நிகிட்டா வீட்டிலேயே தங்க வேண்டும் என்று அவள் வற்புறுத்துவதில்லை. அதற்கு முதலாவது காரணம், தட்டுமுட்டுச் சாமான்களைப் பழுது பார்த்து வந்த ஒருவனோடு அவள் கடந்த இருபது வருஷ காலமாக தொடர்பு வைத்திருந்தாள். வேறொரு ஊரிலிருந்து வந்த குடியானவனான அந்த நபர் அவர்கள் வீட்டிலேயே தங்கியிருந்தான். இரண்டாவதாக, அவளுடைய கணவன் நல்ல நிலைமையில் இருக்கும்பொழுது அவள் அவனைத் தனது இஷ்டத்

துக்கு ஆட்டி வைத்த போதிலும், அவளுக்கு அவனிடம் பயமிருந்தது. அவன் குடித்துவிட்டால், தீயைக் கண்டு அஞ்சுவதுபோல அவனைக்கண்டு நடுங்குவாள் அவள். ஒருதடவை நிகிட்டா குடித்துவிட்டு வீட்டிலிருந்த போது, இதர சமயங்களில் அடங்கி ஒடுங்கிப் போகிற பழக்கத்துக்கு ஈடுகட்டத்தானோ என்னவோ, அவளுடைய பெட்டியை உடைத்து அவளது மிகச் சிறந்த ஆடைகளை எல்லாம் வெளியே எடுத்துப் போட்டான்; ஒரு கோடரியை எடுத்து அவளுடைய உள் அங்கிகளையும் நல்ல உடுப்புகளையும் தும்பு தும்பாகக் கொத்திக் குதறி நாசப்படுத்தி விட்டான்.

நிகிட்டா சம்பாதித்த கூலி பூராவும் அவனுடைய மனைவியிடமே போய்விடும். அதுபற்றி அவன் எவ்வித ஆட்சேபமும் கிளப்பியதில்லை. அதனால், பண்டிகைக்கு இரண்டு நாட்களுக்கு முன்னதாக, மார்த்தா இரண்டு தடவைகள் வாஸிலி ஆன்ட்ரீவிச்சை பார்க்கப் போனாள். அவனிடமிருந்து கோதுமை மாவு, தேயிலை, சர்க்கரை, கொஞ்சம் வோட்கா (மது) ஆகியவை பெற்றுக்கொண்டாள். அவ்வளவுக்கும் மூன்று ரூபிள்கள் ஆயின. மேற்கொண்டு ரொக்கமாக ஐந்து ரூபிள்கள் வாங்கினாள். அதற்காக அவள் அவனுக்கு மிகுந்த நன்றி தெரிவித்தாள். அவன் குறைந்த பட்சம் இருபது ரூபிள்கள் நிகிட்டாவுக்குக் கொடுக்க வேண்டியிருந்தது. என்றாலும் அவன் அவளுக்கு சலுகையோடு விசேஷமான ஆதரவு காட்டிவிட்டது போல் தான் அவள் வந்தனம் அறிவித்தாள்.

'நாம் உன்னோடு எப்பொழுதாவது ஒப்பந்தம் எழுதிக் கொண்டோமா என்ன? உனக்கு ஏதாவது தேவைப்பட்டால், தாராளமாக எடுத்துக்கொள்,

அதனாலென்ன ? பிறகு வேலை செய்து கழித்துவிடப் போகிறாய். நான் மற்றவர்களைப்போல் இல்லை. உன்னை காக்கப் போடுவது, கணக்கைத் திருத்துவது, அபராதம் என்று பிடிப்பது இவை எல்லாம் நம்ம கிட்டேக் கிடையாது. நேர்மையாகத்தான் நாம் நடந்து கொள் வோம். நீ எனக்காக உழைக்கிறாய். நான் உன்னை புறக்கணித்து விடமாட்டேன்' என்று வாஸிலி நிகிட்டா விடம் சொன்னான்.

இதைச் சொல்லும் போது, தான் நிகிட்டாவின் ஆதரவாளன் என்று உண்மையாகவே நம்பிவிட்டான் வாஸிலி ஆன்ட்ரீவிச். நிகிட்டாவும், பணத்துக்காக அவனை நம்பி இருக்கின்ற மற்ற எல்லோரும், அவனே தங்களைப் பாதுகாக்கிறான், அவன் யாரையும் வஞ்சிக்க வில்லை என்று நினைத்து அவனது எண்ணத்தை உறுதிப்படுத்தும் வகையில் நடந்து கொள்ளும்படி பேச்சை உபயோகிக்கும் சாதுரியம் அவனுக்குத் தெரியும்.

'ஆமாம், எனக்குத் தெரிகிறது வாஸிலி ஆன்ட்ரீவிச். நான் உமக்காக உழைக்கிறேன். எனது சொந்தத் தகப்பனுக்குப் பாடு படுவதுபோல நான் சிரமம் எடுத்துக் கொள்கிறேன். இது உமக்கே தெரியும். எனக்கு எல்லாம் புரிகிறது!' இப்படி நிகிட்டா பதில் சொல்வான்.

வாஸிலி தன்னை ஏமாற்றுகிறான் என்பது அவனுக்கு நன்றாகத் தெரியும். அதே சமயத்தில், அவனிடம் சொல்லி கணக்கைச் சரிபடுத்திக் கொள்ள முயற்சிப்பதோ, தன்னுடைய கட்சியை எடுத்துப் பேசுவதோ எவ்விதமான பயனும் தராது; தனக்கு

வேறு போக்கிடம் இல்லை என்கிற நிலைமை நீடிக்கிற வரையில், தான் பெற முடிந்ததைப் பொறுமையுடன் ஏற்றுக்கொள்ள வேண்டியதுதான் என்பதையும் அவன் உணர்ந்திருந்தான்.

இப்பொழுது, வண்டியைப் பூட்டும்படி எஜமான் உத்திரவிட்டதும் அவன் வழக்கம்போல் உற்சாகத்தோடும் மன நிறைவோடும், உள்வளைந்த தனது பாதங்களை வீசிவீசிச் சுறுசுறுப்பாக நடந்து, தொழுவத்தை அடைந்தான். குஞ்சம் கட்டிய கனமான கடிவாளத்தை ஆணி ஒன்றிலிருந்து எடுத்து, கடி இரும்பின் வளையங்களைக் குலுக்கி ஒலி எழுப்பிக் கொண்டே, மூடிக்கிடந்த கொட்டிலை நோக்கிச் சென்றான். வண்டியில் பூட்டப்பட வேண்டிய குதிரை அங்கே தான் தனியாக நின்றது.

அவனைக் கண்டதும், லாயத்தில் தனியாக நின்ற குதிரை சிறு கனைப்பு கனைத்தது. அதனால் அவன் 'என்ன, தனியாக நிற்பது உனக்குக் கஷ்டமாக இருக்கிறதா? அசட்டுக் கழுதை!' என்று பேசினான்.

நல்ல சுபாவம் உள்ள குதிரை அது. நடுத்தர வளர்த்தி பெற்ற, கருஞ்சிவப்பு நிற, ஆண் குதிரை. அதன் பின்பக்கம் சற்று அதிகமாகச் சரிந்து காணப் பட்டது. தான் சொல்வதைக் கேட்டுப் புரிந்து கொள்ளக்கூடிய சக்தி பெற்ற ஆளிடம் பேசுவது போலவே நிகிட்டா அந்தக் குதிரையிடமும் வார்த்தை யாடினான்.

'கொஞ்சம் பொறு. கொஞ்சம் பொறு. இன்னும் நேரம் கிடக்கிறதே. முதலில் நான் உனக்கு தண்ணீர் காட்டுகிறேன்' என்று அவன் சொன்னான். தனது

மேல் சட்டையின் விளிம்பை எடுத்து, நல்ல போஷணை யினுல் மினு மினுத்து நின்ற குதிரையின் முதுகிலே படிந்திருந்த தூசியைத் தட்டித் துடைத்தான். அதன் அழகான தலையில் கடிவாளத்தை மாட்டி, காதுகளையும் நெற்றி மயிரையும் நேர்படுத்தி விட்டான். பிறகு, கட்டைத் தறித்து குதிரையை தண்ணீர் காட்டுவதற் காக வெளியே இட்டுச் சென்ருன்.

சாணம் சிதறிக் கிடந்த லாயத்திலிருந்து வழி யைக் கண்டுபிடித்து வெளியே வந்த குதிரை, முக்கார்ட்டி, துள்ளிக் குதித்தது. தனது பின்காலை உதைத்து விளையாடியது. குழாயை நாடி, தன்னேடு கூடவே ஓடிவந்து கொண்டிருந்த நிகிட்டாவை ஓங்கி உதைப்பதுபோல் பாசாங்கு செய்தது அது.

'இந்தா பாரு, இந்தா பாரு, அயோக்கியக் கழுதை!' என்று நிகிட்டா கடிந்து கொண்டான். உதை அவன் உடம்பில் படாமல், அழுக்குப் படிந்த ஆட்டுத்தோல் மேல்அங்கியை மாத்திரம் உரசும் படியாக, எவ்வளவு ஜாக்கிரதையோடு அந்தக் குதிரை தனது காலை வீசியது என்பதை அவன் அறிவான். முக்கார்ட்டியின் இந்தத் தந்திரத்தை நிகிட்டா வெகு வாகப் பாராட்டுவது வழக்கம்.

குளிர்ந்த நீரைக் குடித்ததும் குதிரை பெருமூச் செறிந்தது. வலுவான அதன் உதடுகள் ஈரம் படிந்து துடித்தன. அவற்றின் ரோமங்களில் தங்கி நின்ற கண்ணுடி போன்ற நீர்த்துளிகள் தொட்டியினுள் விழுந்தன. குதிரை கொஞ்ச நேரம் யோசனையில் ஆழ்ந்து விட்டதுபோல் நின்றது. பிறகு நாசியினுல் பெருஞ்சீற்ற ஒலி ஒன்றை எழுப்பியது.

'உனக்கு இஷ்டம் இல்லையானால் நீ மேலும் குடிக்க வேண்டியதில்லை. ஆனால் அப்புறம் தண்ணீர் வேணும் என்று கேட்கப்படாது' என்று கண்டிப்பாகச் சொன்னான் நிகிட்டா. இவ்விதம் தனது பண்பை முக்கார்ட்டிக்கு விளக்கிக் காட்டிய பிறகு அவன் லாயத்துக்குத் திரும்பினான். முற்றத்தில் நெடுகிலும் துள்ளி விளையாடத் துடித்த இளம் குதிரையை கடிவாள வாரினால் பிடித்து இழுத்துக் கொண்டு வந்தான் அவன்.

முற்றத்தில் அந்நியன் ஒருவன் தவிர வேறு யாரும் காணப்படவில்லை. சமையல் காரியின் கணவன் அவன். பண்டிகைக்காக அங்கு வந்திருந்தான்.

'போய், எந்தச் சறுக்கு வண்டியில் குதிரையை பூட்ட வேண்டும் என்று கேளு. அகலமான வண்டியிலா, சின்ன வண்டியிலா என்று தெரிந்து வா. போ ஐயா, நீ ரொம்ப நல்லவனாச்சுதே!' என்றான் நிகிட்டா.

சமையல்காரியின் கணவன் வீட்டுக்குள்ளே போனான். இரும்பினால் அஸ்திவாரம் இடப்பெற்று, தகரக்கூரை அமைக்கப்பட்டு உறுதியாக விளங்கியது அந்த வீடு. அவன் சீக்கிரமே திரும்பி வந்து, சின்ன வண்டிதான் தயாராக வேண்டும் என்று அறிவித்தான்.

அதற்குள், நிகிட்டா கழுத்துப் பட்டையையும் பித்தளை பொதிந்த வயிற்றுப் பட்டையையும் குதிரைக்கு அணிவித்து விட்டான். வர்ணம் பூசப் பெற்றிருந்த, லேசான ஏர்க்கால் சட்டம் ஒன்றை ஒரு கையில் தூக்கிக்கொண்டு, மறுகையால் குதிரையைப் பற்றி வண்டிகள் நின்ற இடத்துக்கு நடத்திச் சென்றான்.

'சரி சரி, சின்ன வண்டியே போகட்டும்' என்று சொல்லிக் கொண்டே அவன் குதிரையை இழுத்து சட்டத்திற்குள் ஓட்டினான். அறிவுள்ள அந்தக் குதிரை இத்தனை நேரமும் அவனைக் கடிப்பதுபோல் விளை யாட்டுக் காட்டிக் கொண்டிருந்தது.

சமையல்காரியின் கணவன் துணைபுரிய நிகிட்டா வண்டியில் குதிரையைப் பூட்டினான். எல்லாம் ஒரு மாதிரியாக நிறைவேறியதும் அவன் அந்த ஆளை, வைக்கோல் எடுத்து வருவதற்காகத் தொழுவுக்கும், முரட்டுக் கம்பளித்துணி ஒன்றைக் கொண்டு வருவதற்காகக் களஞ்சியத்திற்கும் அனுப்பி வைத்தான்.

'உம், இப்ப சரியாப் போச்சு. அடே அடே! இது மாதிரி சிலிர்ப்பு காட்டாதே' என்று கூறிக்கொண்டே, மற்றவன் எடுத்து வந்த புத்தம் புதிய வைக்கோலை வண்டிக்குள் திணித்து அமுக்கினான். 'இப்போது சாக்கை இதன் மேலே பரப்புவோம். அதற்குமேலே கம்பளியை விரிப்போம்' என்று சொல்லிக்கொண்டு, சொல்லுக்குத் தகுந்தாற்போல் செயல் புரிந்தான். கம்பளியை இழுத்து, வைக்கோல் வெளியே தெரி யாதபடி மூடித் திணித்து, உட்காருவதற்கு வசதியாக இடம் அமைத்தான் அவன்.

'அன்பரே, உமக்கு வந்தனம். எப்பவுமே ஒருவ னுக்கு இரண்டு பேராக வேலை செய்தால் எல்லாம் வெகு சீக்கிரத்தில் முடிந்துவிடும்' என்று நிகிட்டா சொன்னான். பித்தளை வளையத்தினால் இணைக்கப் பட்டிருந்த தோல்வார்களைப் பிடித்தவாறே அவன் வண்டிக்காரன் இருப்பிடத்தில் அமர்ந்து கொண்டான்.

முற்றத்தில் பனிமூடி உறைந்து கிடந்த உரக் கிடங்கின் மேலாகவே வண்டியைச் செலுத்தினன். அமைதியின்றித் துடித்து நின்ற குதிரையை வாசலை நோக்கி ஓட்டினன்.

‘நிகிட்டா மாமா!........மாமா, மாமா!’ என்று ஒரு குரல் ஓங்கி எழுந்தது. ஏழு வயதுச் சிறுவன் ஒருவன் வீட்டினுள்ளிருந்து முற்றத்துக்கு ஓடிவந்தான். கறுப்புநிற ஆட்டுத்தோலால் ஆன கோட்டும் வெள்ளை நிறத் தோல் பூட்சும், கதகதப்பான குல்லாயும் அணிந்திருந்தான் அவன். அவசரம் அவசரமாக ஓடிவந்த அச் சிறுவன் ‘என்னையும் உன்கூட அழைத்து போ’ என்று சொல்லிக் கொண்டே, மேல் சட்டையின் பொத்தான்களை மாட்டி நின்ருன்.

‘அதுக்கென்ன, ஓடிவா கண்ணே!’ என்று கூறி, நிகிட்டா வண்டியை நிறுத்தி அவனை எடுத்துத் தன்னுடன் அமர்த்திக் கொண்டான். மெலிந்து, உடல் வெளுத்துக் காணப்பட்ட சின்னப் பையன் முதலாளியின் மகன் ஆவன். வண்டியில் ஏறியதும் அவனுக்கு ஆனந்தம் பொங்கியது. வண்டி ரஸ்தாவை நோக்கி விரைந்தது.

அப்பொழுது இரண்டு மணிக்கு மேலாகிவிட்டது. காற்றும் குளிரும் கலந்து நிலவிய உற்சாகமற்ற நாள் அது. உறைபனி நிலைமை கடுமையாக இருந்தது. கவிந்து வந்த கார்மேகம் வானத்தில் அரை வாசியை மூடி மறைத்து விட்டது. முற்றத்தில் அமைதி தான் நீடித்தது. ஆனல் வீதியிலே காற்றின் தாக்குதல் வலிமை பெற்றிருந்தது. அருகிலிருந்த கூரை ஒன்றிலிருந்து கீழே சரிந்து விழுந்த உறை

பனி, காற்றில் அடிபட்டுச் சுழன்று, குளிக்கும் அறையை ஒட்டிய திருப்பத்தில் சுற்றி மிதந்து கொண்டிருந்தது.

நிகிட்டா வண்டியை முற்றத்திலிருந்து வெளியே கொண்டு வந்து குதிரையை வீட்டின் பக்கமாக திருப்பு வதற்கு முன்னதாகவே வாஸிலி ஆன்ட்ரீவிச் பாய்ந்து வந்தான். வீட்டின் முன்பக்கத்தில் உள்ள நடை வாசலில், சிகரெட் பிடித்தபடி நின்று கொண்டிருந் தான் அவன். துணி மூடிய ஆட்டுத்தோல் கோட்டு அவன் தேகத்தில் இறுகப் படிந்திருக்கும்படி இடுப் பருகே கச்சையிடப் பட்டிருந்தது. அவன் அடிஎடுத்து வைத்ததும், பலர் காலில் மிதிபட்டு இறுகியிருந்த பனி கூட அவனது கால்களில் கிடந்த தோல் பூட்ஸின் கீழ் கீச்சிட்டு நெகிழ்ந்து கொடுத்தது.

வாஸிலி முன்னால் வந்து நின்று, சிகரெட்டைக் கடைசி முறையாக ஒரு 'தம்' இழுத்துவிட்டு, கட்டை யைக் கீழே போட்டுக் காலால் நசுக்கினான். மீசையி னூடாகப் புகை நெளியும்படி மூச்சு விட்டான். முன்னேறி வந்துகொண் டிருந்த குதிரையை ஓரக் கண்ணால் கவனித்தவாறே, தோலினாலான கழுத்துப் பட்டையை அவன் சரிப்படுத்திக் கொண்டான். சிவந்து ஆரோக்கியமாகக் காணப்பட்ட அம் முகம் க்ஷவரம் செய்யப்பட்டு 'மழ மழ' வென்றிருந்தது. அதனால் மீசை மட்டும் எடுப்பாக விளங்கியது. அவனது சுவாசத்தினால் கழுத்துப் பட்டையில் ஈரம் கசிந்து விடக்கூடாதே என்கிற எச்சரிக்கையோடு, முகத்தை ஒட்டிய இருபுறங்களிலும் அவன் அதைச் சொருகி உள்ளே அடக்கமாக இருக்கும்படி செய்தான்.

சறுக்கு வண்டியில் தனது சிறிய மகன் இருப்பதைக் கவனித்ததும், 'இங்கே பாரேன், அதுக்குள்ளே இந்தப் போக்கிரிப் பயல் வண்டியில் இடம் பிடித்து விட்டானே!' என்று வியப்புடன் முனங்கினான் அவன்.

வாஸிலி ஆன்ட்ரீவிச் அன்று விருந்தாளிகளுடன் சேர்ந்து பருகிய மதுவின் காரணமாக 'உளம் கிளர்ந்த' நிலையிலிருந்தான். ஆகவே, தன்னுடையது என்று சொந்தம் பாராட்டிக் கொள்ளக்கூடிய எல்லா விஷயங்கள் பேரிலும் அவனுக்கு ஏகப்பட்ட பெருமை ஏற்பட்டிருந்தது. தான் செய்கிற ஒவ்வொரு காரியத்திலும் அளவிலாத் திருப்தியே கண்டான் அவன். தன்னுடைய இளவரசு என்று அவன் மதித்து வந்த புத்திர பாக்கியத்தின் தோற்றமே அவனுக்குப் பேருவகை கொடுத்தது. அவன் தனது கண்களைக் குறுக்கிக் கொண்டு, பெரிய பற்களைக் காட்டியவாறே, மகனைக் கவனித்தான்.

அவனை வழி அனுப்புவதற்காகக் காத்திருந்த அவன் மனைவி தலைவாசலில் அவனுக்குப் பின் பக்கத்தில் நின்றாள். கருவுற்றிருந்த அவள் மெலிந்து உடல் வெளுத்துக் காணப்பட்டாள். அவள் தனது தலையையும் தோள்களையும் ஒரு போர்வையினால் மூடி மறைத்திருந்ததால், அவளது முகத்தில் கண்கள் மட்டுமே வெளியே தெரிந்தன. அவள் வாசல்படியிலிருந்து முன்னால் வந்து, பயந்த குரலில் சொன்னாள், 'இப்போது நீங்கள் நிகிட்டாவையும் உங்களோடு கூட்டிக் கொண்டு போவது நல்லது' என்று.

வாஸிலி ஆன்ட்ரீவிச் பதில் எதுவும் சொல்லவில்லை. அவளுடைய வார்த்தைகள் அவனுக்கு

உறுத்தல் ஏற்படுத்தின என்பது நன்ருகப் புரிந்தது. அவன் கடுமையாக முகத்தைச் சுளித்துவிட்டுக் காரித் துப்பினுன்.

'நீங்கள் பணம் கொண்டு போகிறீர்கள். காற்று நிலைமை இன்னும் மோசமாகப் போனுல் என்ன செய்வீர்கள்? நல்லதுக்குத்தான் சொல்கிறேன். அவனையும் கூட்டிக்கொண்டு போங்கள்' என்று அவள் அதே சோகக் குரலில் தொடர்ந்து பேசினுள்.

'ஏன்? அந்த வழி எனக்குத் தெரியாதா? என் கூடத் துணைக்கு ஒரு ஆள் வேண்டுமா என்ன?' என்ருன் வாஸிலி. அவன் ஒவ்வொரு வார்த்தையையும் நிறுத்தி நிதானமாக உச்சரித்தான். சாமான் வாங்க வந்தவர்களிடமும் விற்கிறவர்களிடமும் பேசுகிற தோரணையோடு, தனது உதடுகளை இயல்புக்கு மாருன முறையில் அழுத்திக் கடித்துக்கொண்டே பேசினுன் அவன்.

போர்வையை இழுத்து மேலும் நன்ருக மூடி முக்காடிட்டுக் கொண்டே அவள் சொன்னுள்: 'நீங்கள் அவனையும் அழைத்துச் செல்வதுதான் நியாயமாகும். ஆண்டவன் பெயரால் நான் உங்களைக் கெஞ்சிக் கேட்டுக் கொள்கிறேன்.'

'பாரேன். அட்டை மாதிரி அதிலேயே ஒட்டிக் கொண்டு விடமாட்டேன் என்கிருளே........அவனை நான் எங்கே கூட்டிப் போவது?' என்று அவன் முணமுணத்தான்.

'வாஸிலி ஆன்ட்ரீவிச், நான் உங்கள் கூட வரத் தயார்' என்று குதூகலத்தோடு சொன்னுன் நிகிட்டா. பிறகு எஜமான் மனைவியின் பக்கம் திரும்பி, 'ஆனுல்

நான் இல்லாதபோது யாராவது குதிரைகளுக்குத் தீனி வைக்க வேண்டுமே' என்று சொன்னான்.

'அதை நான் கவனித்துக் கொள்கிறேன், நிகிட்டா. நான் சைமனிடம் சொல்லி வைக்கிறேன்' என்றாள் அவள்.

ஆகவே, தீர்மானமான ஒரு முடிவை எதிர் பார்த்தபடி 'என்ன வாஸிலி ஆன்ட்ரீவிச், நானும் உங்கள்கூட வரவா?' என்று நிகிட்டா கேட்டான்.

'என் வீட்டுக்காரியை நான் திருப்திப்படுத்த வேணும் என்றுதான் தோன்றுகிறது. ஆனால் நீ வருவதென்றால், இதைவிடக் கதகதப்பான உடுப்பு ஏதாவது அணிந்து கொள்வது நல்லது' என்று சொல்லி, வாஸிலி நிகிட்டாவின் மேல் அங்கியைப் பார்த்துக் கண்ணைச் சிமிட்டிக் கொண்டே புன்முறுவல் பூத்தான்.

நிகிட்டா அணிந்திருந்த ஆட்டுத்தோல் சட்டை கட்டையாக இருந்தது. கைகளின் கீழும் முதுகுப் புறத்திலும் கிழிந்து காணப்பட்டது. அழுக்குப்படிந்து, ஓரம் பூராவும் சிலும்பல் சிலும்பலாகி, உருக்குலைந்து போய்விட்டது அது. அதனுடைய ஆயுட்காலத்தில் அது எவ்வளவோ அடிபாடுகளைத் தாங்கிச் சகித்து வந்திருந்தது.

'ஏய், ஐயா, இப்படி வந்து இந்தக் குதிரையைக் கொஞ்சம் பிடித்துக்கொள்' என்று நிகிட்டா சமையல் காரியின் கணவனைப் பார்த்துக் கூவினான். அந்த ஆள் இன்னும் முற்றத்திலேயேதான் நின்றான்.

'வேண்டாம். நானே பிடிப்பேன். நான்தான் பிடிப்பேன்' என்று கத்திக்கொண்டு சின்னப்பையன்

சட்டைப் பைகளுக்குள்ளே இருந்த கைகளை வெளியே இழுத்தான். குளிரினால் சிவப்பேறி விட்ட கரங்களினால் அவன் குதிரை லகானை பற்றிக்கொண்டான். அந்தத் தோல் வாரும் குளிர்ந்துதான் இருந்தது.

நிகிட்டாவை நோக்கிச் சிரித்துக்கொண்டே வாஸிலி ஆன்ட்ரீவிச் சொன்னான், 'உன்னை அலங்காரம் பண்ணிக் கொள்வதிலேயே அநாவசியமாகக் காலம் போக்கிவிடாதே. சுறுசுறுப்பாக வந்து சேரு!' என்று.

'ஒரு நொடியிலே வந்து விடுகிறேன் ஐயா' என்று சொன்ன நிகிட்டா, தோலினால் ஒட்டுப் போடப் பெற்று கனமாகி யிருந்த பூட்ஸை இழுத்துக்கொண்டு வேகமாக ஓடினான். முற்றத்தின் குறுக்காக ஓடி, தொழிலாளர்கள் தங்கும் குடிலுக்குள் புகுந்தான்.

'அரினுஷ்கா! அடுப்புப் பரணுக்கு மேலே இருக்கிற என் கோட்டை எடுத்துக் கீழே போடு. நான் எஜமானோடு பிரயாணம் போகிறேன்' என்று அவன் சொன்னான். அங்கே ஆணியில் தொங்கிய இடுப்புப் பட்டையை வேகமாக எடுத்துக் கொண்டான்.

தொழிலாளிகளுக்கு உணவு ஆக்கிப் போடுகிற சமையல்காரி, உண்ட களைப்பினால் நன்றாக உறங்கிய பிறகு விழித்து எழுந்து, தனது கணவனுக்கு வெந்நீர் தயாரிப்பதற்காக * 'ஸமோவா'ரைப் பற்ற வைத்துக் கொண்டிருந்தாள். உள்ளே புகுந்த நிகிட்டாவை உற்சாகத்தோடு கவனித்தாள் அவள். அவனது

* 'ஸமோவார்' என்பது 'பாய்லர்' மாதிரி, வெந்நீர் தயாரிக்க உதவும் பாத்திரம். அதில் தண்ணீரைக் கொதிக்க வைத்து, வெகு நேரம் வரை சூடு ஆறாமல் பாதுகாக்க முடியும்.

பரபரப்பு அவளிடமும் தொத்திக் கொண்டது. அதனால் அவள் வேகமாக வேலை செய்தாள். அடுப்புப் பரண்மீது காய்ந்து கொண்டிருந்த நைந்து போன துணி அங்கியை எடுத்து, 'அரக்கப் பறக்க' உதறி, மாற்றி, கையினால் தேய்த்துப் பதப்படுத்தினாள்.

'இனி உனக்கு நல்ல வாய்ப்புதான். உன் புருஷனோடு நீ சந்தோஷமாகப் பொழுது போக்கலாம்' என்று நிகிட்டா சொன்னான். அவன் யாருடன் தனித்து நிற்க நேரிட்டாலும் சரிதான்; அன்பு கனிந்த உள்ளத்தோடு ஏதாவது இனிய வார்த்தை சொல்வது அவனுடைய வழக்கம்.

தேய்ந்து குறுகிய இடுப்புப் பட்டையைச் சுற்றி இழுத்து, சுருங்கிய வயிறு மேலும் ஒட்டிப் போகும்படி மூச்சை உள்வாங்கி, தோல்சட்டை உடம்போடு இறுகிப்படியும் வண்ணம் அழுத்திக் கட்டிக் கொண்டான் அவன். 'இப்ப சரியாகி விட்டது' என்றான்.

இப்படி அவன் சமையல்காரியிடம் பேசவில்லை. நுனிகளை இழுத்துச் சேர்த்து இடுப்பில் சொருகிக் கொண்டே அவன் அந்தப் பட்டையைப் பார்த்துத் தான் சொன்னான். 'இனிமேல் நீ அவிழ்ந்து விழமாட்டாய்' என்றும் சொன்னான்.

அப்புறம், கைகள் தாராளமாக இயங்குவதற்கு வசதியாக அவன் தோள்களை மேலும் கீழுமாக உயர்த்தியும் இறக்கியும், முதுகை வளைத்து நெளித்தும் மேல் சட்டையை மாட்டிக் கொண்டான். புஜங்களில் உறுத்தாதபடி கவனித்து, கைகளின் கீழ்ப்பகுதியில் குத்திக் குத்திச் சரிப்படுத்தினான். தோலினால் மூடிப் பொதிந்த கையுறைகளை எடுத்துக் கொண்டதும்

அவன் 'எல்லாம் திருப்தியாக முடிந்தது' என்று சொன்னான்.

'உன் கால்களுக்குப் பாதுகாப்பாக ஏதாவது சுற்றிக்கொள்ள வேண்டும், நிகிட்டா. உன் பூட்ஸ் மகா மோசமாக இருக்கிறதே' என்றாள் அவள்.

திடீரென்று அவ் உண்மையை உணர்ந்தவன் போல அவன் நின்றான். 'ஆமாம் அப்படிச் செய்ய வேண்டியதுதான்....ஆனால் இந்தத் தடவை இவையே போதும். இப்ப ரொம்ப தூரம் போக வில்லையே!' என்று கூறிவிட்டு, அவன் முற்றத்திற்கு ஓடினான்.

அவன் சறுக்கு வண்டியை அணுகியதும், 'உனக்குக் குளிரவில்லையா நிகிட்டா?' என்று எஜமானின் மனைவி கேட்டாள்.

'குளிரா? அதொன்றும் இல்லையே. கதகத வென்றுதான் இருக்கிறேன்' என்று அவன் சொல்லி விட்டான். தனது பாதங்களை மூடி மறைப்பதற்குத் தகுந்தபடி, கொஞ்சம் வைக்கோலை வண்டியின் முன் பக்கத்திற்குத் தள்ளிக் கொண்டான். அந்த நல்ல குதிரைக்குத் தேவைப்படாது என்கிற காரணத்தினால் அவன் சவுக்கை எடுத்து அடியில் போட்டு வைத்தான்.

மென்ரோமம் அடர்ந்த மேல் சட்டைகள் இரண்டை ஒன்றுக்குமேல் ஒன்றாக அணிந்திருந்த வாஸிலி ஆன்ட்ரீவிச் இதற்குள்ளாக வண்டியில் ஏறி உட்கார்ந்து விட்டான். அவனது அகன்ற முதுகு வண்டி பூராவையும் அடைத்துக் கொள்வதுபோல் விரிந்து பரவியிருந்தது. அவன் வார்களைக் கைப் பற்றிக் கொண்டதுமே குதிரையைத் தட்டினான். வண்டி நகரத் தொடங்கியபோதுதான் நிகிட்டா தாவி

ஏற முடிந்தது. வண்டியின் முன்புறத்தில் இடது பக்கமாக உட்கார்ந்து கொண்டான் அவன். அவனது கால்களில் ஒன்று வண்டிக்கு வெளியே தொங்கிக் கொண்டிருந்தது.

## 2

வண்டியை இழுத்துக் கொண்டு சுறுசுறுப்பாக நடந்தது அந்த நல்ல குதிரை. பனி உறைந்து மென்மையாக விளங்கிய பாதை வழியாக ஊரைக் கடந்து சென்றது. வண்டியின் பின்பக்கத்துச் சறுக்கிகள் வேகம் காரணமாகக் கிரீச்சிட்டுக் கொண்டிருந்தன.

'அவன் அங்கே தொங்குவதைப் பாரேன். சவுக்கை என்னிடம் கொடு, நிகிட்டா' என்று கத்தினன் வாஸிலி ஆன்ட்ரீவிச்.

அவனுடைய 'வாரிசு' சறுக்கிகளின் மேல் நின்று வண்டியின் பின்புறத்தில் தொங்கிக் கொண்டிருந்தான். அந்தக் காட்சி அப்பனுக்குப் பெரு மகிழ்ச்சியே தந்தது. என்றுலும், 'உனக்கு உதை கொடுப்பேன். அம்மாவிடம் ஓடிப்போ, நாயே!' என்று அதட்டினன் வாஸிலி.

பையன் கீழே குதித்து விட்டான். குதிரையும் தனது மந்த கதியைத் துரிதப்படுத்தியது. சட்டென்று அடிமாற்றி, வேக ஓட்டத்தில் முனைந்தது.

வாஸிலி ஆன்ட்ரீவிச் வசித்த கிராமத்தில் ஆறு வீடுகள்தான் இருந்தன. 'திகிராஸஸ்' என்பது அதன் பெயர். அவ்வூரின் கடைசி வீடான கருமான் குடிசையைத் தாண்டியதுமே, தாங்கள் கருதியதைவிட மிகவும் கடுமையாக இருந்தது காற்று என்பதை

அவர்கள் உணர்ந்தார்கள். ரஸ்தாவைக் கண்டு பிடிப்பதே சிரமமாகத் தோன்றியது. வண்டிச் சறுக்கிகள் விடுத்துச் சென்ற தடங்கள் உடனடியாகவே பனியினுல் மூடப்பட்டன. தரையின் இதர பகுதிகளை விடக் கொஞ்சம் உயரமாக இருந்தது என்பதைக் கொண்டுதான் ரஸ்தாவை நிர்ணயிக்க முடிந்தது. வயல்களின் மீது பனிச் சூறை சுழன்றடித்தது. விண்ணும் மண்ணும் ஒன்று கூடுகிற இடம் கண்களுக்குப் புலனுகவே இல்லை. சாதாரணமாய் பளிச்சென்று தெரியக்கூடிய டெல்யாட்டின் காடு இப்பொழுது சமயா சமயங்களில் தெளிவற்றுத் தோன்றியது. ஓடிவரும் பனிப் புழுதியினூடு மங்கலாகத் தென்பட்டது அது.

காற்று இடது பக்கத்திலிருந்து அடித்தது. குதிரையின் மழமழப்பான கழுத்தின் மீதுள்ள பிடரி மயிரை ஒரே பக்கத்தில் ஓயாது தள்ளிக் கொண்டிருந்தது. அதன் மயிரடர்ந்த வால் வெறும் முடிச்சுப் போட்டுக் கட்டிவிடப் பெற்றிருந்தது. அதைக்கூட காற்று ஒரு புறமாகவே ஒதுக்கி விளையாடியது. காற்ருேட்டத்தில் உட்கார்ந்திருந்த நிகிட்டாவின் மேலங்கியின் கழுத்துப்பட்டை அவனது கன்னத்தோடும் மூக்கோடும் சேர்ந்து ஒட்டிக் கொண்டது.

'இந்த ரோடு குதிரைக்கு வசதிப்படவில்லை. ஒரே பனி மயமாக இருக்கிறது. முந்தி ஒருதடவை நான் இதே குதிரையை வைத்துக் கொண்டு பாஷுடினேவுக்கு அரைமணி நேரத்தில் போயிருக்கிறேன்' என்று சொன்னுன் வாஸிலி. தனது அருமையான குதிரையைப்பற்றி அவன் எப்பொழுதுமே பெருமைப் பட்டுக் கொள்வது உண்டு.

கழுத்துக் காலர் மூடி மறைத்து விட்டபடியால் அவன் பேச்சு நிகிட்டாவின் காதுகளில் ஏறவே இல்லை. அதனால் 'என்ன?' என்று கேட்டான் அவன்.

'ஒரு சமயம் அரைமணி நேரத்தில் நான் பாஷ்டினோ போய்ச் சேர்ந்தேன் என்றேன்' என்று ஓங்கிக்கத்தினான் வாஸிலி.

'இது அருமையான குதிரை என்பது சொல்லியா தெரியவேண்டும்!' என்றான் நிகிட்டா.

பிறகு கொஞ்ச நேரம் அவர்கள் மௌனமாக இருந்தனர். ஆனால் வாஸிலிக்கு பேசவேண்டும் என்ற துடிப்பு இருந்தது. ஆகவே அவன் அதே பெருங் குரலில் பேசத் தொடங்கினான்.

'சில்லறை வேலை செய்து பிழைக்கும் அந்த ஆளுக்கு இனி வோட்கா மது கொடுக்கக்கூடாது என்று நீ உன் மனைவியிடம் சொன்னாயா?' என விசாரித்தான் அவன். அறிவும் அந்தஸ்தும் பெற்ற தன்னைப் போன்ற பெரிய மனிதனோடு பேசுவதனால் நிகிட்டாவுக்குப் பெருமையே உண்டாகும் என்ற நம்பிக்கையோடு அவன் உரத்த குரலில் பேச்சுக் கொடுத்தான். தனது தமாஷில் தானே மகிழ்ந்து போனதால், அந்தப் பேச்சு நிகிட்டாவுக்கு திருப்தி அளிக்காது எனும் உண்மை அவன் மூளையில் புகவே இல்லை.

முதலாளியின் வார்த்தைகளை நிகிட்டா கேட்காதபடி காற்று தடுத்து விட்டது.

வாஸிலி ஆன்ட்ரீவிச் அதே கிண்டலை மீண்டும் பலத்த தொனியில் தெளிவான குரலில் சொன்னான்.

'அது அவர்களுடைய விவகாரம், வாஸிலி ஆண்ட்ரீவிச், அவர்கள் காரியங்களில் நான் தலையிடுவதில்லை. எங்கள் பையனை அவள் கொடுமைப் படுத்தாமல் இருக்கிற வரையில்—ஆண்டவன் அவர்களுக்கு அருள் புரியட்டும்' என்றான் நிகிட்டா.

'அது சரிதான்' என்று சொன்ன வாஸிலி பேச்சை மாற்றினான். 'கோடைகாலச் சந்தையில் நீ குதிரை வாங்கப் போகிறாயா?' என்று கேட்டான்.

'ஆமாம். நான் வாங்கித்தானே ஆகவேண்டும்' என்று நிகிட்டா பதிலளித்தான். அவன் தனது கழுத்துக் காலரைத் தணித்து மடக்கி விட்டான். பின்னால் எஜமான் பக்கமாகச் சாய்ந்து உட்கார்ந்தான். வரவர பேச்சு அவனுக்கும் சுவாரஸ்யமானதாகி விட்டது. அதனால் ஒரு வார்த்தையைக்கூட நழுவவிட விரும்பவில்லை அவன்.

'பையன் பெரியவனாக வளர்ந்து வருகிறான். அவனே உழுது பழக வேண்டியதுதான். இதுவரை நாங்கள் வேறொரு ஆளைக் கூலிக்கு அமர்த்தவேண்டிய அவசியம் இருந்தது' என்றான் அவன்.

'அப்படியானால், என்னிடம் மெலிந்து ஒடுங்கிப் போன குதிரை ஒன்று இருக்கிறதே, அதை நீ ஏன் வாங்கிக் கொள்ளக்கூடாது? அதற்காக நான் உன்னிடம் அதிகமான விலை எதுவும் கேட்கப் போவதில்லை' என்று வாஸிலி பலத்த குரலில் அறிவித்தான். அவனுக்கு உற்சாகம் ஏற்பட்டிருந்தது. குதிரை வியாபாரம் தான் அவனுக்குப் பிடித்தமான தொழில். அவனது மனோபலம் பூராவும் சதா இந்த விஷயத்திலேயே செலவாகி வந்தது.

வாஸிலி தன்னிடம் தள்ளிவிட விரும்பிய குதிரை எப்படிப்பட்டது என்பது நிகிட்டாவுக்குத் தெரியும். அதற்காக ஏழு ரூபிள்கள் கொடுத்தாலே அதிகம் என்றுதான் தோன்றும். ஆனால் தான் அதை முதலாளி யிடமிருந்து பெறுவதானால் தனது பேரில் இருபத் தைந்து ரூபிள்கள் பற்று எழுதப்படும். அப்புறம் அரை வருஷத்துக்கு அவன் பணம் எதுவுமே பெற முடியாமல் போய்விடும். ஆகையினால் நிகிட்டா சொன்னான்: 'இல்லை. நீங்கள் எனக்குப் பதினைந்து ரூபிள்கள் கொடுத்தால் நல்லது. நான் குதிரைச் சந்தையிலேயே ஒன்றைப் பிடித்துக் கொள்வேன்.'

'அது நல்ல குதிரை. உன்னுடைய நன்மையையும் என்னுடைய நலத்தையும் உத்தேசித்துத்தான் நான் சொல்கிறேன். மனச் சாட்சிக்குச் சரியானதையே நான் செய்வேன். யாருக்கும் தீமை புரிகிற மனிதன் அல்ல நான். நஷ்டம் என்னுடையதாகவே இருக்கட்டும். நான் மற்றவர்களைப்போல் இல்லை. இது உண்மை. நிஜமாகவே அது நல்ல குதிரைதான்' என்று அவன் கத்தினான். வாடிக்கைக்காரர்களையும் வியாபாரிகளையும் வசப்படுத்த உபயோகிக்கும் குரலில்தான் இப்பொழு தும் பேசினான் அவன்.

'ஆமாம். அது அப்படித்தான்!' என்று பெரு மூச்சு உயிர்த்தபடியே சொன்னான் நிகிட்டா. இனிமேல் கேட்டு ரசிப்பதற்கு எதுவுமில்லை என்ற உறுதி ஏற்படவும் அவன் மறுபடியும் காலரைத் தூக்கி விட்டான். உடனடியாகவே அது அவனுடைய காது களையும் முகத்தையும் மூடிக்கொண்டது.

சுமார் அரைமணி நேரம் அவர்கள் எதுவும் பேசா மலே முன்சென்றார்கள். காற்று பலமாக வீசியது.

நிகிட்டாவின் விலாப்புறத்திலும் கை அருகிலும், தோல்சட்டை கிழிந்து போயிருந்த இடங்களில் அது தாக்கியது.

'நீ என்ன நினைக்கிறாய்—நாம் காரமிஷெவோ வழியாகப் போவோமா ? அல்லது நேர் பாதையாகவே போகலாமா ?' என்று வாஸிலி கேட்டான்.

காரமிஷெவோ வழியாகச் செல்லும் பாதை அடிக்கடி போக்குவரத்து உள்ளது. அடையாளமாக இருபுறங்களிலும் உயரமான முளைகள் பாதிக்கப் பட்டிருந்தன. நேர் பாதையில் தூரம் குறைவு. ஆனால் அது அதிக உபயோகத்தில் இல்லை. ரோட்டின் ஓரங்களில் அடையாள முளைகள் கிடையாது. அப்படியே இருந்தாலும்கூட அவை பனியினால் மூடுண்டு, கண்ணுக்குப் புலனாகாதபடி மோசமான நிலையிலேயே இருக்கும்.

ஆகவே, நிகிட்டா சற்று நேரம் யோசனை செய் தான். முடிவில் 'காரமிஷெவோ வழி தூரமானதுதான், என்றாலும் அப்படிப் போவதுதான் நல்லது' என்றான்.

ஆனால், சுருக்குப்பாதை வழியே போக விரும்பிய வாஸிலி சொன்னான்: 'ஆனால் நேர் ரோடு வழியே போகும்போது, அந்தக் காட்டை அடுத்த பள்ளத்தைத் தாண்டிவிட்டால் சுலபமாகப் போக முடியுமே. பனிக்கு அடக்கமாகவும் இருக்கும்.'

'உங்கள் இஷ்டம்' என்று சொல்லிவிட்டான் நிகிட்டா.

வாஸிலி ஆன்ட்ரீவிச், தான் சொல்லிய விதமே செயல் புரிந்தான். கொஞ்ச தூரம் கடந்ததும், பாதை ஓரத்தில் அடையாளத்துக்கு நிறுத்தப்பட்டிருந்த 'ஓக்'

மரக்கட்டை ஒன்று தென்பட்டது. அதில் காய்ந்த இலைகள் இன்னும் ஒட்டிக்கொண்டு காற்றில் ஆடின. அந்த இடத்தை அடைந்ததும் வண்டியை இடது பக்கம் திருப்பினான் அவன்.

அப்படித் திரும்பியதும், அவர்கள் காற்றை எதிர்த்துச் செல்ல வேண்டியதாயிற்று. பனியும் நன்றாக விழத் தொடங்கி விட்டது. வண்டி ஓட்டிக் கொண்டிருந்த வாஸிலி, கன்னங்களை உப்பலாக்கி, மீசை வழியாக மூச்சை வெளியே விட்டான். நிகிட்டா கண்ணயர்ந்து இருந்தான்.

சுமார் பத்து நிமிஷ நேரம் அவர்கள் பேசாமல் முன்னேறினர். திடீரென்று வாஸிலி ஏதோ சொல்லத் தொடங்கினான்.

கண்களைத் திறந்து பார்த்த நிகிட்டா 'ஆங், என்னது ?' என்று கேட்டான்.

வாஸிலி பதில் சொல்லவில்லை. ஆனால் கீழே குனிந்து பின்பக்கம் கவனித்தான். பிறகு முன்னே குதிரைக்கும் அப்பால் நோக்கினான். குதிரையின் கழுத்திலும் கால்களுக்கு நடுவிலும் வேர்வை கசிந்து மயிரை உடலோடு சடைசடையாகச் சுருள வைத்திருந்தது. குதிரை மெது நடையாக அடி பெயர்த்துச் சென்றது.

'என்ன விஷயம் ?' என்று மீண்டும் விசாரித்தான் நிகிட்டா.

அவன் பேச்சைப் பழிக்கும் தொனியில் 'என்ன விஷயம்? என்ன விஷயம்?' என்று வாஸிலி கோபமாகக் கத்தினான். 'முளைகளைக் காணவே இல்லை.

நாம் ரோட்டை விட்டு விலகிவிட்டோம் என்று தெரிகிறது' என்ருன்.

'அப்படியாஞல் வண்டியை நிறுத்துங்கள். நான் தேடிப் பார்க்கிறேன்' என்று சொல்லி நிகிட்டா வண்டியிலிருந்து மெதுவாகக் கீழே குதித்தான். வைக்கோலுக்குக் கீழே இருந்த சாட்டையை எடுத்துக் கொண்டு அவன் வண்டியில் தானிருந்த பக்கத்துக்கு இடது புறமாக விலகி நடந்தான்.

அந்த வருஷம் பனி ஆழ்ந்து படிந்து விடவில்லை. ஆகவே எங்கு வேண்டுமாஞலும் நடந்து செல்வது சாத்தியமாக இருந்தது. என்ருலும் சில இடங்களில் முழங்கால் அளவுக்குப் பனி விழுந்து கிடந்தது. அதஞல் பனி அவனது பூட்ஸினுள் புகுந்தது. அவன் காலாலும் சாட்டையிஞலும் தட்டித் தடவி தரையை உணர்ந்து அங்குமிங்கும் திரிந்து பார்த்தான். பாதை தென்படவே இல்லை.

அவன் வண்டி அருகே திரும்பி வந்ததும், 'என்ன எப்படி ஆச்சு?' என்று வாஸிலி கேட்டான்.

'இந்தப் பக்கத்திலே ரோடு இல்லை. அந்தப் பக்கமாகப் போய் பார்க்கவேண்டும். இதோ நான் போகிறேன்' என்ருன் நிகிட்டா.

'அதோ அங்கே முன்ஞல் ஏதோ தெரிகிறதே! அங்கே போய் அது என்னவென்று பார்.'

அங்கே கறுப்பாகத் தோன்றியது என்ன என்று பார்க்க நிகிட்டா போஞன். மாரிக் கால ஓட் தானியம் பயிர் செய்யப்பட்டு அறுவடையாகிக் காய்ந்து கிடந்த வயல்களி லிருந்து காற்று அள்ளி வந்து பனியின்மீது சிதறி விட்டிருந்த மண்தான் அப்படித் தெரிந்தது.

அதை அறிந்த பிறகு அவன் வலது பக்கம் சென்று தேடிப் பார்த்தான். பிறகு வண்டிக்குத் திரும்பி வந்தான். கோட்டுமீது படிந்திருந்த பனியைத் தட்டி உதறினன். பூட்ஸினுள் புகுந்துவிட்ட பனியை வெளியே உலுக்கினன். மறுபடியும் வண்டியில் ஏறி உட்கார்ந்து கொண்டான்.

நாம் வலதுபுறம்தான் போகவேண்டும்' என்று அவன் தீர்மானமாகத் தெரிவித்தான். 'முன்பு காற்று நமக்கு இடது பக்கத்தில் அடித்துக் கொண்டிருந்தது. இப்போது என் முகத்துக்கு நேரே வீசுகிறது. அதனலே வண்டியை வலது பக்கமாகவே விடுங்கள்' என்று மீண்டும் திடமாக அறிவித்தான்.

அவனுடைய ஆலோசனையை ஏற்று, வாஸிலி வண்டியை வலது பக்கமாகச் செலுத்தினன். எனினும் ரோடு வரவே இல்லை. கொஞ்ச நேரம் அவர்கள் அதே திக்கில் சென்றனர்கள். காற்று எப்பொழுதும் போல் கடுமையாகத்தான் வீசியது. பனி லேசாக விழுந்து கொண்டிருந்தது.

'வாஸிலி ஆன்ட்ரீவிச், நாம் ரொம்பவும் தடம் புரண்டு தட்டுக்கெட்டுப் போனேம் என்று தெரிகிறது' என நிகிட்டா திடீரென்று குறிப்பிட்டான், ஏதோ சந்தோஷ சமாச்சாரம் சொல்வதுபோல, ஒரு இடத்தில் பனிக்கும் மேலே தலை நீட்டிக் கொண்டிருந்த உருளைக் கிழங்குக் கொடிகளைச் சுட்டிக் காட்டியவாறே அவன் 'அது என்ன ?' என்று கேட்டான்.

வேர்த்துக் கொட்டிய குதிரையை நிறுத்தினன் வாஸிலி. மூச்சு வாங்கியதனல் அதன் விலாப்புறங்கள் விம்மித் தணிந்து கொண்டிருந்தன.

'அது என்ன ?'

'அட, நாம் ஸக்கரோவ் நிலத்தின் மேல் நிற்கிறோம். நாம் எங்கே வந்து விட்டோம் பாருங்கள்!' என்றான் நிகிட்டா.

'பிதற்றல்!' என்று எரிந்து விழுந்தான் வாஸிலி.

'பிதற்றல் இல்லை, வாஸிலி ஆன்ட்ரீவிச். இது தான் உண்மை. வண்டி உருளைக்கிழங்கு வயல்மீது சறுக்கிச் செல்வதை நீங்கள் உணரலாம். இங்கே கொண்டுவந்து போடப்பட்ட உருளைக் கிழங்குக் கொடிகள் தான் அதோ குவியல் குவியலாகக் கிடக்கின்றன. ஸக்கரோவ் தொழிற்சாலை நிலம்தான் இது என்று நிகிட்டா விளக்கினான்.

'அட பாவமே, நாம் எவ்வளவு வழி விலகி வந்து விட்டோம்! இனி நாம் என்ன செய்வது ?' என்றான் வாஸிலி.

'நாம் நேரே போக வேண்டியது. அவ்வளவுதான். எங்காவது ஒரு இடத்தில்—ஸக்கரோவாவில் இல்லா விட்டால் நிலச் சொந்தக்காரர் பண்ணை அருகில் வெளியேறி விடலாம்.'

நிகிட்டா கூறியதை ஏற்றுக்கொண்டு வாஸிலி அவ்விதமே வண்டியை ஓட்டினான். இப்படி வெகு நேரம் பிரயாணம் செய்தார்கள் அவர்கள். சில சமயம் அவர்கள் வெறும் வயல்கள்மீது செல்ல நேர்ந்தது. அப்போதெல்லாம் நெடுகிலும் பனி மூடிக் கிடந்த மண் கட்டிகள் மேலாக வண்டியின் சறுக்கிகள் இழுபட்டு, கடகட ஓசை எழுப்பிச் சென்றன. சில வேளைகளில் மாரிக்காலத்துப் பயிர் வயல் எதன் வழியாகவேனும், அல்லது தரிசு வயல் மேலாகவாவது போக நேரிட்டது.

அங்கெல்லாம் மரக்கட்டைகள் அல்லது பயிர்த் தாள் கள் பனியைக் கிழித்துக்கொண்டு எட்டிப் பார்ப் பதையும், அடிக்கடி அவை காற்றில் அசைந்தாடு வதையும் அவர்கள் காண முடிந்தது. சில சமயங் களில், ஆழமாகத் தேங்கி, பரவலாக விரிந்து கிடந்த பனிமீது சென்றூர்கள். அந்த இடங்களில் எதுவுமே பார்வையில் பிடிபடவில்லை.

மேலே இருந்து பனி பெய்து கொண்டிருந்தது. வேளா வேளைகளில், கீழே இருந்து கிளம்பி எழுந்தது. குதிரை களைப்பால் ஓய்ந்து போனது நன்கு புலனு யிற்று. அதன் ரோமம் பூராவும் வேர்வையால் சுருண்டு, முரட்டுப் பனியினுல் மூடப்பட்டிருந்தது. அது மெது நடையிலேயே சென்றது. திடீரென அதற்குக் கால் இடறியது. வாறுகாலிலோ அல்லது ஏதோ நீரோடும் காலிலோ அது உட்கார்ந்து விட்டது.

வாஸிலி ஆன்ட்ரீவிச் குதிரையை நிறுத்த விரும் பிஞன். ஆனல் நிகிட்டா கூச்சலிட்டான்.

‘நிறுத்துவானேன்? நாம் எதனுள்ளோ அகப் பட்டுக் கொண்டோம். வெளியே போயாக வேண்டும். ஹேய், அன்பே! ஏ அரசே! மேலே போ அப்பா, கண்மணியே!’ என்று உற்சாகமான குரலில் குதிரைக்கு உபதேசித்தான் அவன். வண்டியிலிருந்து வேகமாகக் குதித்து அவனும் சாக்கடையில் அகப் பட்டுக் கொண்டான்.

குதிரை முண்டி முயன்றது; முன்னேறியது. உறைந்து போய்க் கிடந்த கரைமீது ஏறிவிட்டது. அந்த இடத்தில் வெட்டி விடப்பட்டிருந்த கழிவு நீரோடைதான் அது என்பது தெளிவாகப் புரிந்தது.

'இப்ப நாம் எங்கே இருக்கிறோம்?' என்று வாஸிலி கேட்டான்.

'சீக்கிரமே கண்டுபிடித்து விடலாம். வண்டியை விடுங்கள். எங்கேயாவது போய்ச் சேருவோம்' என்று பதிலளித்தான் நிகிட்டா.

'ஏன்! இதுதான் கோர்யாச்கின் காடு' என்று வாஸிலி கூவினான். அவர்களுக்கு முன்னால் பனிக்கு மத்தியில் கறுப்பாகத் தெரிந்த எதையோ சுட்டிக் காட்டினான் அவன்.

அது எந்தக் காடு என்பது நாம் அங்கே போய்ச் சேர்ந்ததும் தெரிந்துவிட்டுப் போகிறது' என்றான் நிகிட்டா.

அவர்கள் கண்ட கறுப்பு வஸ்துவின் பக்கத்தில், வில்லோ மரத்தின் நீண்ட இலைகள் காய்ந்து காற்றில் அடிபட்டுத் தொங்கிக் கொண்டிருப்பதையும் அவன் பார்த்தான். ஆகவே அது ஒரு குடியிருப்பு தானே தவிரக் காடு அல்ல என்பதை அவன் அறிந்து கொண்டான். ஆயினும் அதை வெளியிட அவன் விரும்பவில்லை.

அந்தக் கழிவு நீர் ஓடையைத் தாண்டி இருபத்தைந்து கஜங்கள் கூடப் போயிருக்க மாட்டார்கள். அதற்குள்ளாகவே அவர்களுக்கு முன்னே சில உருவங்கள்—மரங்கள் என்று தோன்றியது—கறுப்பாக நின்றன. புதுரகமான சோகமய ஒலி ஒன்றும் அவர்கள் காதுகளில் விழுந்தது. நிகிட்டா நினைத்தது சரிதான். அது காடு அல்ல. நெடிய வில்லோ மரங்களின் வரிசைதான். இன்னும் உதிராமல் ஒட்டிக் கொண்டிருந்த கொஞ்சம் இலைகள்தான் காற்றிலே சரசரத்து ஆடின.

அறுப்புக்களம் ஒன்றைச் சுற்றிலும் உள்ள வாறுகால் ஓரமாக அம் மரங்கள் நடப்பட்டிருந்தன என்று தெரிந்தது.

காற்றிலே துயரஒலி முனங்கி நின்ற வில்லோ மரங்களுக்கு அருகாமையில் வந்த உடனே குதிரை, சறுக்கு வண்டியைவிட உயர்ந்த மேட்டில் தனது முன் கால்களை அழுத்தமாக ஊன்றிக் கொண்டு பின்கால்களை உயர்த்தி இழுத்தது. அதன் மூலம் வண்டி உயரமான பரப்பைச் சேர்ந்தது. பிறகு குதிரை இடப் புறம் திரும்பி நடந்தது. அப்புறம் அதன் கால்கள் முழங்கால் அளவு பனியில் இறங்கி விடவில்லை.

அவர்கள் திரும்பவும் ஒரு ரஸ்தாவுக்கு வந்து விட்டார்கள்.

'ஆகா. இதோ நாம் வந்து விட்டோம். ஆனால் எங்கே இருக்கிறோம் என்பது கடவுளுக்குத்தான் வெளிச்சம்!' என்றான் நிகிட்டா.

ஓடும் பனியினூடே, ரோடு வழியாகவே, குதிரை முன்னேறிச் சென்றது. அவர்கள் மேலும் நூறுகஜ தூரம் போவதற்குள்ளாகவே களஞ்சியம் ஒன்றின் சுவர்—மரக்கிளைகள், குச்சிகளால் ஆனது—கறுப்பாக எழுந்து நின்றது கண்முன்னலே. அதன் கூரை முழுவதும் பனியினால் கனமாக மூடப்பட்டிருந்தது. அதிலிருந்து பனி வழுகிக் கீழே விழுந்து கொண்டேயிருந்தது. அந்தக் களஞ்சியத்தைக் கடந்ததும் ரோடு காற்று வீசிய திசை நோக்கித் திரும்பியது. ஆகவே அவர்கள் பனிஓட்டம் ஒன்றினுள் புகுந்து செல்லவேண்டிய அவசியம் ஏற்பட்டது.

அவர்களுக்கு முன்னே இருபுறமும் வீடுகள் கொண்ட சிறிய தெரு ஒன்று காணப்பட்டது. இதிலிருந்து, பனி ரஸ்தாவின் குறுக்கே அடித்து வரப்பட்டது என்றும், அதனுலேயே அவர்கள் பனி ஓட்டத்தில் புகுந்து புறப்பட வேண்டியதாயிற்று என்றும் தோன்றியது. உண்மையும் அதுதான்.

பனியில் புகுந்து கடந்த பிறகு அவர்கள் ஒரு தெருவை அடைந்தார்கள். ஊரின் கடைசியிலிருந்த ஒரு வீட்டில், கொடி ஒன்றில் தொங்கிய துணிகள் சில—சிவப்புச் சட்டை ஒன்று, வெள்ளைச் சட்டை ஒன்று, கால் சட்டைகள், கால்பட்டைகள், ஒரு பாவாடை ஆகியவை—பனியில் உறைந்து காற்றில் வெறி ஆட்டம் போட்டுக்கொண்டிருந்தன. முக்கியமாக அந்த வெள்ளைச் சட்டை தனது கைகளை வீசி வீசி மூர்க்கமாகப் போராடிக் கொண்டிருந்தது.

'இங்கே பாரேன். எவளோ ஒரு சோம்பேறி அம்மாள் அல்லது செத்துத் தொலைந்தவள் பண்டிகைக்கு முன்னுடியே தனது உடுப்புகளை எடுத்து வைக்காமல் இருந்துவிட்டாளே' என்று நிகிட்டா, காற்றில் அலைபடும் சட்டைகளைப் பார்த்துக்கொண்டே பேசினுன்.

## 3

தெரு முனையில் இன்னும் காற்று வெகுண்டு வீசிக் கொண்டு தானிருந்தது. ரோடு கனத்த பனிப் போர்வை அணிந்து கிடந்தது. ஆனுல் ஊருக்குள்ளே அமைதியும் ஆனந்தமும் கதகதப்பும் நிலவின. ஒரு வீட்டில் நாய் ஒன்று குறைத்துக் கொண்டிருந்

தது. வேருெரு வீட்டருகே, தனதுமேல் சட்டையை இழுத்து தலையை மூடிக்கொண்டு எங்கிருந்தோ ஓடி வந்து மாது ஒருத்தி ஒரு குடிசையின் வாசலினுள் நுழைந்தாள். உள்ளே செல்வதற்கு முன்னதாக அவள் வாசல்படியில் நின்று, தெருவில் செல்லும் வண்டியைக் கவனித்தாள். ஊருக்கு மத்தியில் பெண்கள் பாடுகிற குரல் காற்றில் மிதந்து வந்தது.

இந்த ஊரில் காற்றும் பனியும் குறைவு என்றே தோன்றியது. உறைபனியும் கடுமையாக இல்லை.

'அட, இது கிரிஷ்கினே அல்லவா!' என்ருன் வாஸிலி.

'அதே தான்' என்று நிகிட்டா ஆமோதித்தான்.

அந்த ஊர் கிரிஷ்கினேதான். அப்படியாளுல், அவர்கள் இடது பக்கத்தில் வெகுவாக விலகிப்போய் ஆறுமைல் தூரம் பிரயாணம் செய்திருக்கிருர்கள் என்றுதான் அர்த்தம். அவர்கள் போகவேண்டிய திசையிலே பிரயாணம் செய்யவில்லைதான். ஆனுலும் முடிவாக அடையவேண்டிய இடத்தை நோக்கியே சென்ருர்கள் என்பதும் விளங்கியது. கிரிஷ்கினேவி லிருந்து கோர்யாச்கினுக்கு இன்னும் நான்கு மைல் தூரம் இருந்தது.

ஊர் நடுவே அவர்கள் நெட்டையான மனிதன் ஒருவன்மேல் மோதத் தெரிந்தார்கள். அவன் பாதை யின் மத்தியில் நடந்து வந்தான். குதிரையை நிறுத் தியபடி 'நீங்கள் யார்?' என்று கூப்பாடு போட்டான் அவன். வாஸிலி ஆன்ட்ரீவிச்சை இனம் கண்டு கொண்டதும் அவன் குதிரையின் பக்கமாகவே நடந்து, வண்டியை அணுகி, வண்டி ஓட்டி உட்காருகிற பீடத் தின் மீது ஏறி அமர்ந்து விட்டான்.

அவன் தான் ஐஸே. வாஸிலிக்குப் பழக்கமான ஒரு விவசாயி. அந்த வட்டாரத்தில் முக்கியமான குதிரை திருடி என்ற கீர்த்தியும் பெற்றிருந்தான் அவன்.

'ஆ, வாஸிலி ஆன்ட்ரீவிச்! எங்கே ஐயா கிளம்பி விட்டீர்?' என்று விசாரித்தான் ஐஸே. அவன் குடித்திருந்த வோட்கா மதுவின் நாற்றம் நிகிட்டாபேரில் கவியும்படி பேசினான் அவன்.

'நாங்கள் கோர்யாச்கினுக்குப் போகலாமென்று கிளம்பினோம்.'

'எங்கே வந்து சேர்ந்திருக்கிறீர்கள் என்பது தெரிந்ததா? நீங்கள் மோல்ஷனேவ்கா வழியாகப் போயிருக்க வேண்டும்.'

'போயிருக்க வேண்டியதுதான். ஆனால் தவறி விட்டோம்' என்று சொல்லி வாஸிலி குதிரையை இழுத்துப் பிடித்தான்.

'இது அருமையான குதிரை' என்றான் ஐஸே, கள்ளப் பார்வையால் குதிரையைக் கவனித்தபடியே அதன் மயிரடர்ந்த வாலில் அவிழ்ந்து தளர்ந்திருந்த முடிச்சைத் தூக்கி இறுக்கினான். அச்செயலில் பழக்கத்தினால் தேர்ந்த லாகவம் வெளிப்பட்டது.

'இராத்திரி இங்கேயே தங்கப் போகிறீர்களா?' என்று அவன் கேட்டான்.

'இல்லை, நண்பரே. நான் போயாக வேண்டும்' என வாஸிலி அறிவித்தான்.

'அப்போ ரொம்பவும் அவசரமான வேலையாகத்தான் இருக்கும். இது யார்? ஆ, நிகிட்டா ஸ்டீபனிச் தானா!'

'வேறே யாரு ?' என்ருன் நிகிட்டா. 'அது சரி. மறுபடியும் நாங்கள் வழிமாறிப் போகாமல் இருப்ப தற்கு என்ன செய்யலாம் ?' என்று கேட்டான்.

'இங்கே எங்கே வழிதப்பிப் போய்விட முடியும் ? இப்படியே திரும்பி இந்தத் தெருவோடு நேரே போங் கள். ஊருக்கு வெளியே போனதும் நேராகப் போய்க் கொண்டே இருக்கவேண்டியதுதான். இடது பக்கம் திரும்பக் கூடாது. அப்படிப்போனல் பெரிய ரஸ்தா வந்துசேரும். அங்கே போனதும் வலது புறமாகத் திரும்பிவிட வேண்டியதுதானே !'

'பெரிய ரஸ்தாவில் எந்த வழியில் திரும்ப வேணும் ? கோடைகாலத் தடத்திலா ? இல்லே, குளிர் காலத்து வழியிலா ?' என்று நிகிட்டா விசாரித்தான்.

'குளிர்காலத்து வழியில்தான். அங்கே திருப்பிய உடனேயே சில புதர்கள் உங்கள் பார்வையில் படும். அவற்றுக்கு எதிரே ஒரு வழிகாட்டி உண்டு. பெரிய ஓக் மரத்திஞல் ஆனது. அதில் பல கிளைகள் இருக் கும். அங்கே வழியைக் கண்டுகொள்ளலாம்.'

வாஸிலி குதிரையைத் திருப்பி வண்டியை ஊரின் எல்லேப்புறமாக ஓட்டிஞன்.

பின்தங்கி விட்ட ஐஸே கத்திஞன் 'ராத்திரிப் பொழுதை நீங்கள் ஏன் இங்கேயே கழிக்கக்கூடாது ?' என்று.

ஆஞல் வாஸிலி பதில் பேசாமலே குதிரையை முடுக்கிஞன். நல்ல ரஸ்தாவில் நான்கு மைல் தூரம். அதிலும் இரண்டு மைல் காட்டுக்கு நடுவிலே போகி றது. ஆகவே சுலபமாகச் சமாளித்து விடலாம். மேலும், காற்று அடங்கிப்போனதுபோல் தோன்றியது.

பனியும் நின்று விட்டது. இவ்விதம் அவன் நினைத் தான்.

இங்கும் அங்குமாக விழுந்து கிடந்த புதிய கழிவு களினுல் கறுப்பாகத் தோன்றிய தெரு வழியாக, தடம் பட்ட பாதையோடு, வண்டி சென்றது. கொடியில் தொங்கி ஆடிய உடைகள் காணப்பட்ட முற்றத்தைத் தாண்டியது அது. அவ் வுடுப்புகளில் வெள்ளைச் சட்டை கட்டு அவிழ்த்துக் கொண்டு ஒற்றைக் கையி ளுல் தொங்கிக் கிடந்தது. வில்லோமரங்கள் சோக கீதம் இசைத்து நின்ற இடத்துக்கு மறுபடியும் அவர் கள் வந்து சேர்ந்தார்கள். மீண்டும் வயல்கள் மீது போனுர்கள். புயல், நின்றுவிடுவதற்கு மாருக, அதிக வலுப் பெற்று வீசியதாகத்தான் தோன்றியது. ஓடும் பனியினுல் ரோடு முற்றிலும் மூடி மறைக்கப் பட்டுவிட்டது. அங்கங்கே காணப்பட்ட முளைக்குச்சி கள் தான் அவர்கள் வழிதவறிச் செல்லவில்லை என் பதைக் காட்டி நின்றன. ஆனுல் போகப்போக முளை களைக் கண்டுபிடிப்பது கூட லேசான வேலையாகத் தென்படவில்லை. காரணம், அவர்கள் முகத்திலே காற்று தாக்கியது தான்.

வாஸிலி ஆன்ட்ரீவிச் கண்களைக் குறுக்கிக் கொண்டு, தலையைக் கீழே சாய்த்து, வழி ஓரத்து அடையாளங்களைத் தேடிக்கொண்டிருந்தான். ஆயி னும் அவன் முக்கியமாக அந்தக் குதிரையின் மதிநுட் பத்தையே நம்பியிருந்தான். அதனுல் அது போகிற போக்கிலேயே போகட்டும் என்று விட்டுவிட்டான்.

உண்மையில் குதிரை வழிதவறி விடாமலே நடந் தது. ரஸ்தாவின் வளைவு நெளிவுகளை உணர்ந்து வலது புறம் திரும்பியும், அடுத்து இடதுபக்கம் திரும்பி

யும், கால்களால் தடவிப் பாதையை அறிந்தும் நடந்தது அது. ஆகையினால், பனி கனமாகப் பெய்து காற்று வலுவாக அடித்த போதிலும், அவர்கள் அடையாள முளைக் கம்புகளை ஒரு தடவை தங்களுக்கு இடது பக்கத்திலும், அடுத்தாற்போல் வலது புறத்திலும் மாறி மாறித் தொடர்ச்சியாகக் காணமுடிந்தது.

இப்படி அவர்கள் பத்து நிமிஷ நேரம் பிரயாணம் செய்திருப்பார்கள். சாய்வான திரைபோல் மறைத்துக் கிடந்த பனிப் படலத்தின் ஊடாகத் திடீரென்று கறுப்பாக ஏதோ புலப்பட்டது. அது குதிரைக்கு முன்னால் ஊர்ந்து கொண்டிருப்பதாகத் தெரிந்தது.

அவர்களைப் போன்ற பிரயாணிகள் இருந்த மற்றுமொரு சறுக்கு வண்டிதான் அதுவும் என்பது தெளிவாயிற்று. குதிரை அவர்களைக் கடந்து போக முயன்றது. முன்னாலிருந்த வண்டியின் பின்பக்கத்தில் தனது குளம்புகளால் அறைந்தது அது.

'போங்க போங்க!....யார் அங்கே? .... முன்னால் போங்க!'—அவ் வண்டியிலிருந்து குரல்கள் கூவின.

அந்த வண்டியைக் கடந்து செல்வதற்காக வாஸிலி குதிரையை விலக்கி ஓட்டினான். அதில் மூன்று ஆண்களும் ஒரு பெண்ணும் இருந்தார்கள். எங்கோ விருந்துக்குப் போய்விட்டு வீடு திரும்புகிறவர்கள் என்பது நன்றாகப் புரிந்தது. அவர்களில் ஒரு குடியானவன், சின்னக் குதிரையின் பனி மூடிய பின் பக்கத்தை நீண்ட சவுக்கினால் அடித்து ஓசை எழுப்பிக் கொண்டே இருந்தான். வண்டியின் முன்னாலிருந்த மற்ற இரண்டு பேரும் தங்கள் கைகளை ஆட்டி ஆட்டி ஏதோ கூச்சலிட்டார்கள். நன்றாகப் போர்த்து மூடப்

பட்டிருந்த ஸ்திரீயின் மேல் பூராவும் பனி படிந்து விட்டது. அவள் தூக்கக் கிரக்கத்தினால் ஆடி அடி பட்ட வண்ணமிருந்தாள்.

‘நீங்கள் யார் ?’ என்று கத்தினான் வாஸிலி.

‘ஆ-ஆ....’ என்ற ஒலி மட்டும் தான் காதில் விழுந்தது.

‘நீங்கள் எங்கிருந்து வருகிறீர்கள் என்று கேட்டேன்.’

‘ஆ-ஆ-ஆ’ என்று தன் பலம் கொண்ட மட்டும் ஓங்கிக் கூவினான் ஒருவன். ஆனாலும் அவர்கள் யார் என்பதைக் கேட்டுப் புரிந்துகொள்ள இயலவில்லை.

‘முன்னே போ ! தொடர்ந்து போ!’ என்று கூச்சலிட்டபடியே வேறொருவன் சவுக்கினால் ஓயாமல் குதிரையை அடித்துக்கொண்டே யிருந்தான்.

‘விருந்து முடிந்து திரும்பி வருகிறீர்கள், இல்லையா ?’

‘போ, போ ! வேகமாக விடு, சைமன் ! முன்னாலே ஓட்டு ! இன்னும் வேகமாக !’

இரண்டு வண்டிகளின் ஓரப் பகுதிகளும் ஒன்றோடு ஒன்று முட்டிக் கொண்டன. மோதிப் பிணைந்து விடுவன போல் தோன்றின. ஆயினும், பிரிந்து விலகி விட்டன. குடியானவர்களின் வண்டி பின் தங்கலாயிற்று.

ரோமம் பற்றி வயிறு தள்ளிப் போயிருந்த குதிரையின் மேனி முழுவதும் பனி விழுந்து கிடந்தது. தணிவான சட்டங்களிடையே பூட்டப்பட்டிருந்த அந்தக் குதிரைக்கு மூச்சுத் திணறியது. அது தனது

இறுதி வலு முழுவதையும் பிரயோகித்து அவ் வண்டியை இழுப்பதாகத் தோன்றியது. சவுக்கி லிருந்து தப்புவதற்கு வீணுகப் பாடுபட்ட அக் குதிரை தனது குட்டைக் கால்களினுல் இழுத்து இழுத்து நடந்தது. அதன்மூலம், ஆழ்ந்து படிந்து கிடந்த பனியைத் தனக்கு அடியிலேயே தள்ளிக் கொண்டு அவதியுற்றது அது. அதன் நீண்ட மூஞ்சி இளமை யாகக் காணப்பட்டது அதன் கீழ் உதடு மீனுக்கு உள்ளது போல் மேல் நோக்கிப் படிந்திருந்தது. நாசிகள் விலகி விலகி இருந்தன. அதன் காதுகள் பயத்திஞல் ஒடுங்கிக் கிடந்தன. அந்த முகம் கொஞ்ச நேரம் நிகிட்டாவின் தோளருகே வந்தது; பிறகு பின்னுக்குப் போய்விட்டது.

'மது என்ன வேலை பண்ணுகிறது பாரேன்! அவர்கள் அந்தச் சின்னக் குதிரையைச் சாகடித்து விட்டார்களே. வெறியர்கள்!' என்று நிகிட்டா சொன்னுன்.

அந்தச் சிறிய குதிரையின் பெருமூச்சும், குடியான வர்களின் குடிவெறிக் கூச்சலும் சில நிமிஷ நேரம் அவர்கள் காதுகளில் விழுந்தன. பிறகு நெடு மூச்சும் கூச்சலும் தூரத்திலே கரைந்து போயின. அப்புறம் அங்கே சுற்றிலும் வேறு எதையும் அவர்கள் கேட்க முடியவில்லை காற்றின் வீச்சொலிதான் அவர்கள் காதுகளைத் தாக்கியது. காற்றில் அடிபட்டு உறைபனி நீங்கிக் கிடந்த ரோட்டுப் பகுதி எதிலாவது வண்டியின் சறுக்கிகள் உராய்ந்து எழுப்பிய ஓசையும் அவ்வப் போது கேட்டுக் கொண்டிருந்தது.

இந்தச் சந்திப்பு வாஸிலிக்கு உற்சாகமும் உத் வேகமும் அளித்து விட்டது. ஆகவே அவன் அடை

யாள முளைகளைப் பற்றி அக்கறை கொள்ளாமல், முன்னிலும் துணிகரமாக வண்டியை ஓட்டினான். குதிரையின் திறமையில் நம்பிக்கை வைத்து அதை விரட்டினான்.

நிகிட்டா செய்தாக வேண்டியது எதுவுமில்லை. அதனால் அவன் தூங்கலானான். பொதுவாக இந்த மாதிரிச் சந்தர்ப்பங்களில் இப்படிச் செய்வதுதான் அவனது வழக்கம். போதுமானபடி தூங்குவதற்குக் கிடைக்காத காலத்தை அவன் இவ்விதம் சரிக்கட்டி விடுவான்.

சடக்கென்று குதிரை நின்றுவிட்டது. அதனால் நிகிட்டா மூக்கில் அடிபடும்படி முன்நோக்கி விழுந்தான்.

'விஷயம் தெரியுமா, நாம் மறுபடியும் வழியை விட்டு விலகிவிட்டோம்' என்று வாஸிலி அறிவித்தான்.

'அது எப்படித் தெரிந்தது ?'

'ஏன், முளைக்கம்புகளைக் காணவே காணோமே! நாம் திரும்பவும் ரஸ்தாவை விட்டு விலகி வந்திருக்கத் தான் வேண்டும்.'

'அப்ப சரி. நாம் ரோட்டை தவறவிட்டு விட்டோமென்றால், கட்டாயம் தேடி ஆக வேண்டியது தான்' என்று வெடுக்கெனச் சொல்லிவிட்டு நிகிட்டா வண்டியிலிருந்து வெளியே இறங்கினான். புருக்கால் மாதிரி விரல்கள் அமைந்திருந்த கால்களை மெதுவாக ஊன்றி அவன் மீண்டும் பனிப்பரப்பு மீது அங்குமிங்குமாக அலையத் தொடங்கினான். கொஞ்ச நேரம் கண்ணுக்குத் தெரியாமல் மறைந்தும், பிறகு பார்வையில் பட்டும்

அவன் நெடுநேரம் தேடித் திரிந்தான். கடைசியாக அவன் திரும்பி வந்தான்.

'இங்கே ரஸ்தா எதுவும் இல்லை. ரொம்ப தூரத்துக்கு அப்பால் இருந்தாலும் இருக்கலாம்' என்று சொல்லி, அவன் வண்டியில் ஏறிக்கொண்டான்.

இந்த நிலையில், இருள் வேறு பரவிக்கொண்டிருந்தது. பனிப்புயல் அதிகரிக்கவில்லை. ஆனால் அடங்கி விடவுமில்லை.

'அந்தக் குடியானவர்களின் குரலை மட்டும் கேட்க முடியுமானால்....' என்றான் வாஸிலி.

'அவர்கள் நம்மை எட்டிப் பிடிக்கவில்லை. நாம் ரொம்ப தூரம் விலகி வந்திருக்க வேண்டும். அல்லது, ஒருவேளை அவர்களும் வழிதவறிப் போயிருக்கலாம்' என்று நிகிட்டா சொன்னான்.

'அப்படியானால் நாம் எங்கே போவது ?'

'ஏன், குதிரையை அதன் போக்கிலேயே போக விட வேண்டியது தான். அது நம்மை சரியான வழியில் கொண்டு சேர்க்கும். வார்களை என்னிடம் கொடுங்கள்' என்றான் நிகிட்டா.

வாஸிலி ஆன்ட்ரீவிச் கடிவாள வார்களை நிகிட்டாவிடம் கொடுத்துவிட்டான் மிகுந்த மனதிருப்தியுடன் தான். ஏனென்றால் அவனது கைகள் தடித்த உறைகளுக்குள் இறுகிப்போவது போன்ற உணர்ச்சி அவனுக்கு ஏற்பட்டிருந்தது.

நிகிட்டா வார்களைக் கைப்பற்றினான். ஆனால் சும்மா பிடித்தபடி வைத்திருந்தான். அவற்றை அசைக்காமலிருக்கவே அவன் முயற்சித்தான். தனது அபி

மானக் குதிரையின் அறிவாற்றல் மீது அவனுக்குப் பெரும் மகிழ்வு உண்டாயிற்று. உண்மையில் அந்தக் குதிரை நுண்ணறிவு உடையதுதான். அது முதலில் ஒரு காதைத் திருப்பியது. பிறகு மறுகாதைத் திருப் பியது. முதலில் ஒரு திக்கிலும், பிறகு வேறொரு பக்கமும் திருப்பியது. உடனே வளையமிட்டுத் திரும்பத் தொடங்கியது அது.

'இதனால் செய்ய முடியாத ஒரே காரியம், பேசு வது தான். அது என்ன செய்கிறது என்று பாரேன். போ, போ. உனக்குத் தான் நன்றாகத் தெரியும். அப் படித்தான், அப்படித்தான்!' என்று அவன் சொல்லிக் கொண்டே யிருந்தான்.

இப்போது காற்று பின்னாலிருந்து அடித்தது. கொஞ்சம் வெதுவெதுப்பாகவும் இருந்தது.

'ஆமாம். இது புத்திசாலி தான்' என்று நிகிட்டா குதிரையை வியந்து பேசுவதைத் தொடர்ந்தான்: 'கிர்கிஷ் குதிரை வலிமை அதிகம் உள்ளது. ஆனால் முட்டாள்தனமானது. ஆனால் இந்தக் குதிரை— அது காதுகளினாலே என்ன வேலை பண்ணுகிறது பாருங் களேன்! அதுக்கு தந்தி எதுவுமே தேவை யில்லை. ஒரு மைலுக்கு அப்பால் உள்ளதையும் உணர்ந்து விடும்.'

மேலும் அரைமணி நேரம் கழிவதற்குள்ளாகவே அவர்கள் தங்களுக்கு எதிரே ஏதோ—காடோ, கிராமமோ—கறுப்பாகத் தென்படுவதைக் காண முடிந் தது. முளைகள் மறுபடியும் வலது பக்கத்தில் தலை காட்டின. ஆகவே, அவர்கள் ரஸ்தா மீது வந்து சேர்ந்துவிட்டார்கள் என்பது நிச்சயமாயிற்று.

'என்ன இது, மறுபடியும் கிரிஷ்கினே தானே!' என்று நிகிட்டா ஆச்சர்யத்தோடு கூவினன்.

ஆமாம். அதோ அங்கே அவர்களுக்கு இடது புறத்தில் அதே களஞ்சியம். அதன் கூரையிலிருந்து பனி பறந்துகொண்டிருந்தது. அதே சார்பில் இன்னும் கொஞ்சம் தள்ளி, பனியில் உறைந்து தொங்கிய சலவைத் துணிகள்—சட்டைகளும், கால்சட்டைகளும்—காற்ருேடு மூர்க்கமாகப் போராடிப் படபடத்துக் கொண்டிருந்தன.

மறுபடியும் அவர்கள் தெருவினுள் பிரவேசித்தார்கள். மீண்டும் அமைதியும் வெம்மையும் உற்சாகமும் ஏற்பட்டன. கழிவுப் பொருள்களால் கறைபட்டுக் கிடந்த வீதியைத் திரும்பவும் பார்த்தார்கள். பேச்சுக் குரல்களையும், பாட்டுக்களையும், ஒற்றை நாயின் குரைப்பையும் மீண்டும் கேட்டார்கள். இதற்குள் இருட்டு அதிகமாகி யிருந்ததால், சில ஜன்னல்களில் விளக்கொளி தெரிந்தது.

ஊரில் பாதி தூரம் போனதும், அங்கே விசாலமான முகப்புடன் நின்ற செங்கல் கட்டிட வீடு ஒன்றை நோக்கிக் குதிரையைத் திருப்பினன் வாஸிலி ஆன்ட்ரீவிச். முன் வாசலை அணுகியதும் வண்டியை நிறுத்தினன்.

விளக்கொளி திகழ்ந்த, பனி படர்ந்த, ஜன்னலருகே போனன் நிகிட்டா. பறக்கும் பனிக்கீற்றுகள் விளக்கொளியின் கதிர்கள் பட்டு மினுமினுத்தன.

அவன் ஜன்னல் மீது சாட்டையால் தட்டினன்.

தட்டுதலுக்கு எதிர்க் குரலாக 'யார் அங்கே?' என்ற கேள்வி புறப்பட்டது.

'கிரெஸ்டியிலிருந்து வருகிறோம்....வாஸிலி............ கொஞ்சம் வெளியே வந்து பாருங்களேன்' என்று நிகிட்டா பேசினான்.

ஜன்னலுக்குப் பின்னாலிருந்து யாரோ நகர்ந்தார் கள். இரண்டொரு நிமிஷம் கழிந்ததும், நடை பாதை யின் வாசற் கதவு திறக்கப்படும் ஓசை வந்தது. பிறகு வெளிக்கதவின் தாழ்ப்பாள் திறந்த சத்தம் கேட்டது. வெள்ளைத் தாடி உடைய நெட்டைக் குடியானவன் ஒருவன் வெளியே எட்டிப்பார்த்தான். கதவு காற் றுக்கு எதிராகத் திறந்து நிற்கும்படி அழுத்திப் பிடித் துக்கொண்டு வெளியில் வந்தான் அவன். பண்டிகைக் காக அணிந்திருந்த வெள்ளைச் சட்டையின் மீது ஆட்டுத்தோல் மேல்சட்டை ஒன்றை அவன் போட் டிருந்தான். அவனுக்குப் பின்னால் சிவப்புச் சட்டை யும் பெரிய தோல் பூட்ஸும் தரித்திருந்த சிறுவன் ஒருவன் வந்தான்.

'ஆன்ட்ரீவிச், நீ தானா அது?' என்று அந்த வயோதிகன் கேட்டான்.

'ஆமாம், நண்பரே. நாங்கள் வழியைத் தவற விட்டுவிட்டோம். கோர்யாச்கின் போய்ச் சேருவதற் காகப் புறப்பட்டோம். ஆனால் இங்கே வந்து சேர்ந் தோம். இரண்டாவது முறையாகப் புறப்பட்டுப் போனோம். திரும்பவும் வழிதவறி விட்டோம்' என்று வாஸிலி சொன்னான்.

'வழியை விட்டுவிட்டு எப்படியெல்லாம் திரிந் திருக்கிறீர்கள் பார்த்தீர்களா!' என்றான் கிழவன். சிவப்புச் சட்டை அணிந்திருந்த சிறுவனிடம் அவன் சொன்னான், 'பெட்ருஷ்கா! போய் வாசலை விரியத்திற' என்று.

'சரி' என்று சிறுவன் உற்சாகமாகக் கத்திவிட்டு நடைபாதையை நோக்கி ஓடினான்.

'ஆனால் நாங்கள் ராத்திரி இங்கே தங்கப் போவதில்லை' என்று வாஸிலி தெரிவித்தான்.

'பின்னே இருட்டில் எங்கே போவீர்கள்? இங்கேயே தங்கிவிடுவது தான் நல்லது.'

'தங்குவதற்கு எனக்கும் ஆசை தான், ஆனால் நான் போயாக வேண்டுமே. அவசரமான தொழில் விஷயம். அதைத் தவிர்ப்பதற்கில்லை.'

'அப்ப சரி சூடாக ஏதேனும் சாப்பிட்டு விட்டாவது போங்கள். ஸமோவார் இப்பதான் தயாராயிற்று.'

'சூடாகச் சாப்பிடுவதா? உம். அதைச் செய்யலாம் தான்' என்று வாஸிலி கூறினான். 'இருட்டு ஒன்றும் அதிகமாகிவிடாது. நிலா வந்து விடும். அப்புறம் வெளிச்சம் தானே இருக்கும். அதனாலே நாம் உள்ளே போய் உடம்பை உஷ்ணப்படுத்திக் கொண்டு வரலாம். என்ன நிகிட்டா?' என்றான்.

'சரிதான். ஏன் செய்யக்கூடாது? நம்மை உஷ்ணப்படுத்திக் கொள்ள வேண்டியது தான்' என்று நிகிட்டா அங்கீகரித்தான். அவன் குளிரினால் விறைத்துப் போயிருந்தான். அதனால் தனது கைகால்களை எல்லாம் சூடாக்கிக் கொள்ளத் தவித்தான் அவன்.

வாஸிலி ஆன்ட்ரீவிச் வயோதிகனோடு வீட்டுக்குள்ளே போனான். பெட்ருஷ்கா திறந்து வைத்திருந்த வாசல் வழியாக நிகிட்டா வண்டியை ஓட்டினான்.

சிறுவனின் ஆலோசனையின் பேரில் அவன் தொழு வத்தை நோக்கி குதிரையைப் பின்னுக்கடித்தான்.

தரையில் கழிவுபொருள்கள் பரவிக் கிடந்தன. குதிரையின் தலைக்கு மேலாக நீட்டிக்கொண்டிருந்த சட்டம் தொழுவத்தின் கூரைக் கம்பில் மாட்டிக் கொண்டது. பெட்டைக் கோழிகளும் ஒற்றைச் சேவ லும் இதற்கு முன்னுடியே அங்கு தூங்குவதற்காக ஒண்டியிருந்தன. இப்போது அவை தங்கள் கால் விரல்களினால் அந்தக் கட்டையை அழுத்தமாகப் பற்றிக்கொண்டு எரிச்சலோடு குரல் எழுப்பின. கலைக் கப்பட்ட ஆடுகள் ஓடி ஒதுங்கி, தரையில் உறைந்து கிடந்த கழிவுகளைத் தங்கள் குளம்புகளினால் மிதித்துச் சமட்டிக் கொண்டு விலகிப் பாய்ந்தன. நாய் பயத்தி னாலும் கோபத்தாலும் மூர்க்கமாகக் கத்தியது. பிறகு அந்நியனை நோக்கி சின்னக் குட்டி போல் விட்டு விட்டுக் குரைத்தது.

அவை எல்லாவற்ருேடும் நிகிட்டா பேசினுன். கோழிகளிடம் மன்னிப்பு கேட்டுக்கொண்டான். இனி மறுபடியும் அவற்றிற்குத் தொந்தரவு கொடுக்கப் போவ தில்லை என்று அவன் உறுதி கூறினுன். காரணமில்லா மலே பயந்து ஓடியதற்காக ஆடுகளைக் கடிந்தான். குதிரையைக் கட்டிப்போட்ட வாறே, நாயை சாந்தப் படுத்தினுன்.

'இனி எல்லாம் சரியாகிவிடும்' என்று சொல்லி, அவன் தன் ஆடைகளிலிருந்த பனியைத் தட்டிக் கீழே தள்ளினுன். 'அது எப்படிக் குரைக்கிறது பாரேன்!' என்ருன். பிறகு நாயின் பக்கம் திரும்பி 'சும்மா இரு, முட்டாளே. சும்மா கிட. ஒன்றும் இல் லாததற் கெல்லாம் உன்னையே நீ அலட்டிக் கொள்

கிருய். நாங்கள் திருடர்கள் இல்லேயே. நண்பர்கள் தான்......'

'வீட்டிலிருக்கும் மூன்று ஆலோசகர்கள் என்று இவற்றைக் குறிப்பிட்டிருக்கிருர்கள்' என்று சிறுவன் சொன்னுன். வெளிப்புறத்திலேயே தங்கிவிட்ட வண்டியை அவன் தனது வலிய கரங்களிஞல் கூரைக்கு அடியில் தள்ளினுன்.

'ஆலோசகர்கள் என்பது ஏனே?' என்று நிகிட்டா கேட்டான்.

'பால்ஸன் புத்தகத்தில் அப்படித் தான் அச்சடிக் கப்பட்டுள்ளது. கள்ளன் ஒருவன் வீட்டினுள் நுழைகிருன். நாய் குரைக்கிறது. அப்படி யென்ருல், "விழிப் புடன் இருங்கள்" என்று அர்த்தம். கோழி கூவுகிறது. அதாவது "எழுந்திருங்கள்!" என்று பொருள். பூனே தன்னேயே நக்கிக் கொள்கிறது. அதற்கு என்ன அர்த்தம்? "வரவேற்புக்குரிய விருந்தாளி வந்திருக் கிருன். அவனே எதிர்கொண்டு அழைக்கத் தயாரா குங்கள்!" என்று தான்.' இவ்விதம் விளக்கினுன் சிறுவன், சிரித்தபடியே.

பெட்ருஷ்காவுக்கு எழுதப் படிக்கத் தெரியும். 'பால்ஸன் ஆரம்பவாசகம்' தான் அவன் கற்ற ஒரே புத்தகம். புத்தகத்தின் விஷயம் பூராவும் அவனுக்கு மனப்பாடம் ஆகியிருந்தது. ஆகவே, சந்தர்ப்பத் துக்குப் பொருத்தமானது என்று அவன் கருதிய வாசகங்களே அவ்வப்போது ஒலிபரப்புவதில் அவனுக்கு ஆசை அதிகம். அதிலும் ஏதாவது குடிவகை உள்ளே போய்விட்டால் அவனுக்கு ஏக உற்சாகம் தான். இன்றைக்கு அதே நிலைமை தான்.

‘ஆமாம். அப்படித் தான்’ என்ருன் நிகிட்டா.

பெட்ருஷ்கா சொன்ஞன் ‘நீ ஒரே அடியாகக் குளிர்ந்து போயிருக்க வேண்டுமே’ என்று.

‘ஆமாம்’ என்ருன் நிகிட்டா.

அவர்கள் முற்றத்தைக் கடந்து, நடைபாதை வழியாக, வீட்டினுள் சென்ருர்கள்.

## 4

வாஸிலி ஆன்ட்ரீவிச் வந்து சேர்ந்திருந்த குடும்பம் அந்த ஊரில் மிகுந்த செல்வம் படைத்திருந்த குடும்பங்களில் ஒன்ருகும். அக்குடும்பத்திற்கு ஐந்து பாகம் சொத்து இருந்தது. அது தவிர அதிகப்படியான நிலம் குத்தகை மூலம் சேர்ந்திருந்தது. அவர்களிடம் ஆறு குதிரைகள், மூன்று பசுமாடுகள், இரண்டு கன்றுக்குட்டிகள், இருபது ஆடுகள் இருந்தன.

அக் குடும்பத்தில் இருபத்து இரண்டு பேர் இருந்தார்கள். கல்யாணமான புத்திரர்கள் நான்கு பேர். ஆறு பேரன்மார்கள். (அவர்களில் ஒருவன் தான் பெட்ருஷ்கா. அவனுக்கு மணமாகி விட்டது.) இரண்டு ‘கொள்ளுப் பேரர்கள்’. மூன்று அநாதைப் பிள்ளைகள் நான்கு மருமகள்மார், அவர்களுக்குக் கைக்குழந்தைகள் உண்டு. பாகம் பிரிக்கப்படாமல் ஒரே குடும்பமாக விளங்கும் ஒரு சில குடித்தனங்களில் அதுவும் ஒன்று. ஆஞல், முடிவில் பாகப்பிரிவினைக்கு வழிவைக்கும் விசனகரமான அந்தரங்கப் பிளவு வேலை அந்த வீட்டிலும் ஆரம்பமாகி யிருந்தது. புத்திரர்களில் இருவர் மாஸ்கோவில் தண்ணீர் சுமப்பவர்களாக உழைத்து வந்தனர். ஒருவன் ராணுவத்தில் சேர்ந்திருந்தான்.

இப்போது அந்த வீட்டில் கிழவன், அவன் மனைவி, வீட்டு நிர்வாகத்தைக் கவனித்து வந்த இரண்டாவது மகன், பண்டிகைக்காக மாஸ்கோவிலிருந்து வந்திருந்த மூத்தவன் ஆகியவர்களோடு எல்லாப் பெண்களும் குழந்தைகளும் இருந்தார்கள். குடும்பத்தைச் சேர்ந்த இவர்களைத் தவிர, வேறொருஅதிதியும் அங்கு காணப்பட்டான். அடுத்த வீட்டுக்காரன் தான் அவன். அங்கிருந்த ஒரு குழந்தைக்கு 'ஞான ஸ்நான'த் தந்தை அவன்.

அந்த அறையிலிருந்த மேஜைக்கு உயரே ஒரு விளக்கு தொங்கியது. அதற்கு மேலாக மூடியிட்டு மறைத்திருந்ததனால் ஒளிவீச்சு கீழே உள்ள தேநீர்ப் பாத்திரங்களையும் மதுப்புட்டியையும் இதர தின்பண்டங்களையும் பிரகாசப்படுத்தியது. அத்துடன், செங்கல் சுவர்களையும், அவற்றின் தூரத்து மூலையில் தொங்கிய விக்கிரகங்களையும், அவற்றிற்கு இரண்டு புறங்களிலும் கிடந்த படங்களையும் வெளிச்சமாக்கியது. மேஜையின் முன்பு முதலில் வாஸிலி ஆன்ட்ரீவிச் பனியால் உறைந்திருந்த தன் மீசையைச் சுவைத்தபடி உட்கார்ந்திருந்தான். எடுப்பான கழுகுக் கண்களினால் அவன் அந்த அறையையும், தன்னைச் சுற்றிலுமிருந்த ஆட்களையும் ஆராய்ந்து கொண்டிருந்தான். அவன் கூட, வெண்தாடி உடைய வழுக்கைத் தலைக் கிழவன் இருந்தான். குடும்பத் தலைவனை அவன் வீட்டிலே நெய்யப் பெற்ற வெள்ளைத் துணிச் சட்டையுடன் காட்சி அளித்தான். மாஸ்கோவிலிருந்து பண்டிகைக்காக வந்திருந்த மகன் அவனுக்கு அடுத்தாற்போல இருந்தான். உரம் பொருந்திய முதுகும், வலிமை நிறைந்த தோள்களும் பெற்றவன் அவன். அவன்

வர்ணம் அச்சிட்ட மென்துணிச் சட்டை அணிந் திருந்தான். அவனுக்கு அருகே இரண்டாவது மகன் காணப்பட்டான். அ வ னு ம் அகன்ற தோள்களை உடையவன்தான். குடும்ப நி ர் வ ா க த் தை ஏற்று நடத்தியவன் அவனே. அவனுக்குப் பக்கத்தில், மெலிந்த செந்தலைக் குடியானவன்—அடுத்த வீட்டுக் காரன்—இருந்தான்.

வோட்கா குடித்து எது எதையோ தின்று தீர்த்த பிறகு, தேநீர் குடிக்க வேண்டிய கட்டத்தில் இருந் தார்கள் அவர்கள். தரைமீது செங்கல் அடுப்புக்குப் பக்கத்தில் நின்ற ஸமோவார் இதற்குள் சூடு பெற்று இரைச்சலிட்டுக் கொண்டிருந்தது. உயர்ந்த தளவரிசை மீதும், கணப்பு அடுப்பின் மேல் பகுதியிலும் குழந்தை கள் காணப்பட்டனர். தணிவான கட்டுமானம் ஒன்றில், தனக்கு அருகில் ஒரு தொட்டிலோடு, ஒரு மங்கை இருந்தாள். வயதான குடும்பத் தலைவி வாஸிலிக்கு உபசாரம் செய்து நின்றாள். அவள் முகம் பூராவும் சுருக்கங்கள் பரவிக் கிடந்தன. அவள் உதடுகளில்கூட சுருக்கம் விழுந்திருந்தது.

நிகிட்டா உள்ளே பிரவேசித்த சமயத்தில், அவள் கனமான கண்ணாடித் தம்ளர் ஒன்றை வோட்காவினால் நிரப்பி, அதை விருந்தாளி பக்கம் நீட்டி உபசரித்துக் கொண்டிருந்தாள்.

'வேண்டாம் என்று சொல்லாதே, வாஸிலி ஆன்ட்ரீவிச். நீ அப்படிச் சொல்லக்கூடாது. எங்க ளோடு கூடினால் குதூகலமான விருந்துதான். இதைக் குடித்துவிடு, அன்பே!' என்றாள் அவள்.

வோட்காவின் தரிசனமும், அதன் மணமும் நிகிட்டாவின் உள்ளத்தில்—அதிலும் இந்தச் சந்தர்ப்

பத்தில், உள்ளும் புறமும் குளிரிட்டுப்போய் களைப்பினால் சோர்ந்திருந்தபோது—அதிகமான குழப்பத்தை உண்டாக்கி விட்டன. அவன் முகத்தைச் சுழித்தான். தனது குல்லாயிலும் கோட்டு மேலும் ஒட்டிக் கொண்டிருந்த பனியைத் தட்டி உதறிய பிறகு அவன், வேறு யாரையும் பார்க்காதவன் போல, விக்கிரகங்களின் முன்னால் நின்று மூன்று தடவைகள் தனக்குத்தானே சிலுவை அடையாளம் செய்து கொண்டான். தலை தாழ்த்தி விக்கிரங்களை வணங்கி விட்டுத் திரும்பினான். முதலில் குடும்பத் தலைவனுக்கும், பின்னர் மேஜை முன்னிருந்த எல்லோருக்கும், அதற்குப் பிறகு அடுப்பருகே நின்ற பெண்களுக்கும் வணக்கம் தெரிவித்தான் அவன். 'குதூகலமான பண்டிகை ஆகட்டும்!' என்று முனங்கியவாறே, அவன் தனது மேல் ஆடைகளை அகற்ற ஆரம்பித்தான். அவன் பார்வை மேஜையின் பக்கம் செல்லவே இல்லை.

மூத்த மகன் நிகிட்டாவின் பனி படிந்த முகத்தையும் கண்களையும் தாடியையும் கவனித்தபடியே சொன்னான், 'அடடா! உமது உடம்பு பூராவும் பனி மூடிவிட்டதே, பெரியவரே' என்று.

நிகிட்டா தனது கோட்டைக் கழற்றினான். அதை மறுபடியும் உதறி, அடுப்புக்குப் பக்கத்திலே தொங்கப் போட்டு விட்டு, மேஜையை அடைந்தான். அவனுக்கும் வோட்கா கொடுக்கப்பட்டது. அவனுக்கு வேதனை மிகுந்த தயக்கம் ஏற்பட்டது. அநேகமாக அவன் அந்த மதுக் கோப்பையை வாங்கி, மணம் நிறைந்த தெளிவான பானத்தை உள்ளே ஊற்றியிருப்பான், ஆனால் அவன் பார்வை வாஸிலி ஆன்ட்ரீவிச் மீது படிந்தது. தான் செய்து கொண்ட சபதத்தின்

ஞாபகம் வந்தது அவனுக்கு. சில்லறை வேலை செய்கிறவன் நினைப்பும் எழுந்தது. தன்னுடைய சின்ன மகனையும், வசந்த காலத்திற்குள் அவனுக்காகத் தான் ஒரு குதிரை வாங்கிவிடத் தீர்மானித்ததையும் அவன் எண்ணினான். ஆகவே, அவன் மறுதளித்தான்.

'நான் குடிப்பதில்லை. அன்பு நிறைந்த வந்தனம்' என்று சொல்லி, முகத்தைச் சுழித்துவிட்டு, இரண்டாவது ஜன்னலுக்கு அருகே கிடந்த பெஞ்சு மேல் உட்கார்ந்தான் அவன்.

'அது ஏன் ?' என்று கேட்டான் மூத்தவன்.

'நான் குடிப்பதில்லை. அவ்வளவுதான்' என்று நிகிட்டா, கண்களை உயர்த்திப் பார்க்காமலே பேசினான். ஆனால் அவன் ஓரக் கண்ணினால் தனது குறைச்சலான தாடியையும் மீசையையும் பார்த்துக்கொண்டே அவற்றிலிருந்த பனித்துகள்களை அப்புறப்படுத்துவதில் முனைந்து விட்டான்.

'அவனுக்கு அது நல்லதல்ல' என்றான் வாஸிலி. ஒரு கிளாஸ் மதுவைக் காலி செய்த பிறகு, கடினமான பிஸ்கட் ஒன்றை வாயில் போட்டுக் கடித்துக் கொண்டிருந்தான் அவன்.

'அப்படியானால் சரிதான். கொஞ்சம் டீ சாப்பிடேன். குளிரினால் நீ முழுக்க முழுக்க விறைத்திருப்பாயே' என்று அன்பார்ந்த வீட்டுத் தலைவி சொன்னாள். 'பெண்களாகிய நீங்கள் அந்த ஸமோவாரை வைத்துக்கொண்டு ஏன் வீண்பொழுது போக்குகிறீர்கள் ?' என்றும் சொன்னாள்.

அங்கிருந்த இளம் பெண்களில் ஒருத்தி 'இதோ தயாராகி விட்டது' என்றாள். அவள் தனது முன்றானை

யால் ஸமோவாரின் மூடியை வேகமாகத் தள்ளி விட்டாள். அது இப்பொழுது மிக அதிகமாகக் கொதித்துக் கொண்டிருந்தது. அவள் பிரயாசையோடு அதை மேஜையின் பக்கம் எடுத்துச் சென்ருள். உயரத் தூக்கி 'தட்' என்று ஓசை எழும்படி அதை மேஜைமேல் வைத்தாள்.

இந்த நேரத்தில், வாஸிலி ஆன்ட்ரீவிச் தான் பாதையை எப்படித் தவற விட்டு விட்டான் என்பது பற்றி விவரித்துக் கொண்டிருந்தான். இதே கிராமத்துக்கு அவர்கள் இரண்டு தடவைகள் வர நேர்ந்ததையும் வழி விலகித் திரிந்ததையும், குடிகாரக் குடியானவர்கள் சிலரைச் சந்தித்ததையும் சொன்ஞன். அங்கே இருந்தவர்கள் அதிசயித்தார்கள்; அவர்கள் பாதையை விட்டு எங்கே எப்படி விலகியிருக்க வேண்டும் என்று விளக்கினுர்கள்; வழியில் சந்தித்த குடிகாரர்கள் யார் என்று சொன்னுர்கள்; பிறகு எப்படிப் போக வேண்டும் என்றும் தெரிவித்தார்கள்.

'இங்கிருந்து மோல்ஷேனேவ்கா போகிற வழியை ஒரு சின்னக் குழந்தை கூடக் கண்டுபிடித்துவிடும். நீங்கள் செய்ய வேண்டியதெல்லாம் பெரிய ரஸ்தாவிலிருந்து வலது பக்கம் திரும்புகிற வழியோடு செல்வது தான். அந்த இடத்தில் ஒரு புதர்கூட உண்டு. ஆனல் நீங்கள் அவ்வளவு தூரம் போகவே இல்லையே!' என்று அண்டை வீட்டு ஆசாமி சொன்ஞன்.

'இரவு பூராவும் இங்கேயே தங்கி விடுவதுதான் நல்லது. பெண்கள் உங்களுக்காக படுக்கை தயாரிப்பார்கள்' என்று கிழவி வற்புறுத்தினுள்.

தனது மனைவியின் பேச்சை உறுதிப்படுத்தி அந்த வயோதிகனும் பேசினுன். 'நீங்கள் விடியற்

காலையில் போகலாம். அவ் வேளையில் மனோகரமாகவும் இருக்கும்' என்றான்.

'என்றால் முடியாது, நண்பரே. இது வியாபார விஷயம். ஒரு மணி நேரத்தை நஷ்டப்படுத்தி விட்டால், அப்புறம் ஒரு வருஷத்திலேகூட ஈடுசெய்ய முடியாது' என்று சொன்னான் வாஸிலி. அந்தத் தோப்பு விவகாரமும், நகர வியாபாரிகள் தன்னிட மிருந்து அதை அபகரித்து விடுவார்களே என்ற நினைப்பும் தான் அவனுக்கு. ஆகவே அவன் நிகிட்டா பக்கம் திரும்பி 'நாம் அங்கே போய்ச் சேர்ந்து விடுவோம். போக முடியாதா என்ன?' என்று கேட்டான்.

கொஞ்ச நேரம் வரை நிகிட்டா பதில் எதுவும் பேசவில்லை. அவன் தனது தாடியையும் மீசையையும் சரிப்படுத்துகிற கருமத்திலேயே கண்ணாகி விட்டது போல் தோன்றியது. பிறகு, சோகம் கப்பிய குரலில் அவன் அறிவித்தான், 'மறுபடியும் நாம் வழிதவறிச் செல்லாமலிருந்தால்' என்று.

அவன் சோகம் அடைந்து விட்டதன் காரணம், வோட்கா மீது அவனுக்கு அடக்க முடியாத தாகம் ஏற்பட்டிருந்ததுதான். அந்தத் தவிப்பை ஆற்றக் கூடிய ஒரு பொருள் தேநீர்தான். அது அவனுக்கு இன்னும் அளிக்கப்படவில்லை.

'நாம் அந்தத் திருப்பத்தை அடையவேண்டியது. அவ்வளவு தானே! அதன் பிறகு நாம் தவறி விட மாட்டோம். அப்புறம் பூரா வழியும் காட்டினூடே செல்கிற ரஸ்தா தானே' என்று வாஸிலி சொன்னான்.

தனக்கு அளிக்கப்பட்ட தேநீர் கிளாஸை ஏற்றுக் கொண்டவாறே நிகிட்டா சொன்னான்: 'நீங்கள்

விரும்புகிறபடியே செய்யலாம். நாம் போகத்தான் வேணும் என்ருல், போவோம்.'

'நாம் டீயைக் குடித்து விட்டு உடனே கிளம்பு வோம்.'

நிகிட்டா ஒன்றும் சொல்லவில்லே. தலேயை மட் டும் அசைத்தான். 'ஸாசரில்' கொஞ்சம் தேநீரை ஜாக்கிரதையோடு ஊற்றிக்கொண்டு அதன் ஆவியி ஞல் தனது கைகளேச் சூடு படுத்தத் தொடங்கினுன். அவன். அவனது கைவிரல்கள் கடுமையான உழைப் யின் காரணமாக எப்பொழுதும் வீங்கியே காணப் பட்டன.

அப்புறம், சர்க்கரையில் மிகவும் கொஞ்சமாகக் கடித்துக்கொண்டான். தனக்கு விருந்து அளிப்பவர் களுக்குத் தலேவணங்கி, 'உங்கள் உடல் நலம் வளர !' என்று வாழ்த்திவிட்டு, கொதிக்கும் பானத்தை உறிஞ்சிக் குடித்தான்.

'அந்தத் திருப்பம் வரை யாராவது எங்கள் கூட வந்தால் நல்லது' என்று வாஸிலி சொன்னுன்.

'ஓ' நாங்கள் அதைச் செய்யமுடியும். பெட் ருஷ்கா வண்டியில் குதிரையைப் பூட்டிக்கொண்டு உங்கள்கூட அந்த இடம் வரை வருவான்' என்று மூத்த மகன் கூறினுன்.

'நல்லது. அப்படியாஞல் குதிரையைப் பூட்டு, தம்பி. இதற்காக நான் உனக்கு ரொம்பவும் நன்றி உள்ளவஞக இருப்பேன்.'

'அட, இது எதற்காக? அன்பரே! உங்களுக்காக இதைச் செய்வதில் எங்களுக்கு எவ்வளவோ திருப்தி' என்று கிழவி சொன்னுள்.

'பெட்ருஷ்கா' போ, போய் குதிரையைப் பூட்டு, என்று மூத்தவன் சொன்னான்.

'ரொம்ப நல்லது' என்று புன்னகையுடன் தெரிவித்தான் பெட்ருஷ்கா. உடனடியாக, ஆணியில் கிடந்த தொப்பியை எடுத்துக்கொண்டு, அவன் வண்டியைப் பூட்ட ஓடினான்.

வண்டியில் குதிரை பூட்டப்படுகிற வேளையில், உள்ளே பேச்சு, வாஸிலி ஆன்ட்ரீவிச் ஜன்னல் ஓரத்துக்கு வந்து சேர்ந்த போது விடுபட்டுப்போன கட்டத்திற்கு மீண்டும் திரும்பியது. அண்டைவீட்டில் இருந்தவன் தான் ஊரின் பெரியதனக்காரன். அவனிடம் குடும்பத் தலைவன் தனது மூன்றாவது மகனைப் பற்றிக் குறை கூறிக்கொண்டிருந்தான். அவன் பண்டிகைக்காக வீட்டுக்கு எதுவும் அனுப்பிவைக்கவில்லை; ஆனால் தனது மனைவிக்கு பிரஞ்சுதேசத்துச் சால்வை ஒன்று அனுப்பியிருக்கிறான் என்று முறையிட்டான்.

'வாலிபப் பையன்கள் நம்மை மிஞ்சி வளர்ந்து விட்டார்கள்' என்று கிழவன் சொன்னான்.

'ஆமாம். எப்படி ஆகிவிட்டார்கள்! அவர்களைக் கட்டுப்படுத்துவது சாத்தியமில்லை. அவர்கள் ரொம்ப ரொம்பக் கற்று விட்டார்கள் டிமோச்கின் இருக்கிறானே, அவன் தனது அப்பாவின் கையையே ஒடித்து விட்டான். இதெல்லாம் எதனால் வருகிறது? ரொம்ப ரொம்பப் புத்திசாலி ஆகிவிடுவதனால்தான்' என்று அடுத்த வீட்டுக்காரன் பேசினான்.

நிகிட்டாவும் இந்தப் பேச்சைக் கேட்டுக்கொண்டிருந்தான். பேசியவர்கள் முகங்களை உற்றுக் கவனித்த

படி இருந்த அவனுக்கும் பேச்சிலே பங்கு கொள்ள வேண்டும் என்ற விருப்பம் இருக்கும் என்றே தோன்றியது. ஆனாலும் அவன் தேநீர் குடிப்பதிலே மும்முரமாக ஈடுபட்டிருந்ததால், அவ்வப்போது வெறுமனே தலையை ஆட்டி ஆமோதித்துக் கொண்டிருந்தான். ஒன்றின் பின் ஒன்ருக அனேக தம்ளர் டீயைக் குடித்துத் தீர்த்தான் அவன். அதனுல் கொஞ்சம் கொஞ்சமாகக் கதகதப்பு அதிகரிக்கப் பெற்று, முன்னைப் பார்க்கிலும் அதிகம் அதிகமாக சுக உணர்வை அவன் அனுபவிக்க முடிந்தது.

பேச்சு அந்த விஷயத்தைப் பற்றியே வெகுநேரம் வளர்ந்தது. பாகம் பிரிந்து போகிற குடும்பத்தில் ஏற்படும் அபாயங்களைப் பற்றித்தான். அது பொதுப் படையான சர்ச்சை அல்ல என்பது நன்கு தெளிவாயிற்று. அந்த வீட்டிலே முளைத்திருந்த பாகப்பிரிவினைப் பிரச்னை பற்றிய விவாதம்தான் நடந்து கொண்டிருந்தது. அங்கே கடுகடுப்பாக முகத்தை வைத்தபடி மௌனமாக உட்கார்ந்திருந்த இரண்டாவது மகன்தான் பாகப்பிரிவினை கோரியவன்.

உண்மையிலேயே துயரம் தரக்கூடிய விவகாரம் தான் அது. அந்தப் பிரச்னை அங்கிருந்த அனைவரது சிரத்தையையும் ஈர்த்திருந்தது. எனினும் அந்நியர் முன்னிலையில் தங்கள் சொந்த விவகாரங்களை விவாதிப்பது அழகல்ல என்று பொறுத்திருந்தார்கள். ஆனுல் கடைசி நேரத்தில் குடும்பத் தலைவன் தன்னைத் தானே கட்டுப்படுத்தி வைக்க முடியாதவனுகி விட்டான். தான் உயிரோடு இருக்கிற மட்டும் அந்தக் குடும்பத்தில் பிளவு உண்டாக்க இசையப் போவதில்லை என்று அவன், கண்களில் நீர் மல்க,

உணர்ச்சியோடு அறிவித்தான். ஆண்டவன் அருளால் இந்தக் குடும்பம் நல்ல நிலைமையில் உள்ளது; ஆனால் அவர்கள் தனித்தனியாகப் பிரிந்துவிட்டால் அப்புறம் எல்லோருமே பிச்சை எடுத்துத் திரிய வேண்டியதுதான் என்று சொன்னான் அவன்.

'மாட்வீவ் குடும்பத்தாரைப் போல்தான்—வீடும் வாசலுமாக அவர்கள் சுகமாக வசித்து வந்தார்கள். ஆனால் பிரிவினை நடந்த பிறகு அவர்களில் யாரிடமும் எதுவுமில்லை' என்று பக்கத்து வீட்டுப் பெரியவன் தெரிவித்தான்.

'அந்த நிலைமைதான் நமக்கும் வரவேண்டும் என்று நீ ஆசைப் படுகிறாய்' என்று கிழவன் தன் மகனைப் பார்த்துச் சொன்னான்.

மகன் பதில் பேசவில்லை. இசைகேடான அமைதி நிலவியது அங்கே. அந்த மௌனத்தைக் கலைக்க பெட்ருஷ்கா முன்வந்தான். வண்டியில் குதிரையை மாட்டிவிட்டு சில நிமிஷங்களுக்கு முன்பே அங்கு வந்து சேர்ந்த அவன் அவர்களுடைய பேச்சை புன்னகையுடன் கேட்டு நின்றான்.

'இந்த விஷயத்தைப் பற்றி பால்ஸன் வாசகத்தில் ஒரு கதை இருக்கிறது. ஒரு தந்தை தனது புதல்வரிடம் துடைப்பம் ஒன்றைக் கொடுத்து அதைத் துண்டு துண்டாக ஒடித்துவிடும்படி சொன்னான். முதலில் அவர்களால் அப்படிச் செய்யமுடியவில்லை. ஆனால் தனித்தனிக் குச்சியாகப் பிரித்த பிறகு அவர்கள் அதை எளிதில் ஒடித்துவிட்டார்கள். இங்கும் அதே நிலைமைதான்' என்று சொல்லிவிட்டு அவன் முகத்தில் முழு நகை காட்டினான். 'நான் தயார்' என்றும் அறிவித்தான்.

'நீ தயார் என்ருல், நாங்கள் கிளம்ப வேண்டியது தான்' என்று வாஸிலி சொன்ஞன். 'பாகப் பிரிவினே விஷயத்தில் நீங்கள் விட்டுக் கொடுக்கக் கூடாது தாத்தா. எல்லாவற்றையும் நீங்கள் தானே சேர்த்து வைத்திருக்கிறீர்கள். ஆகவே நீங்கள் தான் எஜமான். அவசியமாஞல், சமாதான நீதிபதியிடம் போங்கள். இந்த விவகாரங்கள் எப்படித் தீர்க்கப்பட வேண்டும் என்பது பற்றி அவர் அறிவிப்பார்' என்ருன்.

'இவன் ஒரே சாதனையாக இருக்கிருன். பிடிவாதமாக இருக்கிருனே. இவனிடம் எதுவும் எடுபடாது. சைத்தான்தான் இவனைப் பிடித்துக்கொண்டு ஆட்டி வைக்கிருன்' என்று கிழவன் ஒப்பாரிக் குரலில் ஓலமிட்டான்.

இதற்குள் நிகிட்டா ஐந்தாவது தம்ளர் தேநீரைப் பருகிவிட்டு, கிளாசைத் தலைகீழாகக் கவிழ்த்து வைக்காமல் நேராகவே வைத்தான். ஆருவது தம்ளர் தேநீர் தனக்குக் கிடைக்கும் என்று அவன் நம்பிஞன். ஆனல் ஸமோவாரில் மேற்கொண்டு தண்ணீர் இல்லை. அதனல் குடும்பத் தலைவி அவனுக்காக மீண்டும் தேநீர் நிரப்பவில்லை. மேலும், வாஸிலி ஆன்ட்ரீவிச் தனது உடுப்புகளை அணிந்து கொண்டிருந்தான். உடனே கிளம்புவதைத் தவிர நிகிட்டாவுக்கு வேறு வழியில்லை. சுற்றிலும் சிறுகச் சிறுகக் கடித்திருந்த சர்க்கரைக் கட்டியை மறுபடியும் கிண்ணத்தில் போட்டான் அவன். வேர்வை வழியும் முகத்தை ஆட்டுத் தோல் கோட்டின் விளிம்பிஞல் துடைத்துவிட்டு அவன் தனது மேல் அங்கியை அணிந்து கொள்ளச் சென்ருன்.

அதைத் தரித்துக் கொண்டதும் அவன் ஆழ்ந்த நெடுமூச்செறிந்தான். தன்னை உபசரித்தவர்களுக்கு நன்றி அறிவித்து விடைபெற்றுக் கொண்டு, கதகதப்பும் வெளிச்சமும் நிறைந்த அறையிலிருந்து நடந்து, குளிரும் இருட்டும் மண்டிய நடைபாதையை அடைந்தான் நிகிட்டா. அங்கேகூடக் காற்று ஊளையிட்டு ஊர்ந்தது. ஆடி அசைந்து கொண்டிருந்த கதவின் கீறல் வழியாகப் பனி வந்து தாக்கியது.

அங்கிருந்து முற்றம் போய்ச் சேர்ந்தான் அவன். முற்றத்தின் நடுவிலே குதிரைக்கு அருகில் பெட்ருஷ்கா ஆட்டுத்தோல் அங்கி அணிந்து நின்றான். பால்ஸன் வாசகத்தில் உள்ள சில வரிகளை உச்சரித்துக் கொண்டிருந்தான் அவன். இளநகை பூத்தவாறே அவன் சொன்னான்:

பனியொடு புயலைப் பதுக்கிடும் வானம்;
பனிச்சுழல் பலப்பல சூறையாய் சாடும்,
வெறிநாய் போல அலறிடும் காற்றே
மறுகணம் பிள்ளைக் குரலால் அழுவது கேளீர்!

குதிரையின் கடிவாளத்தைச் சரிசெய்து நின்ற நிகிட்டா அதை ஆமோதித்துத் தலையசைத்தான்.

வாஸிலி ஆன்ட்ரீவிச்சை வழி அனுப்ப வந்த கிழவன் வெளிச்சத்திற்காக ஒரு விளக்கை எடுத்து வந்தான். நடை பாதையில் அடி எடுத்து வைத்ததுமே அது அணைந்து போய்விட்டது. பனிப்புயல் முன்னை விட மும்முரமாகி விட்டது என்பது முற்றத்திலேயே நன்கு தெளிவாயிற்று.

''ஆ, சரியான பனிக்காலம்தான்! எவ்வளவு முயன்றாலும் நாம் அங்கே போய்ச்சேர முடியாமல் ஆகிவிடுமோ என்னவோ. இருந்தாலும் வேறுவித

மாக நடப்பதற்கில்லை. தொழில் விவகாரம்! மேலும், நாம் புறப்பட்டாயிற்று. வீட்டாரின் குதிரையும் தயாராகிவிட்டது. கடவுள் கிருபை இருந்தால் நாம் அங்கே போய்ச் சேர்ந்து விடலாம்' என்று வாஸிலி நினைத்தான்.

அவர்கள் அந்நேரத்தில் புறப்படக் கூடாது என்றுதான் வயோதிக வீட்டுக்காரனும் எண்ணினான். ஆனால் அவர்களை அங்கே தங்கும்படி முன்பே அவன் வற்புறுத்திப் பார்த்துவிட்டான். அவன் பேச்சு எடுபடவில்லை.

'இவர்களிடம் திரும்பவும் சொல்வதனால் ஒரு பிரயோசனமும் இல்லை. ஒரு வேளை எனது வயதுதான் என்னை கோழையாக மாற்றுகிறதோ என்னவோ. அவர்கள் அந்த இடத்துக்குப் போய்விடுவார்கள். எது எப்படியானால் என்ன! வீண் பரபரப்பு எதுவும் இல்லாமல் நாம் காலாகாலத்தில் படுத்துத் தூங்க முடியுமே' என்று அவன் எண்ணினான்.

பெட்ருஷ்கா ஆபத்து பற்றி யோசிக்கவே இல்லை. ரஸ்தாவையும், அந்த வட்டாரம் பூராவையும் அவன் நன்றாக அறிந்து வைத்திருந்தான். மேலும், 'பனிச் சுழல் சூறையாய் சாடும்' என்று வர்ணித்த வரிகள் வெளியுலக நிகழ்ச்சிக்கு மிகவும் பொருத்தமாக அமைந்திருந்தன. அதனால் அவனுக்கு ஏகப்பட்ட உற்சாகம் தான்.

போகவேண்டும் என்று நிகிட்டா கொஞ்சம் கூட ஆசைப்படவில்லை. ஆனாலும் தனது போக்கின்படி செயல்புரிய இயலாது, பிறர் இஷ்டத்துக்குப் பணிந்து போகும் தன்மையில் அவன் வெகுகாலமாகப் பழக்கப்பட்டு விட்டான்.

ஆகவே, விடை பெற்றுச் செல்லத் துணிந்த பிரயாணிகளைத் தடுத்து நிறுத்துவார் அங்கே எவரு மில்லை.

## 5

வாஸிலி ஆன்ட்ரீவிச் தனது வண்டி அருகே போனான். இருட்டில் சிரமத்தோடு அதைக் கண்டு பிடித்து உள்ளே ஏறிக்கொண்டான். கடிவாள வார் களைக் கையில் பற்றியதும், 'நீ முன்னாலே போ!' என்று கத்தினான்.

பெட்ருஷ்கா தனது தணிவான வண்டியில் மண்டி யிட்டு அமர்ந்தவாறே குதிரையைத் தட்டிவிட்டான். சற்று நேரத்துக்கு முன்பிருந்தே கனைத்துக் கொண்டு நின்ற முக்கார்ட்டி தனக்கு முன்னால் ஒரு குதிரை செல்வதை உணர்ந்து அதைத் தொடர்ந்து ஓடியது.

அவர்கள் வீதியை அடைந்தார்கள். மறுபடியும் ஊரின் எல்லைப்புறமாகப் போனார்கள். திரும்பவும் அதே ரோடு வழியாகவும், உறைந்து போன, துணிகள் ஊசலாடிக் கிடந்த முற்றத்தின் வழியாகவும் சென் றார்கள். (இந்தத் தடவை துணிகள் அங்கே காணப் படவில்லை.) பழைய களஞ்சியத்தைக் கடந்தார்கள். இப்போது அதன் கூரை முழுவதும் பனியினால் மூடப் பட்டு விட்டது போல் தோன்றியது. அங்கிருந்து பனி இன்னும் முடிவே இல்லாமல் கீழே கொட்டிக் கொண்டு தானிருந்தது. சோக ஒலி எழுப்பி, கீச்சிட்டு, ஆடி அசைந்து நின்ற வில்லோ மரங்களையும் கடந்து போனார்கள் அவர்கள். மேலிருந்து இறங்கியும் கீழிருந்து எழுந்தும் சாடிச் சுழன்று இரைச்சலிட்டுக்

கொண்டிருந்த பனிக்கடலினுள் மீண்டும் புகுந்தார்கள். காற்று மிகவும் பலம் பெற்று வீசியது. அது ஒரு பக்கத்திலிருந்து வீசுகிறபோது, பிரயாணிகள் அதை எதிர்த்து முன்னேறுகையில், வண்டிகளை ஓர் புறமாய் சாய்த்து, குதிரைகளை ஒரு பக்கமாகத் திருப்பியது அதன் வேகம்.

தனது அருமையான குதிரையை வேக நடையில் முன்னால் போகும்படி ஓட்டினான் பெட்ருஷ்கா. அவன் உணர்ச்சிகரமாகக் கூச்சலிட்டுக் கொண்டிருந்தான். முக்கார்ட்டி வேகமாகத் தொடர்ந்தது.

இப்படிப் பத்து நிமிஷ நேரம் பிரயாணம் செய்த பிறகு, பெட்ருஷ்கா வட்டமிட்டுத் திரும்பி, உரத்த குரலில் ஏதோ சொன்னான். வாஸிலியோ நிகிட்டாவோ, காற்றின் காரணமாக, எதையும் கேட்க முடியவில்லை. என்றாலும், திருப்பத்துக்கு வந்து சேர்ந்து விட்டதாக அவர்கள் ஊகித்தார்கள். ஆமாம். பெட்ருஷ்கா வலது பக்கம் திரும்பிவிட்டான். முன்பு பக்கவாட்டில் அடித்துக்கொண்டிருந்த காற்று இப்போது அவர்கள் முகங்களின் மீது நேராக வீசியது. தங்களுக்கு வலது பக்கத்தில் எதுவோ கறுப்பாகத் தெரிவதையும் பனியினூடாக அவர்கள் காணமுடிந்தது. திருப்பத்தில் உள்ள புதர்தான் அது.

'நல்லது. நீங்கள் வேகமாக முன்னேற ஆண்டவன் அருள் புரியட்டும்!' என்றான் சிறுவன்.

'உனக்கு நன்றி, பெட்ருஷ்கா!'

'பனியொடு புயலைப் பதுக்கிடும் வானம்!' என்று கூவியவாறே மறைந்து போனான் பெட்ருஷ்கா.

'அதோ ஒரு கவிஞர் போகிறார்!' என்று முனங்கிய வாஸிலி, லகானை இழுத்தான்.

'ஆமாம். அருமையான பையன். உண்மையான குடியானவன்' என்று நிகிட்டா சொன்னான்.

அவர்கள் முன்னேறிச் சென்றார்கள்.

நிகிட்டா, மேல் சட்டையை இழுத்து உடம்பைச் சுற்றிலும் இறுக்கிப் பிடித்து, தலையை தோள்களுக்குள்ளே குறுக்கிக்கொண்டு உட்கார்ந்திருந்தான். அவனது குறுகியதாடி கொண்டையை மூடி மறைத்தது. அவன் மௌனமாக இருந்தான். வீட்டில் தேநீர் பருகியதன் மூலம் பெற்ற உஷ்ணத்தை இழந்து விடாமலிருக்க முயன்றான் அவன். வண்டியின் நேரான சட்டங்கள் அவன் பார்வையில் பட்டுக்கொண்டிருந்தன. அதனால், நன்கு பண்பட்ட நேர் பாதையில் போய்க்கொண்டிருப்பதாக ஒரு பிரமை அவனுக்கு அடிக்கடி தோன்றியது. குதிரையின் ஆடி அசையும் பின்பகுதியும், ஓர்புறமாக ஒதுங்கித் தொங்கும் முடி போடப்பட்ட வாலும் அவன் கவனத்தில் உறுத்திக்கொண்டிருந்தன. முன்னால் கொஞ்சம் தள்ளி வண்டிச் சட்டம் உயர்ந்திருந்ததும், அதனூடே ஆடும் குதிரைத் தலையும், கழுத்தும், நெளியும் பிடரி மயிரும் பார்வையிலிருந்து மறையாது தோன்றின. பாதை ஓரத்து அடையாள முளை அவ்வப்போது அவன் பார்வையைக் கவர்ந்தது. ஆகவே ரஸ்தாமீது தான் செல்கிறோம்; கவலைப் படுவதற்கு எதுவுமில்லை என்றே கருதியிருந்தான் அவன்.

ரஸ்தாவைத் தவற விடாமல் போகும் பொறுப்பைக் குதிரையிடம் விட்டுவிட்டு, வாஸிலி வண்டி

ஓட்டினன். ஆனல், முக்கார்ட்டி, கிராமத்தில் கொஞ்ச நேரம் ஓய்வு பெற்றிருந்தபோதிலும், மனம் இல்லாமல் தான் ஓடியது. ஆகையினல் அடிக்கடி அது பாதையை விட்டு விலகிச் செல்வது போல் தோன்றியது. அதனல் வாஸிலி திரும்பத் திரும்ப அதைக் கண்டித்துத் திருத்தவேண்டிய அவசியம் ஏற்பட்டது.

'இதோ வலது பக்கத்திலே ஒரு முளை இருக்கிறது....இதோ மற்ருென்று...இன்னுமொன்று' என்று வாஸிலி கணக்கிட்டான். எதிரே கறுப்பாகத் தெரிந்த ஏதையோ பார்த்து 'இங்கே முன்னல் காடு இருக்கிறது' என்று நினைத்தான். ஆனல் அவனுக்குக் காடு மாதிரித் தோற்றமளித்தது வெறும் புதர்தான். அந்தப் புதரைத் தாண்டி அவர்கள் மேலும் சுமார் நூறுகஜ தூரம் சென்ருர்கள். எனினும், நான்காவது முளையும் தென்படவில்லை; அங்கே காடும் இல்லை.

'நாம் சீக்கிரம் காட்டை அடைந்தாக வேண்டும்' என்று வாஸிலி நினைத்தான். வோட்காவினலும் டீயினலும் கிளர்ச்சியுற்றிருந்த அவன் வண்டியை நிறுத்தவேயில்லை. லகானை அசைத்து அவசரப்படுத்தினன். கீழ்ப்படியும் குணமுள்ள அந்த நல்ல குதிரை அவன் குறிப்பை ஏற்று நடந்தது. கொஞ்சம் வேகமாக நடந்தும், சற்றே குதித்து ஓடியும், தான் செலுத்தப்படுகிற திக்கு நோக்கியே அது சென்றது. என்ருலும், தான் சரியான பாதையில் போகவில்லை என்பதை அது உணர்ந்து தானிருந்தது. பத்து நிமிஷங்கள் ஓடின. இன்னும் காடு வரவேயில்லை.

'சரிதான். நாம் மறுபடியும் வழிதவறிவிட்டோம்' என்று சொல்லி வாஸிலி வண்டியை நிறுத்தினன்.

நிகிட்டா பேசாமல் வண்டியை விட்டு இறங்கினான். காற்று ஒரு கணம் அவன் கோட்டை உடலோடு உடலாக ஒட்டிச் சேர்த்தும், மறுகணம் பிய்த்து இழுத்தும் விளையாடியது. அவன் அதை இறுகப் பற்றியபடியே, பனி நடுவே பாதையைத் தேடி, முதலில் ஒரு பக்கத்திலும் பிறகு அடுத்த பக்கத்திலுமாக அலைந்தான். மூன்று அல்லது நான்கு தடவைகள் அவன் அடியோடு மறைந்தே போனான். கடைசியாகத் திரும்பி வந்ததும் அவன் லகானை வாஸிலி கையிலிருந்து வாங்கிக்கொண்டான்.

'நாம் வலதுபக்கம் போகவேண்டும்' என்று அவன் கண்டிப்பாகவும் உறுதியோடும் சொல்லி, குதிரையைத் திருப்பினான்.

'சரிதான். வலது பக்கம்தான் பாதை இருக்கிறதென்றால், வலது பக்கமே போ' என்று வாஸிலி சொன்னான் நிகிட்டாவிடம். வார்களைக் கொடுத்து விட்டு அவன் விறைத்துப் போன தனது கைகளைச் சட்டைக்குள் திணித்துக்கொண்டான்.

நிகிட்டா பதில் சொல்லவில்லை.

'இப்போ, நண்பரே, சுறுசுறுப்பு பெற்றுக்கொள்ளும்!' என்று அவன் குதிரையிடம் கத்தினான். அவன் லகானை பலமாக அசைத்து ஆட்டிய போதிலும் குதிரை மெதுவான நடையிலே தான் முன் சென்றது.

சில இடங்களில் பனி முழங்கால் அளவுக்கு நிறைந்து கிடந்தது. குதிரையின் ஒவ்வொரு அசைவுக்கும் தகுந்தபடி வண்டி குலுங்கிக் குலுங்கி நகர்ந்து சென்றது.

வண்டியின் முன்புறத்தில் தொங்கிய சாட்டையை எடுத்து நிகிட்டா ஒருமுறை குதிரையை அடித்தான். அதுவரை சாட்டை அடி பெற்றிராத நல்ல குதிரை முன்னுல் பாய்ந்து, கொஞ்சம் குதித்து ஓடியது. ஆனுல் உடனடியாக வேகத்தைக் குறைத்தும், பிறகு மிக மெதுவாகவும் நடக்கத் தொடங்கியது. இவ்விதம் ஐந்து நிமிஷ நேரம் அவர்கள் போனுர்கள்.

இருட்டு சூழ்ந்துவிட்டது. பனி மேலேயிருந்து சுழன்று இறங்கியது. கீழேயிருந்து பொங்கி எழுந்தது. அதனுல் சில சமயங்களில் வண்டியின் சட்டங்கள் கூடக் கண்ணுக்குத் தெரியாமல் போய்விடும். சில சமயம் வண்டி அசையாமல் நிற்பது போலவும், வயல் பின் நோக்கி ஓடுகிற மாதிரியும் தோன்றியது. ஒரு இடத்தில் குதிரை சடக்கென்று நின்றுவிட்டது. தனக்கு முன்னுல் மிக அருகாமையில் ஏதோ இருப்பதை அது உணர்ந்திருக்க வேண்டும்.

நிகிட்டா மறுபடியும் வெளியே குதித்தான். வார்களை வண்டியில் போட்டுவிட்டு, குதிரை ஏன் அவ்வாறு நின்றுவிட்டது என்று கவனிப்பதற்காக அவன் முன் பக்கம் போனுன், குதிரைக்கு முன்னுல் அவன் ஒரு எட்டு கூட எடுத்துவைத்திருக்கமாட்டான். அதற்குள் கால்கள் வழுக்கிவிட்டன. அவன் ஒரு சரிவிலே உருண்டு உருண்டு கீழ் நோக்கிச் சென்றுன்.

அப்படி விழுகிற பொழுதே 'ஹோ, ஹோ, ஹோ!' என்று தனக்குத் தானே சொல்லிக் கொண்டான் அவன். விழுவதைத் தடுத்து எழுந்து நிற்க வேண்டும் என அவன் முயன்றும் முடியாது போயிற்று. இழுபட்டு வந்து பள்ளத்தின் அடியிலே சேர்ந்து கிடந்த

கனமான பனிப்பரப்பிற்குள் கால்கள் புகுந்துவிட்ட பிறகுதான் அவன் உருளுவதை நிறுத்த முடிந்தது.

பள்ளத்தின் மேல் விளிம்பில் தொங்கிய பனிப் பாளத்தின் ஓரம் நிகிட்டாவின் வீழ்ச்சியிஞல் பாதிக்கப் பட்டிருந்தது. அதிலிருந்து சிலும்பல்கள் அவன்மேல் உதிர்ந்தன; கழுத்துக் காலரினுள்ளே புகுந்தன.

'சே, என்ன வேலை இது!' என்ருன் நிகிட்டா. பனி ஓட்டத்தையும் பள்ளத்தையும் பார்த்துக் குறை கூறும் தோரணையில் பேசினுன் அவன். பிறகு காலருக்குள்ளே போய்விட்ட பனியை வெளியே உதறுவதில் முனைந்தான்.

'நிகிட்டா! ஏய் நிகிட்டா!' என்று வாஸிலி ஆன்ட்ரீவிச் மேலேயிருந்து கத்தினுன்.

ஆனல் நிகிட்டா பதில் குரல் கொடுக்க வில்லை. பனியைத் தட்டி உதறுவதிலும், சரிவில் உருண்டு விழுந்த போது தவற விட்டு விட்ட சவுக்கைத் தேடுவதிலும் அவன் தீவிரமாக ஈடுபட்டிருந்தான். சவுக்கைக் கண்டுபிடித்ததும் அவன் உருண்டு விழுந்த இடத்துக்கு நேராகவே ஏறிக் கரை சேர முயன்ருன். ஆனல் அப்படிச் செய்வது சாத்தியமில்லாமல் போய்விட்டது. திரும்பத்திரும்ப உருண்டு விழுந்து கொண்டேயிருந்தான் அவன். ஆகவே பள்ளத்தின் அடியிலேயே நடந்து, மேலே ஏறிச் செல்வதற்கு வசதியான வழியைக் கண்டுபிடிக்க வேண்டியதாயிற்று. சுமார் ஏழு கஜ தூரம் தள்ளிச் சென்றதும், கால்களையும் கைகளையும் ஊன்றிக்கொண்டு சிரமப்பட்டு சரிவின் மீது ஊர்ந்து ஊர்ந்து மேலே ஏற முடிந்தது அவஞல். உயரே வந்ததும் அவன் பள்ளத்து விளிம்பின் ஓர

மாகவே நடந்து, குதிரை நின்றிருக்க வேண்டிய இடம் தேடிச் சேர்ந்தான். அங்கே குதிரையையோ வண்டியையோ காணமுடியவில்லை. எனினும், காற்றை எதிர்த்து அவன் நடக்கத் தொடங்கியதும் வாஸிலி ஆன்ட்ரீவிச்சின் கூப்பாடுகளேயும், முக்கார்ட்டியின் கனேப்பையும் அவனுல் கேட்க முடிந்தது.

'நான் இதோ வருகிறேன். வந்து கொண்டிருக்கிறேன். எதற்காக இப்படிக் கூச்சல் போடுகிறீர்கள்?' என்று முனங்கினுன் அவன்.

வண்டிக்குப் பக்கத்தில் வந்த பின்னரே, குதிரையையும் அதன் அருகே பூதாகாரமாகத் தோன்றும்படி நின்ற வாஸிலியையும் அவன் கண்டுகொள்ள முடிந்தது.

'நாசமாய்ப் போன நீ எங்கே தொலேந்து போனுய்? நாம் திரும்பிவிட வேண்டியது தான். கிரிஷ்கினேவுக்கே போனுலும் சரி' என்று வாஸிலி நிகிட்டாவைக் கடிந்து கொண்டான்.

'திரும்பிப் போக எனக்கும் சந்தோஷமாகத் தானிருக்கும், வாஸிலி ஆன்ட்ரீவிச். ஆனுல் நாம் எந்த வழியாகப் போவது? இங்கே பெரிய கணவாய் ஒன்று இருக்கிறது. அதற்குள்ளே ஒரு தடவை விழுந்து விட்டால், அப்புறம் வெளியேறுவது என்பது சாத்திய மில்லே. அங்கே அகப்பட்டுக்கொண்டு திணறிய நான் வெளியேறி வந்தது பெரும்பாடுதான்' என்ருன் நிகிட்டா.

'பின்னே நாம் என்ன செய்வது? இங்கேயே தங்கியிருக்க முடியாது. நாம் எங்காவது போய்த்தான் ஆக வேண்டும்' என்று வாஸிலி சொன்னுன்.

நிகிட்டா ஒன்றும் பேசவில்லை. அவன் காற்றுக்கு நேராக முதுகைத் திருப்பிக்கொண்டு வண்டியில் உட்கார்ந்தான். தனது பூட்ஸைக் கழட்டி, அவற்றினுள் புகுந்து கிடந்த பனித்தூள்களை வெளியே கொட்டினான். பிறகு வண்டியின் அடியிலிருந்து கொஞ்சம் வைக்கோலை உருவி, இடது கால் பூட்ஸில் ஏற்பட்டிருந்த ஓட்டையில் கவனமாகச் சொருகி அடைத்தான் அவன்.

வாஸிலி ஆன்ட்ரீவிச் மௌனமாகி விட்டான், இப்பொழுது அனைத்தையும் நிகிட்டாவின் பொறுப்பில் விட்டுவிட்டவன் போல. நிகிட்டா மறுபடியும் பூட்ஸை அணிந்து, தனது கால்களை வண்டியினுள் இழுத்துக் கொண்டான். பிறகு, கை உறைகளை மாட்டிக்கொண்டு குதிரை வார்களைப் பற்றினான். கணவாயின் ஓரமாகவே குதிரையை நடத்திச் சென்றான் அவன். ஆயினும் அவர்கள் நூறு கஜ தூரம்கூட முன்னேறவில்லை. அதற்குள் குதிரை மறுபடியும் நின்றுவிட்டது. மீண்டும் அதற்கு முன்னால் கணவாய் வந்துவிட்டது.

ஆகவே நிகிட்டா திரும்பவும் கீழே இறங்கினான். மீண்டும் பனியில் கால்களை இழுத்து இழுத்து நடக்கலானான். வெகு நேரம் அவன் இப்படிச் செய்தான். கடைசியில், புறப்பட்டுச் சென்ற இடத்திற்கு எதிர் திசையிலிருந்து வந்து சேர்ந்தான் அவன். 'வாஸிலி ஆன்ட்ரீவிச், உயிரோடு இருக்கிறீர்களா?' என்று கூவினான்.

'இதோ இருக்கிறேன். என்ன ஆயிற்று?' என்று பதிலளித்தான் வாஸிலி.

'என்னால் ஒன்றும் கண்டுபிடிக்க முடியவில்லை. ஒரே இருட்டாக இருக்கிறது. எங்கு பார்த்தாலும்

கணவாய்களே தென்படுகின்றன. நாம் மறுபடியும் காற்றை எதிர்த்துப் போகவேண்டியது தான்.'

எனவே அவர்கள் மீண்டும் கிளம்பினுர்கள். மீண்டும் நிகிட்டா பனியினூடே தட்டுத்தடுமாறி நடந்தான்; மறுபடியும் உள்ளே விழுந்தான்; திரும்பவும் ஏறி வந்தான்; மறுபடி அங்குமிங்குமாக அலேந்தான். கடைசியில், ஓய்ந்து போய் திரும்பி வந்து வண்டியின் அருகே உட்கார்ந்து விட்டான்.

'சரி, இனிமேலே ?' என்று கேட்டான் வாஸிலி.

'நான் மிகவும் ஓய்ந்து போனேன். குதிரையும் இனி நடக்காது.'

'அப்படியானுல் என்ன செய்வது ?'

'கொஞ்ச நேரம் பொறுத்திருங்கள்.'

நிகிட்டா மறுபடியும் எழுந்து சென்றுன். ஆனுல் சீக்கிரமே திரும்பி வந்தான்.

'என் பின்னுலேயே வாருங்கள்!' என்று சொல்லி, அவன் குதிரைக்கு முன்னுல் சென்றுன்.

வாஸிலி ஆன்ட்ரீவிச் இப்பொழுதெல்லாம் உத்திரவுகள் இட விரும்ப வில்லே. அதற்கு மாருக நிகிட்டா சொல்லியவாறே செயல்புரிந்தான்.

'இங்கே, இப்படி வாருங்கள்' என்று நிகிட்டா சத்தம் போட்டான். வேகமாக வலது பக்கம் அடி எடுத்து வைத்து அவன் கடிவாளத்தைப் பற்றிக் கொண்டு முக்கார்ட்டியை பனி ஓட்டம் ஒன்றை நோக்கி இழுத்துச் சென்றுன்.

முதலில் குதிரை பின்வாங்கியது. அப்புறம், பனி ஓடையைத் தாண்டி விடலாம் என்ற நம்பிக்கையோடு

முன்னால் குதித்தது. ஆனால் அவ்வளவு பலம் அதற்கு இல்லை. அதனால் அது தோள்பட்டை வரை பனியில் ஆழ்ந்து விட்டது.

'வெளியே வாருங்கள்!' என்று, வண்டிக்குள்ளேயே உட்கார்ந்திருந்த வாஸிலியை நோக்கி, நிகிட்டா சொன்னான். ஒரு பக்கத்துச் சட்டத்தைத் தூக்கிப்பற்றி வண்டியை குதிரையோடு சேர்த்துப் பிடித்தான்.

'சிரமம்தான் தம்பி. ஆனால் தவிர்ப்பதற்கு இல்லையே. முயற்சி பண்ணிப் பாரு!' என்று முக்கார்ட்டிக்கு உபதேசித்தான் அவன். 'ஊம். ஊம். ஒரு சிறு முயற்சி!' என்று கத்தினான்.

குதிரை ஒரு முறை பலமாக இழுத்தது. மறுபடியும் இழுத்தது. ஆனால் அது தன்னை வெளியே இழுத்துக்கொள்ள இயலவில்லை. ஆகவே, எதைப் பற்றியோ ஆலோசிப்பது போல அது அசையாமல் நின்றுவிட்டது.

'இப்ப இது சரிப்படாது தம்பி! திரும்பவும் முயற்சி பண்ணு!' என்று உபதேசித்தான் நிகிட்டா. தனது பக்கத்தில் உள்ள சட்டத்தைப் பற்றி வலிந்து இழுத்தான் அவன்.

அதே விதமாக வாஸிலி தனது பக்கத்தில் செயல் புரிந்தான். முக்கார்ட்டி தன் தலையை உயர்த்திக் கொண்டு சடாரென்று ஒரு இழுப்பு இழுத்தது.

'அப்படித்தான்! அப்படித்தான்! பயப்படாதே. நீ மூழ்கிவிட மாட்டாய்' என்று நிகிட்டா உற்சாகப் படுத்தினான்.

ஒரு பாய்ச்சல். அப்புறம் ஒன்று. மூன்றுவதாக ஒன்று. கடைசியில் முக்கார்ட்டி பனி ஓட்டத்தை விட்டு வெளியேறிவிட்டது. அது அசையாது நின்று பெரு மூச்சு உயிர்த்தது. பிறகு தன் தேகத்தைச் சிலிர்த்து பனியை உதறிக்கொண்டது. அதை மேலும் நடத்திச் செல்ல விரும்பினுன் நிகிட்டா.

ஆனுல், ரோமம் நிறைந்த இரண்டு கோட்டுகள் அணிந்திருந்த வாஸிலி ஆன்ட்ரீவிச்சுக்கு நெடுமூச்சு வாங்கியது. மேற்கொண்டு அடி எடுத்து வைக்க முடியவில்லை அவனுல். அதனுல் அவன் வண்டியி னுள்ளே சாய்ந்துவிட்டான். 'நான் சரியாக மூச்சு விடட்டும்!' என்று சொன்னுன். அவன் கிராமத்தி லிருந்து புறப்படும்போதே ரோம அங்கியின் காலரை இறுக்கிக் கட்டி வைத்திருந்த கைக்குட்டையை இப் பொழுது அவிழ்த்துவிட்டான்.

'இங்கே நன்ருகத்தான் இருக்கிறது. நீங்கள் அங்கேயே படுத்திருக்கலாம். நான் இதை வழி நடத் திச் செல்கிறேன்' என்று நிகிட்டா தெரிவித்தான். வாஸிலியை வண்டியில் வைத்து அவன் குதிரையின் லகானைப் பற்றி முன்னுல் இட்டுச் சென்ருன். சுமார் பத்து அடி தூரம் கீழ் நோக்கிச் சென்ருன். பிறகு சிறிய ஏற்றம் ஒன்றின் மீது நடத்திச் சென்ருன். அப்புறம் நின்று விட்டான்.

நிகிட்டா நின்ற இடம் முற்றிலும் பள்ளமான பகுதியில் இல்லை. அப்படி இருந்தால், குன்றுகளி லிருந்து அடித்து வரப்பெற்ற பனி அவர்களை ஒரே அடியாக மூடிப் புதைத்திருக்கும். இந்த இடம் கணவாயின் ஒரு புறமாக, காற்றுக்கு ஓரளவு அடக்கமாக,

அமைந்திருந்தது, காற்று ஓர் சிறிது ஒடுங்கி விட்ட தாக எண்ண வைத்த சந்தர்ப்பங்கள் அநேகம் ஏற் பட்டன. ஆனால் அவை நீடித்திருக்கவில்லை. கொஞ்சம் வேகம் குறைந்ததற்கு ஈடு செய்வது போல புயல் பத்து மடங்கு பலத்துடன் கீழ்நோக்கிப் பாய்ந்தது; கடுமையாகப் பிய்த்து அடித்துச் சுழன்றது.

வாஸிலி ஆன்ட்ரீவிச் சுவாசம் சரியாகப் பெற்ற தும் வண்டியிலிருந்து இறங்கி, இனிமேல் தாங்கள் என்ன செய்யவேண்டும் என்று ஆலோசிப்பதற்காக நிகிட்டாவிடம் சென்ற தருணத்தில் இத்தகைய காற்று வீச்சுதான் அவர்கள் மேல் சாடியது. அவ் விருவரும் தாமாகவே பணிந்து தாழ்ந்து, காற்றின் வேகம் தணியட்டும் என்று காத்திருந்தனர். முக்கார்ட்டி கூடத் தனது காதுகளைப் பின்பக்கமாகச் சாய்த்து ஒடுக்கி, அதிருப்தியோடு தலையை அசைத்துக் கொண்டது.

காற்றின் கடுந்தாக்குதல் குறைந்த உடனேயே நிகிட்டா கையுறைகளைக் கழற்றி, அவற்றை இடுப்புக் கச்சையில் சொருகிவைத்தான். தனது கைகள் மீது வாயினால் ஊதிக்கொண்ட பிறகு, அவன் வண்டிச் சட்டத்தின் இணைப்புகளை அவிழ்க்கத் தொடங்கினான்.

'அங்கே என்ன செய்கிறாய்?' என்று வாஸிலி கேட்டான்.

'வண்டியிலிருந்து குதிரையை அவிழ்த்து விடு கிறேன். செய்வதற்கு வேறு என்ன இருக்கிறது? என்னிடம் இனி பலமே இல்லை' என்று நிகிட்டா தனது செயலுக்கு சமாதானம் கூறுவதுபோல் பேசினான்.

'வண்டியை நாம் வேறு எங்காவது ஓட்ட முடியாதா?'

'ஊகுங். முடியாது. நாம் குதிரையைச் சாகடித்து விடுவோம். ஏன், அந்த அப்பாவிப் பிராணி இப்ப கூட பழைய நிலைமையில் இல்லையே' என்று நிகிட்டா குதிரையைச் சுட்டிக்காட்டினுன். என்ன நேரிடுமோ என்று எதிர்பார்த்து அடக்க ஒடுக்கமாக நின்றது அது. நனைந்து போயிருந்த அதன் விலாப்புறங்கள் பெரு மூச்சினுல் விம்மித் தணிந்து கொண்டிருந்தன.

'ராத்திரிப் பொழுதை இந்த இடத்திலேயே தங்கிக் கழிக்க வேண்டியதுதான்' என்று அவன் சொன்னுன், வசதியான ஏதோ ஒரு விடுதியில் தங்கி விட ஆயத்தம் செய்து கொண்டிருப்பது போல. பிறகு அவன் குதிரையின் கழுத்துப் பட்டைகளை அவிழ்ப் பதில் முனைந்தான். வார்ப் பூட்டுகள் விடுபட்டன.

'ஆனுல் நாம் உறைந்து போக மாட்டோமா?' என்று வாஸிலி கேட்டான்.

'உம். அப்படி நேருமானுல் அதை நாம் தடுத்து விட முடியாது' என்று தெரிவித்தான் நிகிட்டா.

## 6

வாஸிலி ஆன்ட்ரீவிச் ரோமம் நிறைந்த மேல் அங்கிகள் இரண்டு அணிந்திருந்தான். அதனுல் பனி ஓட்டத்தில் போராடி முடித்த பிறகும், கதகதப்பு பெற்றுதான் இருந்தான். என்ருலும் உண்மையாகவே இரவுப் பொழுதை அவர்கள் இருந்த இடத்திலேயே கழித்தாக வேண்டும் என்று புரிந்து கொண்டதும் அவன் முதுகந்தண்டில் 'சில்'லெனக் குளிர் உணர்வு

ஊர்ந்தது போலிருந்தது. தன்னைத் தானே சாந்தப் படுத்திக் கொள்வதற்காக அவன் வண்டியினுள் உட் கார்ந்து சிகரெட்டுகளையும் தீக்குச்சிகளையும் வெளியே எடுத்தான்.

நிகிட்டா முக்கார்ட்டியை அவிழ்த்து விடும் வேலையில் கவனமாக இருந்தான். வயிற்றுப் பட்டை யையும் முதுகு வாரையும் அவிழ்த்தான். கடிவாள வார்களை அகற்றினான். கழுத்துப் பட்டையைத் தளரச் செய்தான். சட்டங்களை எடுத்துவைத்தான். இவற்றை எல்லாம் செய்கிறபோதே குதிரையை உற்சாகப்படுத் துவதற்காக அவன் பேசிக்கொண்டே யிருந்தான்.

'இப்போ வெளியே வா. வெளியே வா!' என்று சொல்லி வண்டிச் சட்டங்களுக்கு அப்பால் அதை இட்டுச் சென்றான். 'இப்ப நான் உன்னை இங்கே கட்டிப் போடுவேன். உன் முன்னால் வைக்கோல் போட்டு வைக்கிறேன். உனது கடிவாளத்தையும் கழற்றி விடுகிறேன். கொஞ்சம் வைக்கோலைக் கடித்த உடனேயே உனக்கு உற்சாகம் ஏற்பட்டுவிடும்' என்றான்.

ஆயினும் முக்கார்ட்டி அமைதி இழந்து தவித்தது. நிகிட்டாவின் பேச்சுகளினால் அது ஆறுதல் அடைய முடியவில்லை என்பது நன்றாகத் தெரிந்தது. ஒரு கணம் அது ஒரு காலை எடுத்து வைத்து நின்றது. மறுகணம் காலைமாற்றி வேறொன்றின் மீது நிற்கும் வண்டியோடு ஒடுங்கி நெருங்கியது அது. தனது பின் புறத்தைக் காற்றின் பக்கமாகத் திருப்பிக்கொண்டு, தன் தலையை நிகிட்டாவின் கையில் உரசியது. அப் புறம், அவன் தந்த வைக்கோலை மறுதளித்து நிகிட் டாவுக்கு மனவருத்தம் உண்டாக்க விரும்பாததுபோல,

வண்டிக்குள்ளிருந்து ஒரு வாய் வைக்கோலைக் கவ்வி இழுத்தது. ஆனால் உடனடியாகவே வைக்கோலைப் பற்றி நினைப்பதற்கு இது தருணமல்ல என்று முடிவு கட்டி விட்ட மாதிரி அதைக் கீழே போட்டது. உடனே காற்று அதைச் சிதறியது; அள்ளி எடுத்து அப்பால் எறிந்தது ; பனியினால் மூடி மறைத்தது.

'இப்போது நாம் இங்கே ஒரு அடையாளம் அமைப்போம்' என்று நிகிட்டா சொன்னான். அவன் வண்டியின் முன்பக்கத்தைக் காற்றுக்கு நேராகத் திருப்பினான். அதன் சட்டங்களை ஒரு வாரினால் சேர்த்துக் கட்டி, முன்புறத்தில் வண்டிக்கு மேலாக நட்டுவைத்தான், 'இப்ப சரியாகப் போச்சு. பனி நம்மை மூடிவிட்டாலும் கூட' நல்ல மனிதர்கள் இந்தச் சட்டங்களைப் பார்த்ததும் தோண்டி நம்மை வெளியே எடுத்துவிடுவார்கள்' என்றான் அவன் கையுறைகளைத் தட்டி மாட்டிக் கொண்டே அவன் 'பெரியவர்கள் நமக்குக் கற்றுக்கொடுத்த பாடம் இது என்றும் சொன்னான்.

வாஸிலி ஆன்ட்ரீவிச் தனது கோட்டைத் தளர்த்தி விட்டு, பாதுகாப்பிற்காக அதன் விளிம்பைத் தூக்கிப் பிடித்து, கந்தகத் தீக்குச்சிகளை ஒன்றின்பின் ஒன்றாக இரும்புப் பெட்டியின் மீது உராய்ந்து கொண்டிருந்தான். ஆனால் அவனது கைகள் நடுங்கிக் கொண்டிருந்ததால், ஒவ்வொரு தீக்குச்சியும் பற்றிக் கொள்ளாமலே கருகியது. அல்லது சிகரெட்டின் அருகே அவன் உயர்த்துகிற சமயத்தில் காற்றினால் அணைக்கப் பட்டுவிட்டது. இறுதியில் ஒரு குச்சியில் தீ பிடித்துக் கொண்டது. அதன் சுவாலை ஒருகணம் அவனுடைய கோட்டின் ரோமச் செறிவையும், குவிந்

திருந்த விரலில் கிடந்த தங்கமோதிரம் மின்னும் கையையும், முரட்டுக் கம்பளித்துணியின் கீழேயிருந்து வெளியே நீண்டு கிடந்த வைக்கோலில் சிதறிக் கிடந்த பனியையும் வெளிச்சமிட்டுக் காட்டியது. சிக ரெட்டில் நெருப்புப் பற்றியதும் அவன் ஆர்வத்தோடு ஒன்றிரண்டு 'தம்' இழுத்து, அனுபவித்து, புகையை மீசையினூடாக வெளியே விட்டான். அவன் மறுபடி யும் 'தம்' இழுத்திருப்பான். ஆனால் அதற்குள்ளாக தீ படர்ந்த புகையிலையைக் காற்று பிய்த்துக் கிழித்துச் சுழற்றி, முன்பு வைக்கோலை வீசித் தள்ளியது போலவே, விசிறி எறிந்து விட்டது.

எனினும் இந்தச் சிறு ஊதல்கூட அவனை உற் சாகப் படுத்திவிட்டது. 'ராத்திரிப் பொழுதை நாம் இங்கு தான் போக்கவேண்டுமென்றால் அப்படியே செய்யவேண்டியதுதான்!' என்று உறுதியாகச் சொன் னான் அவன். 'கொஞ்சம் இரு. ஒரு கொடிக்கு நான் ஏற்பாடு செய்கிறேன்' என்று சொல்லிவிட்டு, அவன் முன்பு கழுத்திலிருந்து அவிழ்த்து வண்டியில் போட்டி ருந்த கைக்குட்டையை எடுத்தான். தனது கைஉறை களைக் கழற்றிவிட்டு வண்டியின் முகப்பில் ஏறி நின் றான். உயரமாக இருந்த சட்டத்தின் உச்சியை எட் டிப் பிடிப்பதற்காக உன்னி நிமிர்ந்து, அங்குள்ள வாரில் இறுகலான முடிபோட்டு கைக்குட்டையைக் கட்டிவைத்தான்.

அந்தக் கைக்குட்டை உடனடியாகவே சட்டத் தோடு ஒட்டிச் சுற்றிக்கொண்டும், திடீரென விடு பட்டு வெளிப்புறமாக நெளிந்தும் நீண்டும், அசைந்து பறந்தும் வெறித்தனமாகக் காற்றில் படபடக்கத் தொடங்கியது.

'எவ்வளவு அருமையான கொடி பார்!' என்று வாஸிலி தனது கைவண்ணத்தைத்தானே வியந்து போற்றியவாறே, வண்டியினுள் நழுவினான். 'நாம் ஒன்றாகச் சேர்ந்து இருந்தால் கதகதப்பாகத் தானிருக்கும். ஆனால் உள்ளே இரண்டு பேருக்கு இடமில்லையே' என்றான் அவன்.

'எனக்கு இடம் நான் பார்த்துக்கொள்கிறேன். முதலில் நான் குதிரையை நன்றாகப் போர்த்தியாக வேண்டும். பாவம், அதற்கு ஏகமாக வேர்த்துவிட்டது. சரி, இதை விடுங்கள்' என்று கூறி நிகிட்டா, வாஸிலிக்குக் கீழே கிடந்த முரட்டுக் கம்பளித் துணியைப் பற்றி இழுத்தான்.

அதை வெளியே எடுத்ததும் இரண்டாக மடித்தான். குதிரை மீது கிடந்த சேணத்தையும் பட்டைகளையும் நீக்கிவிட்டு கம்பளியைப் பரப்பி அதை மூடினான். 'எப்படியானாலும் இன்னும் கொஞ்சம் உஷ்ணமாக இருக்கட்டுமே!' என்று முனங்கி, பட்டைகளையும் சேணத்தையும் திரும்பவும் குதிரைமீது கம்பளிக்கும் மேலாகப் போட்டு வைத்தான்.

அந்த வேலையைக் கவனித்து முடித்த பிறகு அவன் வண்டியின் பக்கம் வந்தான். 'அந்தச் சாக்குத் துணி உங்களுக்குத் தேவைப் படாது. இல்லையா? எனக்குக் கொஞ்சம் வைக்கோலும் கொடுங்கள்' என்று வாஸிலியிடம் சொன்னான் அவன்.

வாஸிலிக்குக் கீழேயிருந்து இவற்றை எடுத்துக் கொண்டதும் நிகிட்டா வண்டியின் பின்புறமாகச் சென்று பனியில் தனக்காக ஒரு குழி பறித்தான். அதில் வைக்கோலைப் பரப்பிவிட்டு, தனது உடம்பில்

கோட்டை நன்ருகச் சுற்றி இறுக்கி, சாக்குத் துணியால் தன்னை மூடிக்கொண்டான். தொப்பியை நன்ருக இறக்கி இழுத்து விட்ட பிறகு, அவன் விரித்து வைத்த வைக்கோல் மீது உட்கார்ந்து, காற்றையும் பனியையும் தடுத்துத் தன்னைப் பாதுகாத்துக் கொள்வதற்காக வண்டியின் பின் பக்கத்து மரப்பகுதியிலே சாய்ந்து கொண்டான்.

நிகிட்டா செய்கிற காரியங்களை ஏற்றுக் கொள்ளாத முறையிலே தன் தலையை ஆட்டிக் கொண்டான் வாஸிலி ஆன்ட்ரீவிச். பொதுவாகவே குடியானவர்களின் முட்டாள்தனத்தையும் கல்வி அறிவின்மையும் அங்கீகரிக்காதவனைப்போல அவன் தலையசைத்தான். ஆயினும் தான் இரவுப் பொழுதை வசதியாகக் கழிப்பதற்குத் தேவையானவற்றைச் செய்வதில் அவன் முனைந்தான்.

மீதமிருந்த வைக்கோலை வண்டியின் அடிப் பரப்பில் பதமாக விரித்து, தனக்குக் கீழே அதிகமாக வரும்படி கவனித்துக் கொண்டான் அவன். அப்புறம் சட்டையின் கைகளுக்குள்ளே தன் கரங்களைத் திணித்துக் கொண்டு, வண்டியின் மூலையில் தனது தலையை வைத்து முன்பக்கமிருந்து காற்று வராதவாறு தடுத்தபடி சௌகரியமாகப் படுத்து விட்டான்.

அவன் தூங்க விரும்பவில்லை. படுத்தபடியே சிந்திக்கலாஞன். தனது வாழ்வின் தனிப்பெரும் குறிக்கோளாய், அர்த்தமாய், ஆனந்தமாய், மாண்பாக எல்லாம் திகழ்ந்த அந்த ஒரே ஒரு பொருளைப் பற்றித் தான் அவன் சிந்தித்தான். அதுவரை அவன் எவ்வளவு பணம் சேர்த்திருந்தார்; இன்னம் எவ்வளவு

திரட்ட முடியும்; அவன் அறிந்த இதர மனிதர்கள் எவ்வளவு சேர்த்து வைத்திருந்தார்கள்; அவர்கள் எப்படிப் பணம் சேர்த்தார்கள்; இன்னும் எவ்வாறு சேர்த்துக் கொண்டிருந்தார்கள்; அவனும் அவர்களைப் போல மேன்மேலும் அதிகமாகப் பணம் சேகரிப்பது எப்படி என்றெல்லாம் சிந்தனை செய்தான் அவன். கோர்யாச்கின் தோப்பை விலைக்கு வாங்குவது மிகவும் முக்கியமான விஷயமாகப் பட்டது அவனுக்கு. அந்த ஒரு பேரத்தின் மூலம் மட்டுமே பத்தாயிரம் ரூபிள்கள் லாபம் கிட்டலாம் என்று அவன் நம்பினான். தான் இலையுதிர் காலத்தில் பரிசீலனை செய்த மரங்களின் மதிப்பைப் பற்றியும், ஐந்து ஏக்கர் நிலத்திலிருந்த மரங்கள் எல்லாவற்றையும், அவன் எண்ணி முடித்திருந்ததனால், அவற்றின் மொத்த மதிப்பு பற்றியும், இப்பொழுது தன் மனசினால் கணக்குப் பண்ணத் தொடங்கினான்.

'ஓக் மரங்கள் சறுக்கு வண்டிகளுக்காக உபயோகப்படும். தரைமட்டத்தில் வளர்ந்துள்ளவை பலவழிகளில் பயனாகும். இவை எல்லாம் போக ஒவ்வொரு பகுதியிலும் முப்பது வண்டி விறகாவது தேறும்' என்று அவன் தனக்குத் தானே சொல்லிக் கொண்டான். 'அப்படியென்றால் ஒரு பிரிவில் குறைந்தபட்சம் இருநூற்று இருபத்தைந்து ரூபிள்கள் கிடைக்கும் என்றாகிறது. ஐம்பத்தாறு பிரிவுகள் என்றாகிற போது, ஐம்பத்தாறு நூறுகள்; அதோடு ஐம்பத்தாறு நூறுகள்; மேலும் ஐம்பத்தாறு பத்துகள்; இன்னொரு ஐம்பத்தாறு பத்துகள்; அப்புறம் ஐம்பத்தாறு அஞ்சுகள்....' இந்த விதமாக சுமார் பன்னிரண்டாயிரம் ரூபிள்கள் வரும் என்று அவன் கணக்கிட்

டான். கணக்கிடும் சட்டத்தின் துணை இல்லாமல் அதைத்திட்டமாகக் கண்டு பிடிக்க முடியாது அவனால்.

'எப்படியானாலும் சரிதான். நான் பத்தாயிரம் கொடுக்கமாட்டேன். ஏகதேசம் எட்டாயிரம் ரூபிள்கள் கொடுக்கலாம். நடைபாதை, காட்டு வழிகள்—இந்த வகைக்காகக் கொஞ்சம் குறைத்தாக வேண்டும். சர்வேயர் கையிலே கொஞ்சம் வெண்ணெய் தடவினால் சரியாகிவிடும். அவனுக்கு ஒரு நூறு அல்லது நூற்றைம்பது ரூபிள்கள் கொடு. மொத்தத்திலே அஞ்சு பகுதி நிலத்தைக் காட்டு வழிகள் என்று கணக்குப்பண்ணி அவன் தள்ளுபடி செய்து விடுவான். ஆகவே அவன் எட்டாயிரத்துக்குத் தந்து விடுவான். மூவாயிரம் ரொக்கமாகக் கைமேலே. இந்த ஒன்றே அவனை சரிக்கட்டி விடுமே! நமக்கு ஏன் பயம்?' என்று நினைத்து, அவன் தனது பையிலிருந்த பணத்தை முன் கையினால் அழுத்திக் கொண்டான்.

'அந்தத் திருப்பத்தை நாம் எப்படித் தவற விட்டோம் என்பது கடவுளுக்குத் தான் தெரியும். அந்த இடத்திலே தான் காடு இருக்கவேண்டும். காவல்காரனின் குடிசை இருக்கும். நாய்கள் குரைத்துக்கொண்டிருக்கும். ஆனால் நாசமாய்ப் போகிற நாய்கள் தேவைப் படுகிற சமயத்தில் குரைப்பது கிடையாது.'

அவன் காதுகளை மூடி மறைத்திருந்த கழுத்துக் காலரைக் கீழே தணித்து விட்டு கவனித்துக் கேட்டான். எனினும் முன்பு போலவே இப்பொழுதும் காற்றின் கீச்சொலிதான் காதில் விழுந்தது. வண்டிச் சட்டங்களில் கட்டப்பட்டிருந்த கைக்குட்டையின் படபடப்பும் அசை வொலியும், வண்டியின் மரப்

பகுதியில் பட்டுத் தெறித்த பனியின் ஓசையும் தான் ஓயாது கேட்டன. அவன் திரும்பவும் தன் காதுகளை மூடிக் கொண்டான்.

'இப்படி ஆகும் என்று தெரிந்திருந்தால் நான் ராத்திரி வேளைக்கு அங்கே தங்கியிருந்து விட்டே வந்திருப்பேன். உம், பரவாயில்லை. அங்கு நாளை போய்ச் சேர்ந்து விடலாம். ஒரே ஒரு நாள்தான் வீணாகி விட்டது. இத்தகைய குளிர் காலத்தில் மற்ற வர்கள் பிரயாணம் செய்யத் துணிய மாட்டார்கள்.' ஒன்பதாம் தேதி அன்று கசாப்புக் கடைக்காரனிட மிருந்து எருதுகளுக்காகப் பணம் வசூலிக்க வேண்டும் என்பது அப்பொழுது அவன் நினைவில் எழுந்தது. 'அவனே வருவதாகச் சொல்லியிருந்தான். ஆனால் அவன் என்னை வீட்டில் காண முடியாது. பணத்தை எப்படி வரப்பற்றுவது என்கிற விஷயம் என் மனைவிக்குத் தெரியாது. எந்த விஷயத்தையும் சரிவரச் செய்யத் தெரியாது அவளுக்கு' என்று எண்ணிக்கொண்டான் அவன். முந்திய தினம் நடை பெற்ற விருந்தில் அதிதியாகக் கலந்துகொண்ட போலீஸ் ஆபீஸரை எப்படி உபசரிக்க வேண்டும் என்று தெரியாமல் அவள் திண்டாடியது அவனுக்கு நினைவு வந்தது. 'ஆமாம், அவள் பெண்பிள்ளை தானே! அவள் எதை எங்கே பார்த்திருக்கப் போகிறாள்? என் தகப்பனார் காலத்தில் எங்கள் வீடு தான் எப்படி இருந்தது? சாதாரணமாய் ஒரு பணக் காரக் குடியானவன் வீடாகத் தானே? ஒரு மாவுமில், ஒரு விடுதி—இருந்த சொத்து முழுவதும் இவ்வளவு தான். ஆனால் இந்தப் பதினைந்து வருஷ காலத்தில் நான் செய்து முடித்திருப்பது என்ன? ஒரு கடை,

மதுக் கடைகள் இரண்டு, ஒரு மாவு மில், தானியக் கிடங்கு ஒன்று, குத்தகையில் உள்ள பண்ணைகள் இரண்டு, தகரக் கூரை போட்ட களஞ்சியத்துடன் ஒரு வீடு' என்று அவன் பெருமிதத்துடன் நினைத்தான்.

'எங்கள் அப்பா காலத்தில் இருந்த நிலைமை மாதிரி இல்லை. சுற்று வட்டாரம் பூராவும் யாரைப் பற்றிப் பேசிக்கொள்கிறார்கள்? வாஸிலி பற்றித் தான். ஏன்? தொழில் முறையில் தீவிரம் காட்டு வதனால் தான். நான் சிரமம் எடுத்துக்கொள்கிறேன். படுத்துத் தூங்கியும் அசட்டுத்தனங்களில் பொழுது போக்கியும் அநாவசியமாகக் காலம் கடத்துகிற மற்ற வர்களைப் போல் இல்லை நான். இரவு நேரங்களில் கூட நான் தூங்குவது கிடையாது. பனிச் சூறையோ, பனிச் சூறை இல்லையோ, நான் புறப்பட்டு விடுகிறேன். அதனாலே தொழில் நிறைவேறி விடுகிறது. பணம் பண்ணுவது வெறும் தமாஷ் என்று நினைக்கிறார்கள் பலர். அப்படி இல்லை. கஷ்டப்படு. மூளைக்கு வேலை கொடு! இது போல் வெறும் வெளியில் ராத்திரி நேரத்தைக் கழிக்க வேண்டிய நிலைமை ஏற்படும். எத்தனையோ இரவுகளில் தூக்கமே பிடிக்காமல், மண்டைக்குள் சுழல்கிற எண்ணங்களின் காரணமாகத் தலையணையைத் திருப்பித் திருப்பிப் போட வேண்டிய தாகும்!' என்று அவன் இறுமாப்புடன் எண்ணினான். 'அதிர்ஷ்டத்தினால் அநேகர் முன்னுக்கு வந்து விடுவ தாக எல்லோரும் நினைக்கிறார்கள். சரி, மிரோனேவ் குடும்பத்தினர் இப்பொழுது பல லட்சங்களுக்கு அதிபதிகள் ஆகிவிட்டார்கள். அது எதனால்? சிரமப் பட்டு உழைத்தால் கடவுள் கொடுக்கிறார். அவர் எனக்கு நீண்ட ஆயுளைமட்டும் அருள் புரிவாரானால்...!'

ஒன்றும் இல்லாத நிலையிலே வாழ்க்கையைத் தொடங்கி லட்சாதிபதி ஆக உயர்ந்துவிட்ட மிரோனேவ் போல் தானும் தனவந்தன் ஆகிவிடலாம் என்ற நினைப்பே வாஸிலிக்கு மிகுந்த கிளர்ச்சியை ஏற்படுத்தி விட்டது. அதனால் யாருடனாவது பேச்சு கொடுக்கவேண்டும் என்ற துடிப்பு அவனுக்கு உண்டாயிற்று. ஆனால் அங்கு பேசுவதற்கு எவரும் இல்லையே.... அவன் மட்டும் கோர்யாச்கின் போய்ச் சேர முடிந்திருக்குமானால் அங்குள்ள நிலச் சொந்தக் காரரிடம் அவன் எவ்வளவோ பேசியிருப்பான்; ஒன்று அல்லது இரண்டு விஷயங்களைச் செய்து காட்டி யிருப்பான்.

வண்டியின் முன்புறம் மோதி அடித்து, அதை வளையச் செய்து, அதன்மீது பனியை அள்ளிவீசி அறைந்து கொண்டிருந்த கடுங்காற்றின் ஓசையைக் கவனித்த அவன் நினைத்தான்: 'எப்படி வீசுகிறது பார்! நம்மை மூடிவிடுகிற அளவுக்கு பனி விழும் என்று தெரிகிறது. அப்புறம் காலையில் நாம் வெளியே தலைகாட்டவே முடியாது!'

அவன் எழுந்து சுற்றுமுற்றும் பார்த்தான். முக்கார்ட்டியின் கறுத்த தலையையும், காற்றில் ஆடிக் கொண்டிருந்த கம்பளித் துணி மூடிய முதுகையும், முடிச்சு போட்டிருந்த கனத்த வாலையும்தான் சூழ்ந்து கிடந்த இருளினூடாக அவன் கண்டுபிடிக்க முடிந்தது. மற்றப்படி எங்கு பார்த்தாலும், முன்னாலும் பின்னாலும், ஒரே நிலையில் இராத வெளிறிய இருட்டு—கொஞ்ச நேரம் சிறிது வெளிச்சம் பெற்றுவருவது போலவும், பிறகு சிறிது நேரம் மேலும் அதிகமாக இருண்டு

வருவதாகவும் மாறுபட்ட நிலைமைதான் நிறைந்திருந்தது.

நிகிட்டாவின் பேச்சைக் கேட்டது தப்பு. நாம் முன்னேறிப் போயிருக்க வேண்டும். எங்காவது நல்ல இடத்திற்குப் போய்ச் சேர்ந்திருக்கலாம். கிரிஷ்கினோவுக்கே திரும்பிப் போயிருந்தாலும் பரவாயில்லை. டாராஸ் வீட்டில் இரவைக் கழித்திருக்கலாம். இப்பொழுது உள்ள நிலைமையில், ராத்திரி பூராவும் நாம் இங்கே உட்கார்ந்திருக்க வேண்டியதுதான். ஆனால் நான் எதைப்பற்றி எண்ணிக்கொண்டிருந்தேன்? ஆமாம். கஷ்டம் எடுத்துக் கொள்கிறவர்களுக்கே கடவுள் அருள்புரிகிறார்; சோம்பேறிகளுக்கும் தூங்கு மூஞ்சிகளுக்கும் முட்டாள்களுக்கும் அல்ல. இப்போது நான் புகை பிடித்தாக வேண்டும்!' இவ்வாறு நினைத்தான் அவன்.

ஆகவே அவன் மறுபடியும் நன்றாக உட்கார்ந்து, சிகரெட் டப்பாவை வெளியே எடுத்தான். பிறகு வயிற்றின் மீது படுத்து, கோட்டின் விளிம்பால் மறைத்துக் கொண்டு தீக்குச்சிகளைப் பற்றவைக்க முயற்சித்தான். ஆனால் காற்று எப்படியோ உள்ளே புகுந்து, தீக்குச்சிகளை ஒவ்வொன்றாக அணைத்து வந்தது. கடைசியில் அவன் ஒரு குச்சியில் நெருப்பு பிடிக்கச் செய்து, அதன் உதவியால் சிகரெட்டைப் பற்றவைத்து விட்டான். தான் விரும்பிய காரியத்தைச் சாதிக்க முடிந்ததில் அவனுக்கு மிகுந்த மகிழ்ச்சிதான். அவன் புகைத்ததைவிடப் பெரும்பங்கு சிகரெட்டை காற்றே காலி செய்துவிட்ட போதிலும் அவன் இரண்டு மூன்று 'தம்'கள் ஊதமுடிந்தது. அதனால் அவனது உற்சாகம் அதிகரித்தது. திரும்பவும்

அவன் பின்னல் சாய்ந்து தன்னை நன்ருகப் போர்த்திக் கொண்டு, சென்ற கால நிகழ்ச்சிகளை நினைத்துப் பார்ப்பதிலும் சிந்திப்பதிலும் ஈடுபட்டான். திடீரென்று, எதிர்ப்பாராத வகையிலே அவன் தன் நினைவு இழந்து தூக்கத்தில் ஆழ்ந்து விட்டான்.

சடக்கென்று எதுவோ அவனை ஒருதரம் உலுக் கியதாகத் தோன்றவும் அவன் கண் விழித்தான். அப்படிச் செய்தது அவனுக்குக் கீழே கிடந்த வைக் கோலில் கொஞ்சம் கவ்வி இழுத்த முக்கார்ட்டிதானே; அல்லது அவனுள்ளிருந்த எதுவோ தந்த அதிர்ச்சி தானே; எதுவாக இருந்தாலும் அது அவனுக்கு நல்ல விழிப்பைக் கொடுத்துவிட்டது. அவனுடைய இதயம் வேகமாக, மேலும் மேலும் வேகமாக, அடித் துக்கொண்டது. அதனல் அவனிருந்த வண்டிகூடக் குலுங்குவதுபோன்ற பிரமை ஏற்பட்டது அவனுக்கு. அவன் கண்களைத் திறந்தான். அவனைச் சுற்றிலும் உள்ள எல்லாம் முன்போலவே இருந்தன. 'இப் பொழுது வெளிச்சம் அதிகரித்திருப்பதாகத் தோன்று கிறது. விடிவதற்கு இன்னும் ரொம்ப நேரம் பிடிக்காது என்று எதிர்பார்க்கிறேன்' என அவன் எண்ணினன். ஆனல் அதிக வெளிச்சம் பரவியிருந்தது சந்திரன் உதயமாகிவிட்டதனல் தான் என்ற உணர்வு அவனுக்கு உடனடியாகவே ஏற்பட்டது.

அவன் எழுந்து உட்கார்ந்து, முதலில் குதிரை யைக் கவனித்தான். இன்னும் காற்றின் பக்கமாகவே பின்புறத்தைத் திருப்பி வைத்துக்கொண்டு உடம் பெல்லாம் வெடவெடக்க நின்றது அது. பனி நன்கு கவிந்து மூடிவிட்ட கம்பளித் துணியின் ஒரு பகுதி பின்னல் விசிறித் தள்ளப்பட்டுக் கிடந்தது. அதன்

மேலாகப் போட்டிருந்த கனத்த துணி நழுவிக் கீழே விழுந்திருந்தது. பனி படிந்த தலையும், அதன் முன்னால் ஆடி அசையும் மயிர்க்கற்றையும், பிடரி மயிரும் இப்பொழுது பார்வையில் நன்றாகத் தென் பட்டன.

வாஸிலி ஆன்ட்ரீவிச் வண்டியின் பின்பக்கமாக எட்டிப் பார்த்து அங்குள்ளவற்றைக் கவனித்தான். முதலில் எப்படி உட்கார்ந்தானோ அதே நிலையில் தான் இன்னும் இருந்தான் நிகிட்டா. அவனை மூடிக் கிடந்த சாக்கும், அவனுடைய கால்களும் பனியினால் கனமாக மூடப்பட்டுவிட்டன.

'அந்தக் குடியானவன் குளிரினால் விறைத்துச் சாகாமல் இருந்தால் போதும்! அவனுடைய உடுப்புகள் படுமோசமாக உள்ளன. அவனுக்காக நான் தான் பொறுப்பு ஏற்றுக்கொள்ள நேரிடும் என்ன உபயோகமற்ற ஜனங்கள் அவர்கள்—கல்வி அறிவு இல்லாதவர்கள்!' என்று வாஸிலி எண்ணினான். குதிரை மீது கிடந்த கம்பளித் துணியை எடுத்து நிகிட்டா மேலே போட்டு மூடிவிடலாம் என்றுகூடத் தோன்றியது அவனுக்கு. ஆனால் வெளியே இறங்கி நடமாடுவது என்றால் ரொம்பவும் குளிராக இருக்குமே; அதுவும்போக, குதிரை விறைத்துப்போய் செத்தாலும் செத்துவிடுமே. 'இவனை நான் ஏன் என்னுடன் அழைத்துவந்தேன்? எல்லாம் அவளுடைய முட்டாள் தனத்தினால்தான்!' என்று அவன், தனக்குப் பிடிக்காத தன் மனைவியைப் பற்றி எண்ணிக் கொண்டான்.

எனவே, அவன் வண்டியின் முன்புறத்தில் உள்ள தனது பழைய இடத்திலேயே உருண்டு படுத்தான். 'என்னுடைய மாமா ஒரு சமயம் ஒரு ராத்திரி பூராவும்

இது போல் கழித்தது உண்டு. எல்லாம் சரியாகவே முடிந்தது' என்று அவன் நினைத்தான். ஆனால் வேறொரு விஷயமும் உடனேயே அவன் நினைவில் எழுந்தது. 'செபஸ்டியனைத் தோண்டி எடுத்த போது அவன் செத்துப் போயிருந்தான்—ஒரே விறைப்பாக, பனியில் உறைந்த சவம் மாதிரி. நான் மட்டும் கிரிஷ்கினோவில் தங்கி இரவைப் போக்கியிருந்தால் இதெல்லாம் ஏற்பட்டே இருக்காது!'

அவன் சிரத்தையோடு தனது கோட்டை இழுத்துச் சுற்றிக் கொண்டான். ரோமச் சட்டையின் உஷ்ணம் கொஞ்சம் கூட வீணாகிவிடக் கூடாது; தன் உடம்பு முழுவதும், கழுத்து, முழங்கால், பாதங்கள் எங்கும் கதகதப்பு ஏற்படுத்த வேண்டும் என்று அவன் சிரமப்பட்டான். பிறகு கண்களை மூடிக்கொண்டு தூங்குவதற்கு முயற்சி செய்தான். ஆனால் என்ன தான் முயன்ற போதிலும் அவனால் தூக்கக் கிரக்கம் பெற முடியவேயில்லை. அதற்கு மாறாக விழிப்பும் உணர்ச்சிக் குறுகுறுப்புமே அதிகம் பெற்றான் அவன். மறுபடியும் அவன் தனது லாபங்களையும் தனக்குச் சேரவேண்டிய கடன்களையும் கணக்குப் பண்ணத் தொடங்கினான். மீண்டும் தனக்குத் தானே வீண் பெருமை பேசிக்கொள்ள ஆரம்பித்தான். தன்னைப் பற்றியும், தனது அந்தஸ்து பற்றியும் மிகுந்த திருப்தி அடைந்தான் அவன். ஆயினும், ரகசியமாக நெருங்கி வந்து கொண்டிருந்த ஒரு பயத்தினாலும், கிரிஷ் கினோவில் தங்காமல் போனோமே என்ற நினைப்பு தந்த கசப்பான வருத்தத்தினாலும் இவை எல்லாம் அடிக்கடி கலைக்கப்பட்டுவந்தன.

'ஒரு பெஞ்சு மீது கதகதப்பாகப் படுத்துக் கிடந்தால் அதன் சுகம் எவ்வளவு விசேஷமானதாக இருக்கும்!' இவ்விதம் எண்ணிய அவன், காற்றிலிருந்து இன்னும் அதிகப் பாதுகாப்புடனும், இப்பொழுதை விட அதிகமான சௌகரியத்தோடும், படுத்துக் கிடக்க முயற்சிகள் செய்ததனுல், அநேக தடவைகள் உருண்டு புரண்டான். கால்களை நெருக்கிச் சுருட்டிக்கொண்டு, கண்களை மூடியவாறு, அசையாமல் கிடந்தான். ஆனுல் தடித்த தோல் பூட்ஸினுள் கட்டுண்டிருந்த கால்கள் வெகு நேரம் ஒரே நிலையில் இருந்தால் வலி எடுக்க ஆரம்பித்தது. அல்லது காற்று வேறொரு புறத்திலிருந்து உள்ளே நுழைந்து தொல்லை கொடுத்தது.

கொஞ்ச நேரம் அமைதியாகப் படுத்துக் கிடந்த பிறகு, மனக்குழப்பம் ஏற்படுத்தும் அவ் வுண்மையை—இந்த நேரத்தில் தான் கிரிஷ்கினேவில் உஷ்ணம் நிறைந்த குடிசையில் அமைதியாகப் படுத்துத் தூங்கிக் கொண்டிருக்கலாமே என்று—மீண்டும் நினைவுக்குக் கொண்டு வந்து அவதியுற்ருன் அவன். ஆகவே அவன் திரும்பவும் எழுந்து உட்கார்ந்தான்; சுற்றிலும் பார்த்தான்; இழுத்துப் போர்த்தினுன்; மீண்டும் பழையபடியே படுத்தான்.

ஓர்முறை தூரத்தில் எங்கோ கோழி கூவியதைக் கேட்டதாக அவன் எண்ணிக்கொண்டான். அவனுக்கு சந்தோஷம் உண்டாயிற்று. மேல் சட்டையின் காலரைத் தணித்து விட்டு, சிரமத்தோடும் சிரத்தையோடும் காது கொடுத்துக் கேட்க முயன்ருன், ஆயினும் அவன் எவ்வளவோ முயற்சித்தும் எதுவும் காதில் விழவில்லை. சட்டங்களினூடே சீறிப் பாயும்

காற்றின் ஒலியும், கைக்குட்டையின் படபடப்பும், வண்டி மீது சாடுகிற பனியின் ஓசையும்தான் ஓயாது நிலைத்திருந்தன.

நிகிட்டா எப்பொழுதும் இருந்தது போலவே உட்கார்ந் திருந்தான். அவன் அசையவுமில்லை; இரண்டு முறைகள் அவனை அழைத்த வாஸிலிக்கு பதில் சொல்லவுமில்லை. வாஸிலி ஆன்ட்ரீவிச் வண்டிக்குப் பின்னுல் எட்டிப் பார்த்தபோது நிகிட்டா கனமான பனிப்பரப்பினுல் மூடப்பட்டு உட்கார்ந்திருப்பதைக் கண்டான். 'அவன் கொஞ்சம் கூடக் கவலைப்பட வில்லை. நன்ருகத் தூங்குகிருன் போலிருக்கிறது!' என்று எரிச்சலோடு முனங்கினுன் அவன்.

வாஸிலி ஆன்ட்ரீவிச் மேலும் இருபது தடவைகள் எழுந்தான்; படுத்தான். இரவுக்கு முடிவே கிடையாது என்றுதான் அவனுக்குத் தோன்றியது. ஒரு முறை அவன் எழுந்து உட்கார்ந்து சுற்று முற்றும் பார்த்து விட்டு நினைத்தான்: 'விடிகிற நேரம் வந்திருக்க வேண்டும். எனது கடியாரத்தை எடுத்துப் பார்க்க லாமே. பொத்தானை அவிழ்த்தால் குளிர ஆரம்பித்து விடும். இருந்தாலும், விடியற்காலைப் பொழுது வந்து விட்டது என்று தெரிந்து கொள்ள முடிந்தால், நான் இன்னும் அதிகமான உற்சாகம் அடையக் கூடுமே! வண்டியைப் பூட்ட ஆரம்பித்து விடலாமே.'

விடிவதற்கு உரிய நேரம் அதற்குள்ளாக வந்திருக்க முடியாது என்கிற உண்மையை அவனது உள்ளத்தின் ஒரு பகுதி வாஸிலிக்கு உணர்த்தியது. ஆயினும் அவனுடைய பயம் அதிகம் அதிகமாக வளர்ந்து வந்தது. உண்மையான நிலைமையை அறிய வேண்டும் எனும் அவாவும் இருந்தது;

தன்னைத் தானே ஏமாற்றிக் கொள்ளும் விருப்பமும் இருந்தது அவனுக்கு. அவன் தனது மேல் அங்கியின் பிணைப்பை நிதானத்தோடு தளர்த்தி, உள்ளே கையை நுழைத்து, உள்சட்டைக்குள் திணிப்பதற்கு முந்தி வெகு நேரம் தடவித் திண்டாடினன். மிகுந்த சிரமத்துக்குப் பிறகு அவன் தனது வெள்ளிக் கடியாரத்தை வெளியே இழுத்தான். எனமல் பூசி, பூ வேலைகள் செய்யப் பட்டிருந்த அக் கடியாரத்தினல் மணியை அறிந்து கொள்ள முயன்ருன் அவன். வெளிச்சம் இல்லாமல் அவனல் எதையும் பார்க்க முடியவில்லை.

ஆகவே, சிகரெட்டைப் பற்ற வைப்பதற்கு முயற்சித்த போது செய்தது போலவே, அவன் மறுபடியும் முட்டு மண்டியிட்டு முன்கைகளை ஊன்றிக் கொண்டு, தீக்குச்சிகளை வெளியே எடுத்து ஒரு குச்சியைக் கிழிக்க முனைந்தான். இந்தத் தடவை அவன் சர்வ ஜாக்கிரதையோடு முயற்சி செய்தான். தீக்குச்சிகள் எல்லாவற்றிலும் மிகப் பெரிய தலையும் அதிகப்படியான பாஸ்பரஸ் மருந்தும் பெற்றிருந்த குச்சியாகத் தேடிப் பிடித்து ஒன்றை எடுத்து முதல் தடவையிலேயே கொளுத்தி விட்டான். கடியாரத்தின் முகப்பை வெளிச்சத்தின் அருகே கொண்டு வந்து பார்த்த போது அவனல் அவன் கண்களை நம்பவே முடியவில்லை.... அப்பொழுது மணி பன்னிரண்டு ஆகிப் பத்து நிமிஷங்களே கழிந்திருந்தன. இன்னும் இரவு முழுமையும் அவன் முன்னல் காத்து நின்றது.

'ஓ, எவ்வளவு நெடிய இரவு!' என்று எண்ணினன் அவன். குளிரின் சிலிர்ப்பு தனது முதுகின் மேல் ஊர்வதை உணர்ந்ததும், ரோமச் சட்டைகளை இழுத்து மாட்டி மேலும் நன்ருகப் போர்த்திக் கொண்டு,

பொறுமையோடு காத்திருக்க வேண்டியதுதான் என்று வண்டியின் ஒரு மூலையில் முடங்கினான் அவன். காற்றின் மாறுபாடில்லாத கதறலைக் கிழித்து திடீரென்று வேறொரு புதிய ஒலி—ஜீவனுள்ள குரல்—எழுந்ததை அவன் தெளிவாக அறிந்தான். அது படிப்படியாக உயர்ந்து ஓங்கி மிகத் தெளிவாக ஒலித்து பிறகு கொஞ்சம் கொஞ்சமாகத் தேய்ந்து கரைந்தது. அது ஒரு ஓநாய் தான் என்பதில் சந்தேகமே கிடையாது. அது மிகவும் அருகிலேயே நின்றதாகத் தோன்றியது. அது தனது ஓலத்தின் தன்மையை மாற்றிய பொழுது ஏற்பட்ட அதனுடைய வாய் அசைவைக் கூட காற்று எடுத்துக் காட்டியது.

வாஸிலி ஆன்ட்ரீவிச் கோட்டுக் காலரை மடித்துக் கொண்டு கூர்ந்து கவனித்தான். முக்கார்ட்டி கூட, காதுகளை அசைத்துக் கொண்டு நன்றாய்க் கேட்பதற்குச் சிரமப்பட்டது. ஓநாய் தனது ஊளையை நிறுத்தி விட்டதும், குதிரை காலை மாற்றி மாற்றி வைத்து அசைந்து, எச்சரிக்கையாக ஒரு கனைப்பு எழுப்பியது.

இதற்குப் பிறகு அவனால் தூங்கவும் இயலவில்லை; தன்னைத் தானே கட்டுப்படுத்திக் கொள்ளவும் முடியவில்லை. தனது கணக்குகள், தொழில், மதிப்பு, செல்வம் இவைகளைப் பற்றி அவன் அதிகமாகச் சிந்திக்கச் சிந்திக்க, முன்னிலும் மிக அதிகமான பயம் தான் அவனை ஆட்கொண்டது. ராத்திரிப் பொழுதைக் கழிக்க கிரிஷ்கினோவில் தங்காமல் போனோமே என்ற வருத்தம் அவனது எண்ணங்களில் கலந்து குழம்பியது ; சிந்தனையில் மேலோங்கி நின்றது.

'சைத்தான் காட்டை விழுங்கட்டும்! அது இல்லாத பொழுது எல்லாம் ஒழுங்காக இருந்ததே. அட கடவுளே! ஆ, இந்த இரவு நேரத்துக்கு மட்டும் நமக்குப் பாதுகாப்பு கிடைக்குமானால்!' என்று தானாகவே பேசிக் கொண்டான் அவன். 'குடிகாரர்கள்தான் குளிரில் விறைத்துச் சாவார்கள் என்று சொல்வது வழக்கம். நானும்தான் ஏதோ குடித்தேன்' என்று அவன் எண்ணினான்.

அவன் தனது உணர்ச்சிகளை ஆராய்ந்த போது உடம்பிலே உதறல் ஏற்பட்டிருந்ததை அறிய முடிந்தது. ஆனால் அது குளிரினாலா அல்லது பயத்தினாலா என்பதுதான் தெரியவில்லை. நன்றாகப் போர்த்திக்கொண்டு, முன்போலவே படுத்துக்கிடக்க முயன்றான் அவன். ஆனால் மேற்கொண்டு அவ்விதம் செய்ய முடியவில்லை அவனால். ஒரே நிலையில் இருப்பது சாத்தியப்படவில்லை அவனுக்கு. அவன் எழுந்திருக்கவும், தன்னுள்ளே தலையெடுத்துப் பெரிதாக வளரும் பயத்தை ஒடுக்கிவிட ஏதாவது செய்யவும் விரும்பினான். அந்த பயத்தின் எதிரிலே தான் சக்தியற்றவன் என்ற உணர்வும் அவனுக்கு இருந்தது. அவன் மீண்டும் தனது சிகரெட்டுகளையும் தீக்குச்சிகளையும் எடுத்தான். மூன்றே மூன்று குச்சிகள்தான் இருந்தன. அவை கூட கெட்டுப் போனவைதான். எனவே நெருப்பு பற்றிக் கொள்ளாமலே அவற்றின் மருந்து சிதறிப் போயிற்று.

'சைத்தான் உன்னை விழுங்கட்டும்! நாசமாய்ப் போனவை! பாழாய்ப் போக!' என்று, யாரை அல்லது எதை சபிக்கிறோம் எனும் பிரக்ஞையே இல்லாமல், அவன் முணமுணத்தான். நசுங்கிய சிகரெட்டை

அவன் தூர வீசி எறிந்தான். தீப் பெட்டியையும் அவ்விதமே விட்டெறிவதற் கிருந்தான் அவன். ஆயினும் கை அசைவைத் தடுத்து நிறுத்தி அந்தப் பெட்டியை அவன் தன் பைக்குள் வைத்துக் கொண் டான். ஒரே இடத்தில் மேலும் தங்கியிருக்க முடியாத அளவுக்கு அமைதியின்மை அவனைப் பற்றிக் கொண்டது. அதனால் அவன் வண்டியை விட்டு வெளியே இறங்கினான். காற்றுக்கு எதிராக முதுகைத் திருப்பி நின்று, அரைக் கச்சையைத் தளர்த்தி இடுப் புக்கும் கீழாக இறக்கி இறுக்கிக் கொண்டான்.

'படுத்தபடி சாவுக்காகக் காத்துக் கிடப்பதனால் என்ன பிரயோசனம்? அதை விட, குதிரை மேலேறி இங்கிருந்து கிளம்பிப் போவதே நல்லது.' இந்த எண்ணம் சடாரென்று உதயமாயிற்று அவனுக்கு. அதன் மேலே ஆள் யாராவது இருந்தால், குதிரை தானாகவே போகும்.'

நிகிட்டாவைப் பற்றி அவன் இப்படி நினைத்தான்: அவனைப் பொறுத்த வரை அவன் உயிரோடு இருப்பது, செத்துப் போவது எல்லாமே அவனுக்கு ஒன்றுதான். அவனுடைய வாழ்க்கைக்கு என்ன மதிப்பு இருக்கிறது? அவன் உயிரை விடுவதற்கு வருத்தப்படமாட்டான். ஆனால் நான் உயிர் வாழ்வ தற்கு அவசியம் இருக்கத்தான் செய்கிறது. அதற்காக வணக்கம், ஆண்டவனே!'

அவன் குதிரையை அவிழ்த்து, வார்களைக் கழுத்து மேலே போட்டு விட்டு, ஏறி உட்கார முயன்றான். ஆனால் அவனுடைய கோட்டுகளும் பூட்ஸும் அதிகம் கனத்திருந்ததால் அவனால் ஏற முடியவில்லை. அவன் வண்டியின் மீது ஏறி நின்று அங்கிருந்து குதிரை

மேல் ஏறிவிட முயற்சித்தான். ஆனால் அவனுடைய பாரத்தினால் வண்டி ஒரு பக்கமாய் சாய்ந்து விட்டது. அதனால் மறுபடியும் அவன் தோல்வியுற்றான். அப்புறம் அவன் குதிரையை வண்டிக்குச் சமீபத்தில் இழுத்து, ஜாக்கிரதையாகச் சமாளித்து வண்டியின் ஓர் புறமாக நின்று குதிரையின் முதுகு மேல் குறுக்காகப் படுத்து விட்டான். இவ்வாறு கொஞ்ச நேரம் படுத்துக் கிடந்த பிறகு அவன் முன்னால் ஒரு முறை நகர்ந்து கொடுத்தான். மீண்டும் நகர்ந்தான். பிறகு ஒரு காலைத் தூக்கிப் போட்டு, கடைசியில் நன்றாக உட்காருவதில் வெற்றி பெற்றான். அடிப்புறத்தில் தொங்கிய தோல் வார்களில் தனது கால்களை உறுதியாகப் பதிய வைத்துக்கொண்டான் அவன்.

வண்டியின் அசைவு நிகிட்டாவை எழுப்பியது. அவன் எழுந்து உட்கார்ந்தான். அவன் என்னவோ சொன்னதாக வாஸிலிக்குத் தோன்றியது.

'உன்னைப் போன்ற முட்டாள்களின் பேச்சைக் கேட்க வேண்டியது தான்! ஒன்றும் இல்லாததற்காக நான் இப்படிச் சாவதா என்ன?' என்று வாஸிலி கத்தினான். அப்புறம் தனது ரோம அங்கியின் விளிம்புகளைச் சுருட்டி முழங்கால்களுக்குக் கீழே திணித்துக்கொண்டு அவன் குதிரையைத் திருப்பினான். வண்டியிலிருந்து விலகி, காடும் காட்டுக் காவலாளியின் குடிசையும் இருந்தாக வேண்டிய இடம் என அவன் கருதிய திக்கு நோக்கிக் குதிரையை ஓட்டினான்.

## 7

நிகிட்டா தன்னை சாக்குத் துணியினால் போர்த்திக் கொண்டு வண்டிக்குப் பின்புறத்தில் உட்கார்ந்த நேரத்திலிருந்து அசையவே இல்லை. இயற்கையோடு தொடர்பு கொண்டும், பற்றாக்குறை என்பதை எப்பொழுதும் அனுபவித்தும் வாழ்கிற எல்லோரையும் போலவே அவனும் பொறுமையோடு இருந்தான். அப்படி பல மணி நேரம்—ஏன், பல தினங்கள் கூட—அமைதியை இழக்காமலும் எரிச்சல் பெறாமலும் அவன் இருக்க முடியும்.

தனது எஜமான் கூப்பிட்டதை அவன் கேட்கத் தான் செய்தான். ஆயினும் அவன் பதில் பேச வில்லை. ஏனென்றால் அவன் அசையவோ பேசவோ விரும்பவில்லை. அவன் பருகிய தேநீரினாலும், பனி ஓட்டத்தில் கஷ்டப்பட்டு நகர்ந்து வலிமையுடன் போராடியதனாலும் அடைந்த உஷ்ணம் அவனது தேகத்தில் இன்னும் கொஞ்சம் இருந்தது. என்றாலும், அந்தச் சூடு வெகுநேரம் நீடித்திராது என்பதையும், மீண்டும் அங்குமிங்கும் அலைந்து கதகதப்பு பெறுவதற்குத் தேவையான பலம் தனது உடம்பில் இல்லை என்பதையும் அவன் அறிந்திருந்தான். சட்டென்று நின்றுகொண்டு, சாட்டையால் அடித்தபோதிலும் முன்னே நகர மறுக்கிற குதிரையைப் போல்தான் அவனும் மிகுந்த களைப்பெய்தி விட்டான். சோர்ந்து போன குதிரையை மறுபடியும் உழைக்கும்படி செய்ய வேண்டுமானால் அதற்கு நல்ல தீனி கொடுக்க வேண்டும் எனத் தெரிந்து கொள்கிற சொந்தக்காரன் போலவே அவனும் தனது தேகநிலை பற்றி உணர்ந்திருந்தான்.

ஓட்டை விழுந்திருந்த பூட்ஸிலிருந்த பாதம் இதற்குள் மரத்துப் போய்விட்டது. அவனுடைய காலில் பெருவிரல் இருந்ததாகவே உணரமுடிய வில்லை அவனால். அதுபோக, அவன் உடல் பூரா வுமே கொஞ்சம் கொஞ்சமாகக் குளிரடைந்து வந்தது. அந்த இரவிலேயே அவன் செத்து விடலாம்—அனேக மாகச் செத்தே போவான்—என்ற எண்ணமும் அவ னுக்கு ஏற்பட்டது. ஆயினும் அந்த நினைப்பு குறிப் பிடத் தகுந்த அளவு கசப்பானதாகவோ பயங்கரமான தாகவோ தோன்ற வில்லை.

அது அவனுக்குக் குறிப்பிடத் தகுந்த அளவு கசப்பானதாகத் தோன்றாதது ஏனென்றால், அவ னுடைய வாழ்நாள் பூராவும் தொடர்ச்சியானதொரு பண்டிகையாகவே அமைந்திருந்ததில்லை. ஆனால், அதற்கு மாறாக, முடிவற்ற கடின உழைப்பின் சுழற்சி யாகவே இருந்தது அது. அதனால் அவனுக்கு அலுப்புத் தோன்றத் தொடங்கியிருந்தது.

அவனுக்கு அது குறிப்பிடத் தகுந்த அளவு பயங் கரமானதாகத் தோன்றாதது ஏனெனில், வாஸிலி ஆன்ட்ரீவிச்சைப் போன்ற எஜமானர்களுக்கு உழைத்து அவர்களை நம்பி அவன் வாழ நேரிட்ட போதிலும், தான் எப்பொழுதும் எல்லோருக்கும் தலைவரான ஆண்டவனை நம்பியிருக்க வேண்டியவனே என உணர்ந்திருந்தான். அவனை இந்த உலகத் திற்கு அனுப்பிவைத்தவர் அவரே. அவன் இறக்கும் தறுவாயில் கூட அவருடைய ஆட்சிக்கு உட்பட்டவன் தான்; அவர் அவனை மோசமாக நடத்த மாட்டார் என்றும் அவன் அறிந்திருந்தான்.

'ஒருவன் தனக்கு நன்ருகப் பழகிப் பண்பட்டுப் போனதை விட்டுவிட வேண்டியிருப்பது வருந்தத் தக்கதுதான். ஆனுல் வேறு எதுவும் செய்வதற் கில்லை. புதிய விஷயங்களில் நானும் பழகிவிடுவேன்' என்று அவன் நினைத்தான்.

'பாவங்கள்?' என்ற எண்ணம் எழுந்தது அவ னுக்கு. அவனது குடிபோதை பற்றியும், குடியில் காலியான பணத்தைப் பற்றியும் அவன் நினைத்தான். தான் தன்னுடைய மனைவிக்குத் தீமை இழைத்தது பற்றியும், சபித்து வசை கூறும் பழக்கம் பற்றியும் நினைத்தான். மாதாகோயிலையும் விரத தினங்களையும் புறக்கணித்து வந்தது பற்றியும் நினைத்தான். 'பாவ மன்னிப்புப் பெறும்போது பாதிரியார் கண்டித்த எல்லா விஷயங்களையும் அவன் எண்ணிப் பார்த்தான். 'நிச்சயமாக இவை பாவங்கள்தான். ஆனுல் இவற்றை எல்லாம் நானுகவே என் மீது சுமத்திக்கொண்டேனு? கடவுள் என்னைப் படைத்த விதமே அப்படித்தானே! அது சரி; பாவங்கள்! நான் எங்கே தப்பி ஓடுவது?'

ஆகவே ஆரம்பத்தில், அவன் தனக்கு அன்று இரவில் என்ன நேரிடலாம் என்று எண்ணிப்பார்த் தான். அதற்குப் பிறகு அவன் அத்தகைய எண்ணங் களுக்கே இடம் வைத்துக்கொள்ளவில்லை. ஆனுல் தாமாகவே தலைதூக்கி உள்ளத்தில் படர்ந்த நினைவு களை மட்டுமே எண்ணியிருந்தான். மார்த்தாவின் வருகை பற்றியும், உழைப்பவர்களிடம் நிலை பெற் றுள்ள குடிப்பழக்கம் பற்றியும், தான் குடிப்பதைவிட்டு விட்டது பற்றியும் அவன் எண்ணினுன். அதன்பிறகு இந்த இரவுப் பிரயாணம் பற்றியும், டாராஸ் குடும்பத் தைப் பற்றியும், அவ்வீட்டில் எழுந்துள்ள பாகப்

பிரிவினை விவகாரம் பற்றியும் எண்ணினான். பின்னர், தனது சொந்த மகனைப் பற்றியும், கம்பளித்துணி போர்த்தப் பட்டு நிற்கிற முக்கார்ட்டி பற்றியும் நினைத் தான். அப்புறம், வண்டியில் அங்கு மிங்கும் ஆடி அசைந்ததன் மூலம் அதைக் கிரீச்சிடச் செய்த எஜ மானைப் பற்றியும் நினைத்தான். 'இப்படிக் கிளம்பி வந்ததற்காக இப்பொழுது நீரே வருத்தப்பட்டுக் கொண்டிருப்பீர் என்று நினைக்கிறேன், அருமை ஐயாவே!' என்று எண்ணினான் அவன். 'அவருடை யதைப் போன்ற வாழ்வை விட்டு விட்டுப் போவ தென்றால் கஷ்டமாகத் தான் இருக்கும்! அது நம் போன்றவர்களின் வாழ்வு போன்றது இல்லையே' என்றும் அவன் நினைத்தான்.

பிறகு இந்த நினைவுகள் எல்லாம் அவன் மண்டையினுள் குழம்பிக் கலந்து விடத் தொடங்கின. அவன் தூக்கத்தில் ஆழ்ந்தான்.

ஆனால், வாஸிலி ஆன்ட்ரீவிச் குதிரை மீது ஏறிக் கொண்டு வண்டியை ஆட்டிவிட்டபோது, அது கொஞ் சம் அசைந்து விலகியது. அப்பொழுது வண்டியின் முதுகிலே சாய்ந்திருந்த நிகிட்டாவின் மீது சிறு அடி ஒன்று விழுந்தது. அதனால் அவன் விழித்தெழுந் தான். அவனுக்கு விருப்பம் இருந்ததோ இல்லையோ அவன் உட்கார்ந்திருந்த நிலையை மாற்ற வேண்டியது அவசியமாகிவிட்டது. அவன் தனது கால்களை சிரமத் தோடு நீட்டி, அவற்றின் மீது விழுந்து கிடந்த பனியை உதறிக்கொண்டே எழுந்தான். உடனடி யாகவே, துயர்தரும் குளிர் அவன் தேகம் பூராவும் குத்திப் பாய்ந்தது.

என்ன நடக்கிறது என்பதைப் புரிந்து கொண்டதும், குதிரை மீது போர்த்தியிருந்த கம்பளித் துணி இனிமேல் தேவைப் படாதாகையால் அதைத் தன்னிடம் தந்துவிடும்படி வாஸிலி ஆன்ட்ரீவிச்சிடம் அவன் கேட்டுக் கொண்டான்.

ஆனால் வாஸிலி நிற்கவில்லை. தூள்மயப்பனியினூடே மறைந்து போனான் அவன்.

தனியனாய் விடப்பட்டதும், தான் இனிமேல் என்ன செய்யவேண்டும் என்பது பற்றி நிகிட்டா ஒரு கணம் யோசித்தான். ஏதாவது ஒரு வீடு இருக்கும் இடம் தேடித் திரிவதற்கு அவனது உடலிலே போதிய தெம்பு இல்லை என்பதை அவன் உணர்ந்தான். அந்தப் பழைய இடத்திலேயே உட்கார்ந்து இருப்பதும் இனி சாத்திய மில்லை. இதற்குள் அது பூராவும் பனியினால் நிரம்பி விட்டது. வண்டியின் உள்ளே கூட தான் கதகதப்பு பெற்று விட முடியாது என்றும் அவன் உணர்ந்தான். ஏனெனில், நன்றாகப் போர்த்திக் கொள்வதற்கு அவனிடம் எதுவுமே இல்லை. அவனுடைய கோட்டும் ஆட்டுத்தோல் அங்கியும் அவன் உடலை வெதுவெதுப்பாக வைத்திருக்கும் சக்தியை இழந்து விட்டன. துணிச்சட்டை தவிர வேறு எதுவும் அவன் அணிந்திராதது போலவே தோன்றியது. அவ்வளவு குளிரை அவன் உணர்ந்தான்.

அவனுக்குப் பயம் ஏற்பட்டு விட்டது. 'ஆண்டவனே, பரமண்டலத்தில் உள்ள பிதாவே!' என்று முணங்கினான் அவன். தான் தனியனாக இல்லை, தனது சொற்களைக் கேட்கக்கூடிய ஒருவன் இருக்கிறான்; அவன் தன்னைக் கைவிட்டு விட மாட்டான் என்ற உள்ளுணர்வு காரணமாக நிகிட்டா மனஅமைதி

பெற்ருன். அதனுல், ஆழ்ந்த பெருமூச்சு ஒன்று உயிர்த்தான் அவன். சாக்குத்துணியைத் தனது தலைக்கு மேலே போட்டுக் கொண்டு அவன் வண்டியினுள் நுழைந்தான். அங்கே முன்பு தனது எஜமான் படுத்துக்கிடந்த இடத்தில் அவன் படுத்தான்.

எனினும் வண்டியின் உட்புறத்திலே கூட அவன் கதகதப்பு பெறமுடியவில்லை. முதலில் அவனது தேகம் முழுவதும் குளிரால் நடுங்கியது. பிறகு நடுக்கம் நின்றுவிட்டது. கொஞ்சம் கொஞ்சமாக அவன் தன் நினைவை இழக்கலாஞன். அவன் செத்துக் கொண்டிருந்தாஞ, அல்லது தூக்கத்தில் ஆழ்ந்து கொண்டிருந்தாஞ என்பது அவனுக்கே தெரியவில்லை. ஆனுல் அந்த இரண்டில் எதையும் ஏற்றுக் கொள்ளத் தயாராக இருந்தான் அவன்.

## 8

வாஸிலி ஆன்ட்ரீவிச் என்ன காரணத்திஞலோ நம்பிஞன், காடும் காட்டுக் காவல்காரனின் குடிசையும் அந்தத் திக்கிலேதான் இருக்கவேண்டும் என்று. அதனுல் அத் திக்கு நோக்கியே அவன் குதிரையை விரட்டிஞன். அடிக்கடி தனது கால்களிஞலும், கடிவாள வார்களின் நுனியாலும் அதை முடுக்கிக் கொண்டிருந்தான். பனி அவன் கண்களுக்குத் திரையிட்டது. அவனை நிறுத்திவிடுவது என்ற லட்சியத்தோடு காற்று வீசியதாகத் தோன்றியது. ஆனுல், அவனே, முன்னேக்கிக் குனிந்து கொண்டு, அடிக்கடி கோட்டைச் சரியாக இழுத்து தனக்கும் குளிர்ச்சியான சேணத்துக்கும் இடையிலே அதைச் சொருகிவிட்டுக் கொண்டு, குதிரையை மேலும் வேகமாகச் செல்லும்படி தூண்டி வந்தான்.

முக்கார்ட்டி கஷ்டப்பட்டுக் கொண்டே அவனுக்கு அடங்கி, அவன்செலுத்திய திக்கு நோக்கித் தளர் நடை நடந்தது.

சுமார் ஐந்து நிமிஷ நேரம் வாஸிலி ஆன்ட்ரீவிச் நேராகப் பிரயாணம் செய்தான். அப்படித்தான் அவன் நினைத்தான். குதிரைத் தலையையும் விரிந்து கிடந்த வெண்மய வெம்பரப்பையும் தவிர வேறொன்றையும் அவன் காணவில்லை. குதிரையின் காதுகளைச் சுற்றியும், தனது கோட்டுக் காலர் அருகிலும் விசிலடித்துச் சுழன்ற காற்றின் ஒலி தவிர வேறு எதையும் அவன் கேட்கவில்லை.

திடீரென்று அவனுக்கு முன்னால் கறுப்பாக ஏதோ ஒன்று பார்வையில் பட்டது. அவன் இதயம் ஆனந்தத்தினால் துடித்தது. கிராமத்து வீடுகளின் சுவர்களைக் கற்பனையில் கண்டு களித்தவாறே அவன் அந்தப் பொருளை நோக்கி முன்னேறினான். ஆனால் அந்தக் கறுப்புக் குவியல் நின்ற இடத்திலேயே நிற்காமல் அசைந்து கொண்டிருந்தது. அது ஒரு ஊர் அல்ல. ஒருவகை மரத்தின் நெடிய கிளைகள்தான் அவை. இரண்டு வயல்களுக்கு ஊடாக உள்ள வரப்பிலே நின்ற மரங்கள் சிலவற்றின் கிளைகள் மாத்திரமே பனிப்பரப்பைத் துளைத்து மேலெழுந்து காட்சி தந்தன. அவற்றை ஒரே திக்கில் சரியும்படி அடித்துக் கீச்சிட்டுச் சுழன்ற காற்றினால் அவை மூர்க்கமாக அலைக்கழிக்கப்பட்டன.

இரக்கமற்ற காற்றினால் பாடாய்ப்படுத்தப்பட்ட மரங்களின் தோற்றம் வாஸிலியை நடுங்கச் செய்தது. ஏனென்று அ வ னு க் கே புரியவில்லை. அவன் குதிரையை அவசரம் அவசரமாக ஓட்டினான். மரங்களை

நோக்கி முன்னேறிச் சென்ற போது அவன் பிரயாணம் செய்த திசையை அடியோடு மாற்றி விட்டான்; இப்பொழுது அவன் நேர் எதிரான திசையில் முன்நோக்கிச் சென்றுகொண்டிருந்தான். தனக்கிருந்த அவசரத்தில் அவன் இந்த உண்மையைக் கவனிக்கவே இல்லை. எந்தத் திக்கில் குடிசை இருந்ததாக அவன் நம்பினனே அதே திசை நோக்கித்தான் இன்னமும் பிரயாணம் செய்வதாக வாஸிலி நினைத்துக் கொண்டிருந்தான். ஆனால் குதிரை வலது பக்கம் செல்ல முயன்றது. அவனே அதை இடது புறமாக ஒதுக்கியே வழிகாட்டினன்.

மீண்டும் அவனுக்கு முன்பக்கத்தில் கறுப்பாக எதுவோ தோன்றியது. மறுபடியும் அவன் உவகை பெற்றான், இப்பொழுது நிச்சயமாக ஒரு கிராமம் வந்து விட்டது என்ற நம்பிக்கையினால். ஆனால், மரங்கள் மண்டிய அதே வயல் வரப்புதான் மறுபடியும் காட்சி அளித்தது. காற்றில் சிக்கி மூர்க்கமாக அல்லாடி, அவன் உள்ளத்திலே காரணமற்ற பீதியை எழுப்பிய அதே மரக்கிளைகள் தான் மீண்டும் தென்பட்டன. பழைய மரக்கிளைகள் என்பது மட்டுமே முக்கியமல்ல. அம் மரத் தொகுப்பிற்குப் பக்கத்தில் குதிரையின் காலடித் தடம் ஒன்று அரைகுறையாகப் பனிமூடிக் கிடந்தது.

வாஸிலி ஆன்ட்ரீவிச் நின்று, குனிந்து, கவனத்தோடு உற்றுநோக்கினன். பனியினால் மூடியும் மூடாமலும் தென்பட்ட குதிரையின் காலடித் தடம்தான் அது. அவனது குதிரையின் அடிச்சுவடுகளைத் தவிர வேறெதுவாகவும் இருக்க முடியாது. ஆகவே அவன் கொஞ்ச தூரம் வட்டமிட்டுச் சுற்றி வந்திருக்கிறன்

என்பது தெளிவாயிற்று. ‘இதே ரீதியில் நான் செத்தொழிந்து போவேன்!’ என்று அவன் நினைத்தான். தனது பீதிக்கு இடம் தர விரும்பாதவனாய், பனிபடர்ந்த அந்தகாரத்தினூடே உறுத்து நோக்கியபடியே அவன் மேலும் அதிகமாகக் குதிரையை முடுக்கினான்.

காரிருளில் அவ்வப்போது மின்வெட்டித் தோன்றி மறையும் ஒளிச் சிதறல்களை மட்டுமே கண்டான் அவன். நாய்களின் குரைப்பையோ, அல்லது ஓநாய்களின் ஊளைக் கூச்சலையோ கேட்டதாக அவன் ஒரு சமயம் எண்ணினான். ஆனால் அந்த ஓசைகள் மிகவும் தீனமாகவும் தெளிவற்றும் ஒலித்ததால், உண்மையிலேயே அவற்றை அவன் கேட்டானா; அல்லது கேட்டதாக வெறுமனே நினைத்துக் கொண்டானா என்று அவனுக்கே தெரியாமல் போய்விட்டது. எனவே அவன் நின்று, மிகுந்த சிரத்தையோடு கவனித்தான்.

நடுக்கம் தரக் கூடிய, செவிடு படச் செய்கிற கூச்சல் எதுவோ திடீரென்று அவன் காதுகளின் அருகே எதிரொலித்தது. அவனுக்குக் கீழே எல்லாமே ஆடிக் குலுங்கி நடுங்கியது. அவன் குதிரையின் கழுத்தைப் பற்றினான். ஆனால் அதுவும் உடல் நடுக்கம் கண்டு நின்றது. மீண்டும் அந்தப் பயங்கர ஓசை முன்னிலும் அதிகப் பயங்கரமாகப் பெருகி ஒலித்தது. சில கண நேரம் வாஸிலிக்குத் தன்னையே கட்டுப்படுத்திக்கொள்ள முடியவில்லை.

முக்கார்ட்டிதான் அவ்விதம் குரல் எழுப்பியது. தனக்குத் தானே ஊக்கம் ஊட்டுவதற்காகவோ, அல்லது உதவியை அழைத்தோ, அது உரக்க எதிரொலி எழுப்பும் விதத்தில் கனைத்துக்கொண்டது.

'அட, உதவாக்கரையே! என்னை எப்படி பயப் படுத்தி விட்டாய்! நீ நாசமாய்ப் போக!' என்று எண்ணினான் வாஸிலி. ஆயினும், தனது பயத்தின் காரணத்தைப் புரிந்து கொண்ட பிறகும் கூட அவனால் அச்சத்தை உதறிவிட முடியவில்லை.

'நான் மன அமைதி பெற்று, நன்றாகச் சிந்தித்து முடிவு செய்யவேண்டும்' என்று அவன் தனக்குத் தானே கூறிக்கொண்டான். என்றாலும் அவனால் நிலைத்து நிற்கமுடியவில்லை. மேலும் வேகமாகச் செல் லும்படி குதிரையைத் தூண்டிக் கொண்டுதான் இருந் தான் அவன். காற்றை எதிர்த்துச் செல்வதற்குப் பதிலாகதான் இப்போது காற்றோடு சேர்ந்துபோவதை அவன் கவனிக்கவே இல்லை. அவனுடைய உடல்—முக்கியமாக, மேற்சட்டையால் மூடப்பெறாமல், சேணத் தைத் தொட்டபடி இருந்த கால்களின் உட்பகுதி—வேதனை தரும் அளவுக்குக் குளிர்ந்து போயிற்று. குதிரை மெதுவாக நடந்த போது அந்த வேதனை அதிகரித்தது. அவனது கால்களும் கைகளும் பதற்றம் எய்தின. வேகமாக மூச்சு வாங்கியது. பயங்கரமான அந்தப் பனிப்பாலையின் மத்தியிலே, தான் அழிந்து படுவதை அவன் கண்டான்; தப்பிச் செல்வதற்கு உரிய வழி எதையும் கண்டானில்லை.

திடீரென்று குதிரை எதனுள்ளோ இடறி விழுந் தது. பனி ஓட்டத்தினுள் அமிழ்ந்து, ஆழ்ந்து போகத் தொடங்கியது. பின்னர் அது ஒரு பக்கமாய்ச் சாய்ந்து விழுந்தது. வாஸிலி ஆன்ட்ரீவிச் கீழே குதித்தான். அப்படிச் செய்தபோது அவனது கால் தங்கியிருந்த வார்ப் பட்டையை ஓர் புறமாக இழுத்துவிட்டான்;

அவன் இறங்கும் பொழுது பிடித்திருந்த சேணத்தைச் சுற்றித் திருகிவிட்டான்.

அவன் கீழே குதித்து விடவும், குதிரை முரண்டி அடித்து எழுந்து நின்றது. முன்நோக்கிப் பாய்ந்தது. ஒரு குதி குதித்தது. மற்ெருருமுறை துள்ளிப் பாய்ந்தது, மீண்டும் கனைத்துக் கொண்டது. கம்பளித் துணி, வார்ப்பட்டை எல்லாம் பின்னுல் இழுபட்டுத் தொடர அது ஓடியது. வாஸிலியைத் தன்னந் தனிய ஞய் பனி ஓட்டத்திலே தங்க விட்டு விட்டு அது மறைந்து போயிற்று.

குதிரையைத் தொடர்ந்து செல்ல அவன் பாடு பட்டான். ஆனுல் பனி மிக ஆழமாகப் படிந்து கிடந்தது. அவனது கோட்டுகள் கனமாக இருந்தன. அதனுல் அடி எடுத்து வைக்குந் தோறும் அவன் முழங்கால் அளவு பனியில் அமிழ நேர்ந்தது. இருபது எட்டுகளுக்கு மேற்கொண்டு அடி எடுத்து வைக்க முடியாமல் மூச்சுத் திணற அவன் நின்று விட்டான். ‘தோப்பு, மாடுகள், குத்தகை நிலம், கடை, மதுச்சாலை, தகரக் கூரை போட்ட களஞ்சியமும் வீடும், எனது வாரிசு’ என்று எண்ணினுன் அவன்.

‘இவைகளை எல்லாம் நான் எப்படி விட்டுவிட முடியும்? இதன் அர்த்தம் என்ன? அது நடக்காது!’ இப்படி எண்ணங்கள் அவன் உள்ளத்திலே பளிச்சிட்டன. பிறகு, காற்றில் அலைபட்ட மரத் தொகுதியையும், அதை அவன் இரண்டு தடவை தாண்டிச் செல்ல நேர்ந்ததையும் எண்ணினுன். பயம் அவனைக் கவ்விக் கொண்டது. ஆகவே அப்பொழுது அவனுக்கு நேர்ந்து கொண்டிருந்த அனுபவத்தின் நிஜத்தன்மையில் அவன் நம்பிக்கை கொள்ளவே இல்லை. ‘இது

கனவாக இருக்குமோ ?' என்று தான் அவன் நினைத்தான். அதனால் விழித்து எழ அவன் பெருமுயற்சி செய்தான். பயன் எதுவும் ஏற்படவில்லை. உண்மையான பனி தான் அவன் முகத்தில் அறைந்து கொண்டிருந்தது; அவனை மூடிவிட முயன்றது; உறையை இழந்து விட்ட அவனது வலது கரத்தைக் குளிரால் விறைக்க வைத்தது. நிஜமான பனிப்பாலை தான் அது. அங்கே, அந்த மரக்கூட்டம் போலவே, அவனும் தவிர்க்கமுடியாத—மிகத் துரிதமான—அர்த்தமற்ற அழிவை எதிர்பார்த்துக் காத்திருக்கும்படி தன்னந் தனியனாய் விடப்பட்டிருந்தான்.

'சொர்க்கத்து ராணியே! தன்னடக்கத்தின் போதகராகிய பரிசுத்தத் தந்தை நிக்கொலஸ் அவர்களே!' என்று அவன் முணுமுணுத்தான். முந்திய தினத்தில் நடைபெற்ற ஆராதனையும், தங்கமுலாம் பூசிய சட்டத்தினுள் காட்சி தந்த புனித விக்ரகத்தின் கறுத்த முகமும், அந்த விக்கிரகத்தின் திரு முன்னிலே கொளுத்தி வைக்கப்படுவதற்காக அவன் விற்பனை செய்த மெழுகுவர்த்திகளும் அவனது நினைவில் எழுந்தன. அந்த மெழுகு திரிகள் கொஞ்சம் கூட எரிந்திராத நிலையிலே உடனடியாகவே தன்னிடம் வந்து சேர்ந்தது பற்றியும், அவற்றை அவன் பெட்டியில் வைத்துப் பூட்டியதையும் நினைத்தான்**

** 'சர்ச் வார்டன்' (மாதாகோயிலைப் பராமரிக்கிறவன்) என்ற முறையில், பக்தர்களுக்கு மெழுகு திரிகளை அவன் விற்பனை செய்தான். விக்கிரகங்களின் முன்னர் ஏற்றி வைப்பதற்கு உரியவை அவை. ஆராதனை முடிவுற்றதும் அம் மெழுகு வர்த்திகளைச் சேகரித்து அவன் சேமித்து வைப்பான். மறுபடியும் அவற்றை பக்தர்களுக்கு விற்பதன் மூலம் கோயிலுக்கு அதிகப்படியான வருமானம் கிட்டுவதற்கு இது துணை புரிந்தது.

அற்புதங்கள் விளைவிக்க வல்ல அதே நிக்கொலஸை நினைத்துத் தான் இப்பொழுது அவன் பிரார்த்தனை புரிந்தான். நன்றி அறிவிப்பு ஆராதனை நடத்தி, கொஞ்சம் மெழுகு வர்த்திகளை ஏற்றி வைப்பதாக அவன் வேண்டிக்கொண்டான். என்றாலும், அந்த விக்கிரகம், அதன் சட்டம், மெழுகு வர்த்திகள், பாதிரி, நன்றி அறிவிப்பு ஆராதனை எல்லாம் கோயிலில் முக்கியமானவை. அவசியமானவைதான். ஆனால் இந்த இடத்தில் அவனுக்காக அவை எதையும் சாதித்து விட முடியாது. அம் மெழுகு வர்த்திகள், ஆராதனைகள் முதலியவற்றிற்கும் அவனது தற்போதைய அபாயகரமான ஆபத்து நிலைமைக்கும் எந்த விதமான தொடர்பும் இருக்க முடியாது என்பதை அவன் தெளிவாகவும் சந்தேகத்துக்கு இடமில்லாமலும் உணர்ந்தான்.

'நான் கவலையுற்று ஏங்கக்கூடாது. தடத்தை பனி மூடி மறைத்து விடுவதற்கு முன்பே நான் குதிரையின் அடிச்சுவடுகளைப் பின் பற்றிச் செல்ல வேண்டும். குதிரை என்னை வெளியே கொண்டுபோய்ச் சேர்த்துவிடும். ஒருவேளை அதை நான் பிடித்து விடவும் கூடும். நான் அவசரப்படக் கூடாது. அது தான் முக்கியம். இல்லையெனில் நான் இன்னும் அதிகமாக அமிழ்ந்து அடியோடு நாசமாகிவிடுவேன் என்று அவன் எண்ணினான்.

ஆனால், அமைதியாக நடக்க வேண்டும் என்று தீர்மானம் செய்துகொண்ட போதிலும் அவன் முன்னேக்கிப் பாயவே செய்தான். சில சமயம் ஓடவும் முயன்றான். அதனால் அடிக்கடி விழுந்தான். எழுந்தான். திரும்பத் திரும்ப விழுவதும் எழுவதுமாக

அவன் ஓடினான். பனி ஆழமாக விழுந்திராத இடங்களில் குதிரையின் காலடித் தடம் தெளிவாகப் புலனாகவே இல்லை. 'நான் ஒழிந்தேன்! நான் பாதையைத் தவறவிட்டு விடுவேன்; குதிரையையும் பிடிக்கமாட்டேன்' என்று நினைத்தான் அவன். எனினும் அவ்வேளையில் அவன் கறுப்பாக எதையோ கண்டான். அது குதிரைதான். முக்கார்ட்டி மாத்திரமல்ல. வண்டியும், கைக்குட்டை ஆடிப் பறக்கும் சட்டத்தோடு, காட்சி தந்தது.

குதிரை முக்கார்ட்டி, சாக்குத் துணியும் வார்ப்பட்டையும் ஓர் புறமாகச் சுற்றிப் பின்னிக்கிடக்க, நின்றது. அது பழைய இடத்தில் நிற்காமல் இப்பொழுது வண்டிச் சட்டங்களுக்கு மிக அருகாமையில் நின்று தலையை ஆட்டிக்கொண்டிருந்தது. தலையிலிருந்து தொங்கிய கடிவாள வார்களை அது தனது கால்களால் மிதித்துக் கொண்டிருந்ததனால் தலை கீழ் நோக்கியே இழுக்கப்பட்டது.

முன்பு நிகிட்டா தவறி விழுந்த கணவாய்க்குள்ளேதான் வாஸிலியும் விழுந்திருந்தான்; முக்கார்ட்டி அவனைச் சுமந்தபடி வண்டியை நோக்கித்தான் திரும்பி வந்து கொண்டிருந்தது; குதிரையின் முதுகிலிருந்து அவன் கீழே குதித்த இடம் வண்டி நின்ற இடத்திலிருந்து ஐம்பது அடிகளுக்குள்ளாகவே இருந்தது என்று இப்போது விளங்கி விட்டது.

## 9

தட்டுத் தடுமாறி மறுபடியும் வண்டியை அடைந்ததும் வாஸிலி ஆன்ட்ரீவிச் அதைப் பிடித்துக் கொண்டு நீண்ட நேரம் அசைவற்று நின்றான்.

அவன் தன்னைத் தானே சாந்தப் படுத்திக்கொண்டு மூச்சு வாங்குவதை சரிப்படுத்த முயன்றான். நிகிட்டா முன்பு இருந்த இடத்தில் இல்லை. ஆனால், பனியினால் நன்கு மூடப்பெற்ற ஏதோ ஒன்று வண்டியினுள்ளே கிடந்தது. அது தான் நிகிட்டா என்று வாஸிலி முடிவு செய்தான்.

அவனுடைய பயம் முற்றிலும் அவனை விட்டு நீங்கிவிட்டது. அவனுக்கு இப்பொழுது ஏதாவது பயம் இருந்தது என்றால், அதுதான் குதிரையின்மீது அமர்ந்திருந்தபோதும், முக்கியமாக பனி ஓட்டத்தினூடே தன்னந்தனியனாக விடப்பட்ட போதும், அவனைப் பற்றிக் கொண்ட மகாபயங்கரமான பயம் மறுபடியும் தன்னைக் கவ்விக்கொள்ளுமே என்பதே ஆகும். எந்த விதத்திலாயினும் அவன் அந்த பயத்தை விலக்கியே ஆகவேண்டும். அது தன்னை அணுகாமல் கவனித்துக்கொள்வதற்காக அவன் ஏதாவது செய்தாகவேண்டும்—சும்மா இராமல் எந்தக் காரியத்திலாவது அவன் தன்னை ஈடுபடுத்திக் கொள்ளவேண்டும்.

எனவே, அவன் செய்த முதல் காரியம், காற்றுக்கு எதிராக முதுகைத் திருப்பி வைத்து, தனது ரோமக் கோட்டைத் திறந்துவிட்டுக் கொண்டதுதான். பிறகு, தனது மூச்சு ஓர் சிறிது சரிப்பட்டதும், அவன் தன்னுடைய பூட்ஸினுள் புகுந்திருந்த பனியை வெளியே கொட்டினான். இடது கை உறையிலிருந்து அதை அகற்றினான். (வலது கை உறை கிடைக்கும் என்று நம்புவதற்கே இடமில்லாதபடி தொலைந்து போய் விட்டது. எங்கோ விழுந்து கிடக்கும் அதன்மீது இந் நேரத்திற்குள் ஒரு அடி உயரம் பனி படிந்து மூடி

யிருக்கும்.) அதன் பிறகு, அவன் குடியானவர்களிடம் போய் தானியம் வாங்கி வரக் கிளம்புவதற்கு முன்னால் வழக்கமாகச் செய்து கொள்வது போலவே இப் பொழுதும் தனது அரைக் கச்சையைக் கீழே தணித்து இறக்கி இழுத்துக் கட்டிக் கொண்டு வேலைக்குத் தயாரானன்.

முதன் முதலாக, அவனுக்குத் தோன்றிய விஷயம், முக்கார்ட்டியின் காலை வாரிலிருந்து விடுவிக்க வேண்டும் என்பதுதான். அதைச் செய்து முடித்து, வண்டியின் முன்புறத்தில் உள்ள இரும்புப் பிடியில் ஆரம்பத்தில் கட்டப்பட்டிருந்தது போலவே குதிரையை இப்பொழுதும் கட்டி வைத்தான். பிறகு, அதன் கால் பட்டையையும் சேணத்தையும் சரிப்படுத்தி அதனுடைய தேகத்தைத் துணியால் மூடுவதற்காக அவன் குதிரையைச் சுற்றி வந்தான். அவ்வேளையில் வண்டியினுள் ஏதோ அசைவதை அவன் கவனிக்க நேர்ந்தது.

மூடி மறைந்திருந்த பனிக்கு வெளியே உயர்ந்து தோன்றியது நிகிட்டாவின் தலை. அரைவாசி உறைந்து போயிருந்த நிகிட்டா மிகுந்த சிரமத்தோடு எழுந்து உட்கார்ந்தான். அவன் தனது கையை மூக்கின் முன்னால் விசித்திரமான முறையில் ஆட்டி அசைத்துக் கொண்டிருந்தான், ஈக்களை விரட்டி ஓட்டுகிறவன் போல. அவன் தன்னுடைய கையை அசைத்தான்; என்னவோ சொன்னான்.

அவன் தன்னை அழைப்பதாகத் தோன்றியது வாஸிலிக்கு. அதனால் வாஸிலி துணியைச் சரிப்படுத் தாது அப்படியே போட்டுவிட்டு, வண்டியை நெருங்கிச்

சென்றான். 'என்ன விஷயம்? நீ என்ன சொல்கிறாய்?' என்று கேட்டான்.

'நான் செத்.... செத்துக்.... கொண்டிருக்கிறேன். அதுதான் விஷயம். எனக்குச் சேர வேண்டிய பணத்தை என் மகனிடம் கொடுங்கள். அல்லது என் மனைவியிடமே கொடுங்கள்; பரவாயில்லை' என்று நிகிட்டா கஷ்டத்தோடு விட்டு விட்டுப் பேசினான்.

'ஏன், நிஜமாகவே நீ உறைந்து போனாயா?'

'இது எனது சாவு என்றே நான் உணர்கிறேன். கிறிஸ்துவின் பெயரால், நீங்கள் என்னை மன்னித்து விடுங்கள்' என்று அழுகிற குரலில் சொன்னான் நிகிட்டா. ஈக்களை விரட்டுவது போல முகத்துக்கு எதிரே இன்னும் கையை வீசிக்கொண்டுதான் இருந்தான் அவன்.

அரை நிமிஷ நேரம் பேச்சற்று, அசைவற்று நின்றான் வாஸிலி. எதையாவது லாபகரமாக வாங்குகிறபொழுது அவன் கைதட்டி முடிவு செய்வது வழக்கம். இப்போதும் அதே தீர்மானத்தோடு திடீரென்று செயல் புரியத் தொடங்கினான் அவன். ஒரு அடி பின்வாங்கி நின்று, தனது சட்டையின் கைகளை மடித்துவிட்டுக் கொண்டு, நிகிட்டா மீதிருந்தும் வண்டியிலிருந்தும் பனியை அகற்றுவதில் அவன் ஈடுபட்டான். இதைச் செய்தானதும், அவன் அரைக் கச்சையை அவிழ்த்து ரோமக் கோட்டை நன்றாகத் திறந்து விட்டான். பிறகு, நிகிட்டாவைக் கீழே தள்ளி அவனுக்கு மேலே தான் படுத்துக்கொண்டு அவனை ரோமக் கோட்டினால் மட்டுமில்லாமல், சூடு பெற்றுக் கதகதத்துக் கொண்டிருந்த தனது தேகத்தினாலும் மூடி மறைத்தான். தனது கோட்டின் விளிம்பு

களை நிகிட்டாவுக்கும் வண்டியின் பக்கங்களுக்கு மிடையே திணித்து வைத்து, அதன் ஓரத்தை முழங் கால்களினுல் அழுத்திக் கொண்டான் வாஸிலி. தன் முகம் கீழ் நோக்கியிருக்க, தலையை வண்டியின் முன் புறத்தோடு பதித்துக் கொண்டு அவன் படுத்து விட்டான். இங்கே அவன் குதிரையின் அசைவுகளையோ, காற்றின் கீச்சொலியையோ கேட்டானில்லை. நிகிட்டா மூச்சு விடுவதை மாத்திரமே கேட்க முடிந்தது அவனுல்.

ஆரம்பத்தில், வெகு நேரம் வரை, நிகிட்டா அசைவற்றுக் கிடந்தான். பிறகு ஆழ்ந்த நெடு மூச்சுயிர்த்து அசைந்து கொடுத்தான்.

' அதோ! நீ செத்துப் போவதாகச் சொல்கிருயே! அசையாமல் படுத்து, சூடு பெற்றுக் கொள். இது தான் நமது வழி....' என்று பேசத் தொடங்கினுன் வாஸிலி.

ஆனுல் அவனுக்கே ஆச்சரியமாகிவிட்டது. அவனுல் மேற்கொண்டு பேசமுடியவில்லை. ஏனெனில் அவன் கண்களில் நீர் பெருகியது. அவனுடைய கீழ்த் தாடை வேகமாகத் துடிக்க ஆரம்பித்தது. அவன் பேசுவதை நிறுத்திவிட்டு, தொண்டைக் குழியில் எழுந்தவற்றை உள்ளே விழுங்கினுன், ' நான் படுமோசமாகப் பயந்து விட்டேன். அதனுல் மிகுந்த பலவீனனுகிப் போனேன் என்று தோன்றுகிறது ' என அவன் நினைத்தான். ஆயினும் இந்த பலவீனம் அதிருப்திகரமானதாக இல்லை என்பது மட்டுமல்ல; அவன் அதற்குமுன் எப்போதுமே அனுபவித்திராத விசேஷமான தொரு ஆனந்தத்தையும் அவனுக்குத் தந்தது.

'அது தான் நமது வழி!' என்று அவன் தனக்குத் தானே கூறிக்கொண்டான். அதிசயமுள்ள, பக்தி பூர்வமான, இரக்க உணர்ச்சியை அவன் அனுப வித்துக் கொண்டிருந்தான். தனது கோட்டு ரோமத் தின் மேல் கண்களைத் துடைத்தும், காற்றினால் அடிக் கடி விலக்கப்பட்ட மேல் சட்டையின் வலதுபுற விளிம்பை முழங்காலுக்குக் கீழே திணித்துக் கொண்டும், அவன் அதே நிலையில் வெகு நேரம் கிடந்தான்.

எனினும், தனது ஆனந்தமயமான நிலைமையை யாருக்காவது எடுத்துச் சொல்ல வேண்டும் என்ற அடக்க முடியாத ஆசைத் துடிப்பு அவனுக்கு ஏற்பட்டி ருந்தது. ஆகவே 'நிகிட்டா!' என்று கூப்பிட்டான் அவன்.

'சுகமாக இருக்கிறது. சூடாகவும் இருக்கிறது என்று ஒரு குரல் அடியிலிருந்து மேலெழுந்தது.

'பார்த்தாயா நண்பா! நான் அழிந்து போக இருந்தேன். நீயும் உறைந்து மடிந்திருப்பாய். நான் வந்து.......,

ஆனால் மீண்டும் அவன் வாய் துடிக்கத் தொடங் கியது. கண்களில் நீர் கட்டியது. அவனால் மேலும் பேசமுடியவில்லை. 'நல்லது. பரவாயில்லை. நான் எதை உணர்ந்தேன் என்கிற என்னைப்பற்றிய உண்மை எனக்கே தெரிகிறது' என்று அவன் எண்ணினான்.

அதற்குப் பிறகு அவன் மௌனமாக நெடுநேரம் அப்படியே கிடந்தான்.

கீழே கிடந்த நிகிட்டாவினாலும் மேலே கிடந்த ரோமக் கோட்டுகளாலும் அவன் உஷ்ணம் பெற்று வந்தான். நிகிட்டாவின் விலாப்புறங்களைச் சுற்றி கோட்டின் ஓரங்களைப் பிடித்துக் கொண்டிருந்த கைகளும், காற்றினால் அடிக்கடி திறந்து போடப்பட்ட அவனது கால்களும்தான் பனியில் உறையத் தொடங்கின. முக்கியமாக, கையுறை இல்லாத வலது கைதான் மிகுதியும் பாதிக்கப்பட்டது. ஆனாலும் அவன் தனது கால்களைப் பற்றியோ கைகளைப் பற்றியோ சிந்தித்தானில்லை. தனக்குக் கீழே கிடக்கும் குடியானவனை எப்படி உஷ்ணப்படுத்தலாம் என்பதுபற்றியே எண்ணினான் அவன்.

பலமுறைகள் அவன் முக்கார்ட்டியின் பக்கம் பார்வை எறிந்தான். அதன் முதுகு மூடப் பெருததையும், கம்பளித் துணியும் வார்ப்பட்டையும் கீழே பனியில் விழுந்து கிடந்ததையும் அவன் காண முடிந்தது. எழுந்து, அவற்றை எடுத்து, குதிரையைப் போர்த்த வேண்டும் என்று பட்டது அவனுக்கு. ஆயினும், நிகிட்டாவை விட்டு விலகி, தான் அனுபவித்துக் கொண்டிருந்த ஆனந்த நிலையைக் குலைத்து விட அவன் மனம் இடம் தரவில்லை. எவ்விதமான பயத்தையும் அவன் அப்புறம் உணரவில்லை.

'பயப்பட வேண்டாம். இந்தத் தடவை நாம் அவனை இழந்துவிட மாட்டோம்' என்று அவன் தனக்குத்தானே சொல்லிக் கொண்டான். குடியானவனை உஷ்ணப் படுத்துகிற தனது முயற்சிபற்றித் தான் அவன் குறிப்பிட்டான். தான் பொருள்களை வாங்குவதையும் விற்பதையும் பற்றிப் பெருமையாகப்

பேசிக் கொள்வது போலவே இதையும் குறிப்பிட்டான் அவன்.

இப்படி ஒரு மணி நேரம், இரண்டு மணி, மூன்று மணி என்று வாஸிலி ஆன்ட்ரீவிச் படுத்துக் கிடந்தான். ஆனால் கால ஓட்டத்தின் கணக்கு அவன் பிரக்ஞையில் படவேயில்லை. முதலில், பனிச் சூருவளி, வண்டிச் சட்டங்கள், சட்டத்தினூடே நின்று அவன் கண்முன்னலேயே நடுங்கிக் கொண்டிருந்த குதிரை ஆகியவற்றின் நிழல்கள் அவன் மனவெளியில் ஊர்ந்து சென்றன. பிறகு, தனக்குக் கீழே கிடக்கும் நிகிட்டாவின் நினைப்பு அவனுக்கு வந்தது. பிறகு, பண்டிகை, அவன் மனைவி, போலீஸ் அதிகாரி, மெழுகுவர்த்திகள் நிறைந்த பெட்டி ஆகிய நினைவுகள் நிழலிட்டுக் குழம்பின. மறுபடியும் நிகிட்டாவின் நினைவு. ஆனால் இம்முறை அவன் அந்தப் பெட்டிக்கு அடியில் படுத்துக் கிடந்தான். அப்புறம், குடியானவர்கள், வாடிக்கைக்காரர்கள், வியாபாரிகள் தோன்றி மறைந்தார்கள். தகரக் கொட்டகை போட்ட களஞ்சியத்தோடு கூடிய தனது வீட்டின் வெள்ளை நிறச் சுவர்கள் தோன்றின. அவற்றின் கீழே நிகிட்டா கிடந்ததாகத் தோன்றியது. பின்னர் இவ் வெல்லா நிழல்களும் கலந்து குழம்பி ஒன்ருகி சூன்யத்தில் ஐக்கியமாகி விட்டன. வானவில்லின் வர்ணங்கள் அனைத்தும் ஐக்கியமாகி ஒரே வெள்ளொளியாகப் பரிணமிப்பது போல்தான், வெவ்வேறு விதமான நிழல்கள் பலவும் ஒன்றுபட்டுக் கலந்தன. முடிவில், அவன் தூக்கத்தில் ஆழ்ந்தான்.

நெடுநேரம், கனவு எதுவும் இல்லாமலே உறங்கினன் அவன். ஆனால் விடிவதற்குச் சிறிதுநேரம்

இருந்தபொழுது, அவனது கனவுகள் மீண்டும் தலை தூக்கின. மெழுகுவர்த்திகள் உள்ள பெட்டியின் அருகே அவன் நின்று கொண்டிருந்ததாகத் தோன்றியது. டிக்கோனின் மனைவி மாதாகோயில் பண்டிகைக்காக ஐந்து கோப்பெக் விலையுள்ள மெழுகுவர்த்தி ஒன்று தரும்படி கேட்டு நின்ருள். பெட்டியிலிருந்து அதை எடுத்து அவளிடம் கொடுக்க விரும்பினுன் அவன். ஆனுல் அவனது கைகள், பைகளினுள் இறுக்கமாகச் சிக்கியிருந்ததால், மேலே எழவில்லை. அந்தப் பெட்டியைச் சுற்றி நடக்க அவன் ஆசைப் பட்டான். ஆனுல் அவன் கால்கள் நகர மறுத்தன. அவன் கால்களில் அணிந்திருந்த புத்தம் புதிய சுத்தமான ரப்பர் உறைகள் தரையோடு ஒட்டி வளர்ந்திருந்தன. அவனுல் அவற்றைத் தூக்கவும் முடியவில்லை; அவற்றினுள்ளிருந்து கால்களை விடுவிக்கவும் இயலவில்லை. அதன்பிறகு, மெழுகுவர்த்திப் பெட்டி பெட்டியாக இராமல் ஒரு படுக்கையாகக் காட்சி அளித்தது. திடீரென்று வாஸிலி ஆன்ட்ரீவிச் தான் தனது வீட்டிலுள்ள படுக்கைமேல் படுத்துக் கிடப்பதைக் கண்டான். அந்தப் படுக்கையில் அவன் நன்ருகப் படுத்துக் கிடந்தான். அங்கிருந்து அவனுல் எழுந்திருக்க முடியவில்லை. ஆனுலும் அவன் அவசியம் எழுந்தாக வேண்டும். ஏனெனில் போலீஸ் அதிகாரி ஐவான் மேட்வீயிச் அவனைத் தேடி வருவார். அவன் அவருடன் போயாக வேண்டும்—காட்டு விஷயமாகப் பேரம் பேசி முடிவு செய்வதற்கோ, அல்லது முக்கார்ட்டியின் உடல் மீதுள்ள பட்டைவார்களைச் சரியாகப் போடுவதற்கோ, எதற்கோ!

'நிக்கலீவ்னு, இன்னும் அவர் வரவில்லையா ?' என்று அவன் தன் மனைவியிடம் கேட்டான். 'இல்லை, வரவில்லை' என்று அவள் சொன்னுள். வீட்டு முன் வாசல்படியருகே யாரோ வண்டியில் வந்து நின்றது போல் சத்தம் கேட்டது. 'அது அவராகத்தான் இருக்க வேண்டும்'. 'இல்லை. அவர் கடந்து போய்விட்டார்.' 'நிக்கலீவ்னு! ஏய், நிக்கலீவ்னு! அவர் இன்னும் இங்கே வந்து சேரவில்லையா ?' 'இல்லை.' அவன் இன்னும் தனது படுக்கையில்தான் கிடந்தான். எழுந்திருக்க முடியவில்லை. என்ருலும் ஓயாது காத்துக் கொண்டிருந்தான். இவ்வாறு காத்துக் கிடப்பது இயற்கைக்கு விரோதமான ஏதோ ஒரு விசித்திர மாகத் தோன்றிய போதிலும் ஆனந்தமாகத் தான் இருந்தது திடீரென்று அவனுடைய ஆனந்தம் பூர்த்தியாயிற்று. அவன் யாரை எதிர்பார்த்துக் காத் திருந்தானே அந்த நபர் வந்து விட்டார். வந்தது போலீஸ் அதிகாரி ஐவான் மேட்வீயிச் அல்ல. வேருெருவர். எனினும், அவருக்காகத்தான் அவன் காத்துக் கிடந்தான். அவர் வந்தார், அவனை அழைத் தார். அவனைக் கூப்பிட்டு, நிகிட்டாவின்மீது கிடந்து உஷ்ணப்படுத்துமாறு சொன்னவர் அவர்தான். தன்னைத் தேடி அவரே வந்து விட்டதற்காக வாஸிலி ஆன்ட்ரீவிச் மிகுந்த சந்தோஷம் அடைந்தான்.

'இதோ வருகிறேன்!' என்று அவன் மகிழ்ச்சி யோடு கத்தினுன். அந்தக் கூவல் அவனை விழிக்க வைத்து விட்டது. ஆனுலும், தூங்க ஆரம்பித்தபோது இருந்த அதே ஆளாக அவன் விழித்தெழும்படி அது துணைபுரியவில்லை. அவன் எழுந்து உட்கார முயன் ருன்; முடியவில்லை. தனது கையை அசைக்க முயற்

சித்தான்; முடியவில்லை. காலை அசைக்க முயன்றான்; அதுவும் முடியவில்லை. தன் தலையைத் திருப்ப முயன்றான்; முடியவில்லை. அதனால் அவன் ஆச்சர்யம் அடைந்தான். ஆயினும் மனம் கலங்கிவிடவில்லை. இதுதான் மரணம் என்று அவன் புரிந்துகொண்டான். அந்த உணர்ச்சியிலுல்கூட அவன் குழம்பிவிடவில்லை. தனக்குக் கீழே நிகிட்டா கிடக்கிறான்; அவன் சூடுபெற்றுவிட்டான்; உயிரோடும் இருக்கிறான் என்கிற விஷயம் வாஸிலியின் நினைவில் எழுந்தது. தானே நிகிட்டா; நிகிட்டாவேதான்; தன்னுயிர் தன்னிடம் இல்லை; அது நிகிட்டாவிடமே இருந்தது எனத் தோன்றியது அவனுக்கு. அவன் சிரமத்தோடு செவிசாய்த்துக் கவனித்ததில், நிகிட்டா மூச்சு விடுவது கேட்டது. அவன் லேசாகக் குறட்டை விடுவதாகவும் தெரிந்தது. 'நிகிட்டா உயிரோடு இருக்கிறான். ஆகையால் நானும் உயிரோடு வாழ்கிறேன்' என்று வெற்றி மிடுக்கோடு அவன் தனக்குத்தானே கூறிக் கொண்டான்.

தனது பணம், தனது கடை, தனது வீடு, வாங்குவது விற்பது, மிரொனேவின் லட்சங்கள் ஆகியவற்றைப்பற்றி அவன் எண்ணிப் பார்த்தான். தனக்குத் தொல்லை தந்த இவ்விஷயங்கள் பற்றி எல்லாம் வாஸிலி பிரக்குனேவ் என்கிற மனிதன் ஏன்தான் அல்லற்பட்டுக் கொண்டானோ என்பதை அவன் புரிந்து கொள்வது சிரமமாக இருந்தது.

'ஆமாம். அது ஏன் அப்படியென்றால், உண்மையான விஷயம் எது என்பதை அவன் அறியவில்லை' என்று நினைத்தான். வாஸிலி பிரக்குனேவ் என்பவனைக் குறித்தேதான். 'அதை அவன் அறியவில்லை. ஆனால் இப்பொழுது நான் அறிகிறேன். நிச்சயமாக

அறிகிறேன்.' முன்பு தன்னை அழைத்தவரின் குரலை அவன் மீண்டும் கேட்டான். 'நான் வருகிறேன்! வந்து விட்டேன்!' என்று உவகையோடு எதிர்க்குரல் கொடுத்தான் அவன். அவன் உள்ளமும் உடலும் ஆனந்த மயமான உணர்ச்சியினால் நிறைந்துவிட்டன. தான் கட்டற்றவனாகி விட்டதையும், இனி எதுவும் தன்னைப் பிடித்து வைத்திருக்க முடியாது என்பதையும் அவன் உணர்ந்தான்.

அதன் பிறகு வாஸிலி ஆன்ட்ரீவிச் இந்த உலகத்தில் உள்ள எதையும் பார்க்கவில்லை, கேட்கவில்லை, உணரவுமில்லை.

சுற்றுப்புறம் எங்கும் பனி இன்னும் சுழலிட்டுக் கொண்டுதானிருந்தது. பனியைச் சுருட்டி வீசும் காற்றுச் சுழல்கள் அதே நிலையில் வட்டமிட்டுக் கொண்டுதானிருந்தன. செத்துப்போன வாஸிலி ஆன்ட்ரீவிச்சின் ரோமக் கோட்டுமீதும், நடுங்கியபடி நின்ற முக்கார்ட்டியின் மேலும், பார்வைக்குத் தெளிவாகப் புலனாகாத தன்மையை அடைந்து விட்ட வண்டியின்மீதும் அவை பனியை அள்ளி எறிந்தன. நிகிட்டா வண்டியினுள்ளே, இறந்து போன தனது எஜமானுக்குக் கீழே உஷ்ணம் பெற்றவாறு, படுத்துக் கிடந்தான்.

## 10

பொழுது புலரும் முன்னரே நிகிட்டா விழித்துக் கொண்டான். அவன் முதுகின் மேலே ஊர்ந்து வரத் தொடங்கிய குளிரினால் அவன் எழுப்பி விடப்பட்டான்.

அவன் ஒரு கனவு கண்டான். மில்லிலிருந்து மாவு மூட்டைகளை வண்டியில் ஏற்றிக்கொண்டு அவன்

திரும்பி வந்தான். ஓடையைக் கடந்தபோது பாலத்தைத் தவற விட்டுவிட்டான். வண்டி ஓடையில் சிக்கிக் கொண்டது. அதனால் அவன் வண்டிக்கு அடியிலே ஊர்ந்து சென்று, தனது முதுகை வளைத்து உயர்த்தி வண்டியைத் தூக்கி நகர்த்திவிட முயன்றான். ஆனால், அதிசயம்!, அந்த வண்டி நகர்வதாயில்லை. அது அவன் முதுகோடு ஒட்டிக் கொண்டது. அவன் அதைத் தூக்கவும் முடியவில்லை; அதற்குக் கீழேயிருந்து வெளிவர இயலவுமில்லை. அவன் இடுப்பு முழுவதையும் அது நசுக்கத் தொடங்கியது. மேலும் எத்தகைய குளிர் அடித்தது! அவன் வெளியேறத்தான் வேண்டும். 'விட்டு விடு!' என்று கத்தினான் அவன். தன்மீது வண்டியை அழுத்திக் கொண்டிருந்த எவரிடமோ பேசுவதுபோல, 'சாக்குகளை அப்புறப்படுத்து' என்றான். ஆனால் வண்டியோ மேலும் மேலும் குளிர் அடைந்து அவனை அழுத்தியது. அதன் பிறகு, யாரோ விசித்திர மாகத் தட்டுகிற ஒலியை அவன் கேட்டான். நன்றாக விழித்து விட்டான்.

எல்லாம் அவனுக்கு நினைவு வந்தன. தன் மீது படுத்து உறைந்துபோய் உயிரிழந்து கிடந்த எஜமான் தான் குளிர்ந்த வண்டி. முக்கார்ட்டி தான் தட்டுகிற ஓசையை எழுப்பியது. அந்தக் குதிரை இரண்டு தடவை தனது குளம்பினால் வண்டியைத் தட்டியது.

'ஆன்ட்ரீவிச்! ஏ ஆன்ட்ரீவிச்!' என்று நிகிட்டா கூப்பிட்டான். உண்மையை அவன் உணரத் தொடங்கி யிருந்ததால், தனது முதுகை நேர்படுத்திக்கொண்டு, எச்சரிக்கையோடு குரல் கொடுத்தான் அவன். ஆனால் வாஸிலி பதில் பேசவில்லை. அவனது வயிறும் கால்

களும் விறைப்படைந்து, குளிர்ந்து, இரும்புக் குண்டுகள்போல் கனத்துக் கிடந்தன.

'அவர் செத்துப் போயிருக்க வேண்டும். மோட்ச சாம்ராஜ்யம் அவருக்குப் சித்திப்பதாக!' என்று நினைத்தான் நிகிட்டா.

அவன் தனது தலையைத் திருப்பிக்கொண்டு, தன்னைச் சுற்றிலுமிருந்த பனியைத் தன் கையினுல் தோண்டி விலக்கி விட்டு, கண்களைத் திறந்து பார்த்தான்.

பகலின் ஒளி எங்கும் பரவியிருந்தது. முன் போலவே காற்று, வண்டிச் சட்டங்களினூடாக, விசிலடித்துத் திரிந்தது. பழைய மாதிரியே இன்னும் பனி விழுந்து கொண்டிருந்தது. ஆனுல் இப்போது அது வண்டியின் சட்ட அமைப்புகளை மோதி விலகி ஓடவில்லை; ஓசை எதுவுமின்றி வண்டியையும் குதிரையையும் கனமாக, அதிகக் கனமாக, மூடி மறைத்தது. குதிரையின் அசைவுகளோ, மூச்சுவிடும் ஓசையோ இப்பொழுது காதில் விழவில்லை.

'அதுவும் உறைந்துதான் போயிருக்கும்' என்று நிகிட்டா முக்கார்ட்டியைப்பற்றி எண்ணினுன். உண்மையும் அது தான். வண்டி மீது பட்ட குளம்பின் தாக்குதல்—நிகிட்டாவை எழுப்பிவிட்ட ஓசைதான்—முக்கார்ட்டியின் இறுதிப் போராட்டமாகும். அதற்கு முந்தியே குளிரினுல் உணர்ச்சி குன்றியிருந்த குதிரை சாகும் தறுவாயிலும் சோர்வுருது நிற்பதற்காகச் செய்த தீவிர முயற்சிதான் அது.

'ஓ எந்தையே, என் இறைவா! நீ என்னையும் அழைப்பதாகத் தோன்றுகிறது. நின் சித்தம் நிறைவேறுவதாக! ஆனுல் இது ஏதோ இயற்கைக்கு

விரோதமான விந்தையாக இருக்கிறது....என்ருலும், ஒரு மனிதன் இரண்டு தரம் சாகமுடியாது; ஒரே ஒரு தடவைதான் சாகவேண்டும். அதுமட்டும் சீக்கிரம் வந்து சேர்ந்தால்!' என்று நிகிட்டா பேசிக் கொண்டான்.

அவன் மீண்டும் தன் தலையை உள்ளே இழுத்துக் கொண்டான். கண்களை மூடினன். இப்பொழுது சந்தேகத்துக்கு இடமில்லாமலும், இறுதியாகவும் சாகிருேம் என்ற நம்பிக்கை ஏற்படவே, அவன் தன் நினைவு இழந்து விட்டான்.

அன்று மத்தியான வேளைக்குப் பிறகுதான் நடியானவர்கள் வாஸிலி ஆன்ட்ரீவிச்சையும் நிகிட்டாவையும் பனிக்குள்ளிருந்து தோண்டி வெளியே எடுத்தார்கள். அவ்விருவரும் புதையுண்டு கிடந்த இடம் ரோட்டிலிருந்து எழுபது கஜ தூரத்திற்குள் தான் இருந்தது; கிராமத்துக்கும் அதற்கும் அரைமைல் தூரம்கூட இல்லை.

வண்டியைப் பனி நன்ருக மூடியிருந்தது. எனினும், அதன் சட்டங்களும் அவற்றில் கட்டப்பட்டிருந்த கைக்குட்டையும் பார்வையில் பட்டுக் கொண்டுதானிருந்தன. முக்கார்ட்டி வயிறு வரை பனியில் புதையுண்டு நின்றது. பட்டை வாரும், கம்பளித் துணியும் கீழே விழுவதுபோல் தொங்கின. குதிரையின் உடல் பூராவும் 'வெள்ளைவெளேர்' என்றிருந்தது. உறைந்துபோன குரல்வளையுடன் அழுத்தப்பட்டிருந்தது அதன் தலை. நுண்பனிக் கம்பிகள் அதன் நாசித்துவாரங்களிலிருந்து தொங்கின. வெண்பனிப் படலம் பரவியிருந்த அதன் கண்களில் துயர நீர் தேங்கி நின்றதாகத் தோன்றியது. அந்த

ஒரே இரவில் வெறும் எலும்பும் தோலுமாக மாறிவிடும் அளவுக்கு அது மெலிந்து போயிருந்தது.

வாஸிலி ஆன்ட்ரீவிச் உறைந்து போன பிணம் மாதிரி விறைப்பேறிக் கிடந்தான். நிகிட்டாவின் மேலிருந்து அவனே உருட்டித்தள்ளிய போதும், அவனுடைய கால்கள் அகண்டும் கைகள் நீண்டும் ஒரே நிலேயிலேயே இருந்தன. அவனது பெரிய கழுகுக்கண்கள் உறைந்து விட்டன. கத்திரித்து விடப் பெற்ற மீசையின் கீழே திறந்திருந்த வாய் பூராவும் பனி நிறைந்து காணப்பட்டது. ஆனல் நிகிட்டா நன்கு குளிர்ந்து போன போதிலும் இன்னும் உயிருடனிருந்தான்.

அவனுக்குப் பிரக்ஞை ஏற்பட்ட உடனே, தான் அதற்கு முந்தியே இறந்து விட்டதாகவும், தனக்கு நிகழ்வன அனேத்தும் இந்த உலகத்து அனுபவங்கள் அல்ல; மறு உலக நிகழ்ச்சிகளே என்றும் அவன் நிச்சயமாக நம்பினன். அவனே வெளியே தோண்டி எடுத்து, வாஸிலியின் உறைந்த சடலத்தை உருட்டித் தள்ளிய போது குடியானவர்கள் கூச்சலிட்டுக் கொண்டிருந்தனர். முதலில் அது அவனுக்கு ஆச்சரியமாக இருந்தது. மறு உலகத்தில் கூட குடியானவர்கள் பழைய ரீதியிலேயே கத்துகிருர்களே என்றும், அவர்கள் அதே உடலோடு இருக்கிருர்களே என்றும் அவன் அதிசயித்தான். அப்புறம் அவன் இன்னும் இந்த உலகத்திலேயேதான் இருக்கிருன் என்று புரிந்து கொண்டதும் அதற்காகச் சந்தோஷப்படவில்லே. வருத்தமே அடைந்தான் அவன். அதிலும், தனது இரண்டு கால்களிலுமுள்ள விரல்கள் உறைந்து போய்விட்டன என்பதை உணர்ந்த பிறகு அவன் வருத்தம் அதிகரித்தது.

நிகிட்டா இரண்டு மாத காலம் ஆஸ்பத்திரியில் கிடந்தான். அவனுடைய கால் விரல்களில் மூன்று வெட்டி எறியப்பட்டன; மற்றவை குணமாகி விட்டன. அதனால் அவன் மறுபடியும் வேலை செய்வது சாத்திய மாயிற்று. மேலும் இருபது வருடங்கள் அவன் உயிர் வாழ்ந்தான். முதலில், பண்ணைத் தொழிலாளியாகப் பாடுபட்டான். பிறகு, வயோதிக காலத்தில் காவல் காரன் வேலைபார்த்தான். முடிவில் அவன் ஆசைப் பட்டது போலவே, வீட்டில் விக்கிரகங்களின் அடியில், ஒளி ஏற்றப் பட்ட மெழுகு வர்த்தி ஒன்றைத் தனது கைகளில் பற்றியவாறே உயிர் துறந்தான்.

அவன் சாவதற்கு முன்பு தனது மனைவியிடம் ன்னிப்பு கோரினன். சில்லறை வேலைகள் செய்கிற வனோடு அவள் கொண்டிருந்த தொடர்புக்காக அவளை அவன் மன்னித்து விட்டான். தனது மகனிடமும் பேரக் குழந்தைகளிடமும் விடை பெற்றுக் கொண் டான். தனக்கு உணவளித்து போஷிக்கும் பொறுப்பி லிருந்து தனது மகனையும் மருமகளையும் விடுவிக் கிறோம்; தனக்கு அலுப்புத் தந்த இந்த வாழ்க்கையை விட்டு விட்டு வேறொரு வாழ்விலே—ஆண்டு தோறும், மணி தோறும் தெளிவினும் தெளிவாகி, அவாவினை அதிகமாக்கி நின்ற ஒன்றிலே—பிரவே சிக்கிறோம் எனும் உண்மையான ஆனந்தத்தோடு அவன் மரணம் அடைந்தான். அங்கே, மரணத் திற்குப் பிறகு விழித்தெழுந்த இடத்தில், அவன் முன் னிலும் நன்னிலையில் வாழ்கின்றானா, மோசமாய் மாறினானா; ஏமாற்றம் கண்டானா, அல்லது தான் எதிர் பார்த்து ஏங்கியதைப் பெற்றுவிட்டானா என்பதை நாமும் ஒருநாள் அறிவோம்.

---

ஒரு நாள் சில குழந்தைகள் கணவாய் ஒன்றில் தானிய மணி போன்ற ஒரு பொருளைக் கண்டெடுத்தார்கள். அதன் நடுவே ஒரு கீற்று ஓடிக் கிடந்தது. ஆனால் அது கோழிமுட்டை அளவு பெரியதாக இருந்தது.

அவ்வழியாகப் போய்க்கொண்டிருந்த பிரயாணி ஒருவன் அந்தப் பொருளைப் பார்த்தான். ஒரு காசு கொடுத்து குழந்தைகளிடமிருந்து அவன் அதை வாங்கினான். அதை நகரத்துக்கு எடுத்துப்போய், 'அதிசயப் பொருள்' என்று சொல்லி அரசனிடம் அவன் விற்று விட்டான்.

அரசன் தனது மந்திரிகளை அழைத்தான். அது என்ன பொருளாக இருக்கும் என்று கண்டுபிடிக்கும் படி சொன்னான். மதியூக மந்திரிகள் அனைவரும் யோசித்தார்கள். யோசித்து யோசித்துப் பார்த்தார்கள். அவர்களுக்குத் தலையும் புரியவில்லை, வாலும் விளங்கவில்லை. கடைசியாக ஒரு தினத்தில், அது ஜன்னல் ஓரத்தில் கிடந்த சமயம், பெட்டைக்கோழி ஒன்று உள்ளே புகுந்து அதைக் கொத்தி அதில் சிறு துவாரம் ஒன்று ஏற்படுத்தி விட்டது. அப்பொழுது, அங்கிருந்த ஒவ்வொருவருக்கும் புரிந்து விட்டது, அது தானிய மணிதான் என்று.

உடனே அவ் அறிஞர் பெருமக்கள் அரசனை நாடிச் சென்றார்கள். 'இது ஒரு தானிய மணி ஆகும்' என்று அறிவித்தார்கள்.

இதைக் கேள்வியுற்ற அரசன் அதிக வியப் படைந்தான். அத்தகைய தானியம் எப்பொழுது எங்கே விளைந்தது என்று கண்டுபிடிக்கும்படி அரசன் மதியூக மந்திரிகளுக்குக் கட்டளையிட்டான். அவ் அறிவு மணிகள் மீண்டும் ஆலோசித்தார்கள்; அகப் பட்ட நூல்களில் எல்லாம் ஆராய்ந்து பார்த்தார்கள். எனினும் அதைப்பற்றி எதுவுமே புலனாகவில்லை.

ஆகவே அவர்கள் மன்னனிடம் சென்று முறை யிட்டார்கள்: 'நாங்கள் எவ்விதமான பதிலும் தருவதற் கில்லை. அதைப் பற்றி எங்கள் புத்தகங்களில் ஒன்றுமே இல்லை. தாங்கள் குடியானவர்களைத் தான் விசாரிக்க வேண்டும். ஒருவேளை அவர்களில் சிலர் அவர்களது தந்தையரிடமிருந்து கேள்விப்பட்டிருக்க லாம், தானியம் இந்த அளவுக்கு எந்தக் காலத்தில் எங்கே விளைந்தது என்று.'

ஆகையினால், மிகவும் வயதாகிப் போன குடியான வன் எவனையாவது தன் முன்னே கொண்டுவந்து நிறுத்தும்படி அரசன் ஆக்கினை செய்தான். அவனது பணியாளர்கள் அப்படிப்பட்ட மனிதன் ஒருவனை மன்னன் முன்னால் கொண்டு வந்து நிறுத்தினார்கள்.

முதிர்ந்து, கூன் விழுந்து, சாம்பல் போல் நிறம் வெளுத்து, பல் இழந்து காணப்பட்ட அந்த மனிதன் இரண்டு கோல்களின் ஆதரவோடு தள்ளாடி வந்து தான் ராஜாவின் திருமுன்னிலே நிற்க முடிந்தது.

அரசன் அவனிடம் அந்தத் தானியத்தைக் காட்டி னான். ஆனால் அக் கிழவன் அதைச் சரியாகப் பார்க் கக்கூட இயல வில்லை. எனினும் அவன் தன் கை களில் அதை வாங்கி, தொட்டுத் தடவிப் பார்த்தான்.

இத்தகைய தானியம் எங்கே விளைந்தது என்று உன்னால் சொல்ல முடியுமா, கிழவா? இதுமாதிரி தானியத்தை நீ எப்பொழுதாவது வாங்கியது உண்டா? அல்லது உன் வயல்களில் விதைத்தது உண்டா?' என்று மன்னன் கேட்டான்.

அந்த வயோதிகனின் காதுகள் மந்தமாகி யிருந் தன. அதனால் ராஜாவின் பேச்சை அவன் சிரமப் பட்டுத்தான் கிரகிக்க முடிந்தது. மிகுந்த சிரமத் தோடுதான் அவன் அதைப் புரிந்துகொள்ள முடிந்தது.

முடிவில் அவன் அறிவித்தான்: 'இல்லை. இது போன்ற தானியத்தை நான் என் வயல்களில் விதைக் கவுமில்லை, அறுக்கவுமில்லை. நாங்கள் தானியம் வாங்கிய காலத்தில், தானிய மணிகள் இப்பொழுது உள்ளதுபோல் சிறியனவாகவே இருந்தன. ஆனாலும் நீங்கள் என் தந்தையை விசாரித்துப் பாருங்கள். இந்த ரகமான தானியம் எங்கே விளைந்தது என்பதை அவர் கேள்விப்பட்டிருக்கலாம்.'

எனவே அக் கிழவனின் தந்தை கண்டுபிடிக்கப் பட்டு ராஜா முன் கொண்டு வரப்பட்டான். அவன் ஒரு கோல் ஊன்றி நடந்து வந்தான்.

மன்னன் அவனிடம் அந்தத் தானியத்தைக் காண்பித்தான். அவ்வயோதிகக் குடியானவனுக்கு இன்னும் பார்வை நன்றாகவே இருந்தது. அவன் தானியத்தைக் கூர்ந்து நோக்கினான்.

'இதுமாதிரி தானியம் எங்கே விளைந்தது என்று உம்மால் சொல்ல முடியுமா, பெரியவரே? இதுபோல் நீர் வாங்கியது உண்டா? இல்லையேல் உமது வயல் களில் பயிரிட்டதாவது உண்டா?' என்று அரசன் கேட்டான்.

அவ் வயோதிகனுக்குக் காதுகள் தெளிவாகக் கேட்காவிட்டாலும்கூட, தனது மகனைவிட நன்ருகக் கேட்டுத் தெரிந்து கொள்ள முடிந்தது அவனல்.

'இல்லை. இது போன்ற தானியத்தை நான் எனது வயலில் விதைக்கவுமில்லை, அறுக்கவுமில்லை. வாங்குவதுபற்றிச் சொல்லப் போனல், என் காலத்தில் பணம் என்பது பழக்கத்துக்கு வரவேயில்லை. ஒவ்வொருவனும் தனக்கு வேண்டிய தானியத்தைப் பயிரிட்டான். அவசியம் ஏற்படுகிறபோது பரஸ்பரம் பங்கிட்டுக் கொள்வதும் உண்டு. இதுமாதிரி தானியம் எங்கே விளைந்தது என்று எனக்குத் தெரியாது. நாங்கள் பயிரிட்ட தானியம் இந்தக் காலத்துத் தானியத்தைவிட அளவிலும் பெரிதாக இருந்தது. மாவும் அதிகமாகக் கிடைத்தது. ஆனலும் இத்தகைய தானியத்தை நான் பார்த்ததேயில்லை. என் தந்தை காலத்தில் தானியம் ரொம்பவும் பெரியதாக விளைந்தது, மிக அதிகமாக மாவும் இருந்தது என்று அவர் சொல்லக் கேட்டிருக்கிறேன். நீங்கள் அவரை விசாரிப்பது நல்லது' என்று அவன் சொன்ஞன்.

ஆகவே ராஜா அந்தக் கிழவனின் தகப்பனைத் தேடி ஆட்களை அனுப்பி வைத்தான். அவர்கள் அவனையும் கண்டுபிடித்து விட்டார்கள். அவனும் மன்னன் முன்ஞல் அழைத்து வரப்பட்டான்.

அவன் ஊன்றுகோலின் உதவி இல்லாமலே தாராளமாக நடந்து வந்தான். அவன் பார்வை அருமையாக இருந்தது. காதுகள் நன்ருகக் கேட்டன. பேச்சும் தெளிவாக இருந்தது. அவனிடம் அரசன் அந்தத் தானியத்தைக் காட்டியதும், அவன் அதை வாங்கிப் பார்த்தான் ; தனது கையில் வைத்து உருட்டிஞன்.

'இப்படிப்பட்ட அருமையான தானியத்தை நான் கண்ணுல் கண்டு ரொம்ப காலம் ஆகிவிட்டது' என்று சொல்லி அவன் அதில் கொஞ்சம் கிள்ளி எடுத்து வாயில் போட்டு ருசி பார்த்தான். 'அதே ரகம் தான்' என்றும் சொன்ஞன்.

'இந்த ரகத் தானியம் எங்கே எப்பொழுது விளைந்தது என்று சொல்லு, தாத்தா. இதுமாதிரி நீ எப்பொழுதாவது வாங்கியது உண்டா? அல்லது வயல்களில் பயிரிட்டது உண்டா?' என்று அரசன் கேட்டான்.

அம் முது பெருங் கிழவன் தெரிவித்தான்: 'இது போன்ற தானியம் எனது காலத்தில் எங்கு பார்த்தாலும் விளைந்து வந்தது. எனது சின்ன வயதிலே இத்தகைய தானியத்தைத் தின்றுதான் நான் வளர்ந்தேன். மற்றவர்களை ஊட்டி வளர்த்ததும் இதுபோன்ற தானியத்திஞல்தான். இந்த ரகத் தானியத்தையே நாங்கள் விதைத்தோம்; அறுத்தோம்; கதிர் அடித்தோம்.'

'நீ அதை எங்கிருந்தாவது வாங்கிஞயா? அல்லது நீயாகவே பயிரிட்டு உருவாக்கிஞயா? சொல்லு தாத்தா' என்று ராஜா விசாரித்தான்.

அம் முதியவன் புன்னகை புரிந்தான். 'எனது காலத்தில் உணவுப் பொருளை விற்பனை செய்வது அல்லது விலைகொடுத்து வாங்குவது என்கிற பாபத்தைப்பற்றி எவரும் எண்ணியது கூடக் கிடையாது. பணம் எனும் விஷயமாக எங்களுக்கு எதுவும் தெரியாது. ஒவ்வொருவனுக்கும் அவனுக்கே சொந்தமான தானியம் கிடைத்து வந்தது' என்ருன்.

'அப்படியாஞல், தாத்தா உன் வயல் எங்கே இருந்தது? இதுபோன்ற தானியத்தை நீ எங்கே பயிரிட்டாய்?' என்று அரசன் கேட்டான்.

கிழவன் பதிலளித்தான்: 'கடவுளின் பூமிதான் எனது நிலம். எங்கெங்கு நான் உழுதேனோ அங்கெல்லாம் எனது வயல்தான். நிலம் தாராளமாகக் கிடந்தது. அதைத் தனது உடைமை என்று எந்த மனிதனும் சொந்தம் கொண்டாடியதில்லை. உழைப்பை மட்டுமே தங்களுக்குச் சொந்தமானது என்று மனிதர் குறிப்பிட்டு வந்தனர்.'

'இன்னும் இரண்டு கேள்விகளுக்கு மட்டும் பதில் சொல்லு, போதும். முதலாவது, பூமி அந்தக் காலத்தில் மட்டும் ஏன் இத்தகைய தானியங்களைத் தந்தது, இப்பொழுது ஏன் இப்படி விளைச்சல் தருவதில்லை? இரண்டாவதாக, உனது பேரன் இரண்டு கோல்கள் ஊன்றி நடப்பானேன்; உன் மகன் ஒரு கோலின் துணையோடு நடப்பது ஏன்; நீ மாத்திரம் கோல் எதுவும் இல்லாமல் நடப்பது எதனால்? உனது கண்கள் ஒளி நிறைந்து உள்ளன. உன் பற்கள் வலிவுடன் இருக்கின்றன. உனது பேச்சு தெளிவாகவும் காதுக்கு இனியதாகவும் இருக்கிறது. இதெல்லாம் எப்படி நேர்ந்தது?' என்று ராஜா கேட்டான்.

'இவையெல்லாம் இவ்வாறு ஏற்பட்டிருப்பதன் காரணம் என்னவென்றால்—தங்கள் உழைப்பைக் கொண்டே வாழும் வழக்கத்தை மக்கள் இழந்து விட்டார்கள். மற்றவர்களின் உழைப்பை நம்பி வாழப் பழகிக் கொண்டார்கள். அந்தக் காலத்தில், மனிதர்கள் கடவுளின் கட்டளைப்படி வாழ்க்கை நடத்தினர்கள். தங்களுக்கு உரியது எதுவோ அதைக்கொண்டு திருப்தி அடைந்தார்கள்; மற்றவர்கள் உற்பத்தி செய்ததை அபகரிக்க வேண்டும் என்று அவர்கள் ஆசைப்பட்டதில்லை.' இப்படி விளக்கம் கொடுத்தான் அந்தக் கிழவன்.

## 3. குற்றமும் தண்டனையும்

விளாடிமிர் என்னும் நகரத்தில் வாலிப வியாபாரி ஒருவன் வசித்து வந்தான். ஐவான் டிமிட்ரிச் அக்ஸஞேவ் என்பது அவன் பெயர். அவனுக்கு இரண்டு கடைகள் இருந்தன. சொந்த வீடு ஒன்றும் உண்டு.

அக்ஸஞேவ் அழகன். மினுமினுக்கும் சுருட்டை முடி அவன் தலையை அழகு படுத்தியது. வேடிக்கை நிறைந்தவன் அவன். பாட்டுப் பாடுவதில் அவனுக்கு அதிக ஆர்வம் இருந்தது. சின்னஞ் சிறு வயதிலேயே அவன் குடிக்கப் பழகி விட்டான். குடி அளவுக்கு அதிகமாகி விடும்போது அவன் அமர்க்களப் படுத்தி விடுவான். ஆனால் அவன் கல்யாணம் செய்து கொண்ட பிறகு குடிப்பதை நிறுத்தி விட்டான். எனினும் சமயா சமயங்களில் குடியை நாடுவதும் உண்டு.

அப்பொழுது கோடை காலம். நிஷ்னி நகரத்துச் சந்தைக்குப் போவதற்காக அக்ஸஞேவ் கிளம்பிக் கொண்டிருந்தான். அவன் தனது குடும்பத்தினரிடம் விடை பெற்ற போது, "ஐவான் டிமிட்ரிச் நீங்கள் இன்றைக்குப் போகவேண்டாம். நான் உங்களைப் பற்றி கெட்ட கனவு ஒன்று கண்டேன்" என்று அவன் மனைவி சொன்னாள்.

அக்ஸஞேவ் சிரித்தான். "நான் சந்தையை அடைந்த உடனேயே தலைகால் தெரியாமல் குடித்துப் போட்டு ஆடுவேன் என்றுதானே நீ பயப்படுகிறாய்?" என்றான்.

"என்ன பயமோ, அது எனக்கே புரியவில்லை. நான் கெட்ட சொப்பனம் கண்டேன். அதுதான் எனக்குத் தெரியும். நீங்கள் நகரத்திலிருந்து திரும்பி வந்ததாகக் கனவிலே கண்டேன். ஆனால் நீங்கள் உங்கள் தலையிலிருந்த குல்லாயை எடுத்ததும், உங்கள் தலைமுடி பூராவும் ஒரேயடியாக நரைத்துப் போயிருந்தது" என்று அவள் சொன்னாள்.

அக்ஸனேவ் சிரித்தான். "அப்படியானால் அதிர்ஷ்டம் என்று தான் அர்த்தம். நான் கொண்டு போகிற சரக்குகள் எல்லாவற்றையும் விற்பனை செய்து விட்டு, உனக்கு அன்பளிப்பாக ஏதாவது வாங்கி வருகிறேனா இல்லையா என்று பாரேன்!' என்றான். அனைவரிடமும் விடைபெற்றுக் கொண்டு அவன் பயணமானான்.

அவன் கொஞ்ச தூரம் சென்ற பிறகு, தனக்கு அறிமுகமான வியாபாரி ஒருவனை வழியிலே சந்திக்க நேர்ந்தது. இரண்டு பேரும் அன்றைய இராத்திரிப் பொழுதைக் கழிப்பதற்காக ஒரே விடுதியில் தங்கினார்கள். இருவரும் ஒன்றாகத் தேநீர் பருகிவிட்டு அருகருகே இருந்த தனித்தனி அறைகளில் படுத்துறங்கச் சென்றார்கள்.

வெகு நேரம் வரை தூங்கும் வழக்கம் அக்ஸனேவிடம் கிடையாது. மேலும், குளுகுளு என்றிருக்கும் வேளையில் பிரயாணம் செய்வது நல்லது என்று அவன் எண்ணினான். அதனால், பொழுது விடிவதற்கு முன்னரே அவன் வண்டிக்காரனை எழுப்பி, வண்டியில் குதிரைகளைப் பூட்டும்படி கட்டளை யிட்டான்.

பிறகு, பின் பக்கத்தில் குடியிருந்த விடுதிச் சொந்தக்காரனைத் தேடிப் போனான் அவன். கணக்

குப்படி கொடுக்கவேண்டிய பணத்தைச் செலுத்தி விட்டு, அவன் தனது யாத்திரையைத் தொடர்ந்தான்.

சுமார் இருபத்து ஐந்து மைல்களைக் கடந்த பிறகு, குதிரைகளுக்குத் தீனி கொடுப்பதற்காக அவன் வண்டியை நிறுத்தினான். அங்கிருந்த விடுதிக் குப் போகும் பாதையில் சற்றே ஓய்வு எடுத்துக் கொண்ட பிறகு அக்ஸனோவ் உள்ளே சென்றான். 'ஸமோவா' ருக்குச் சூடேற்றும்படி சொல்லிவிட்டு, அவன் தனது இசைக்கருவியை எடுத்துப் பாட ஆரம் பித்தான்.

திடீரென்று, மணிகள் 'ஜனஜன' என்று ஒலிக்க, மூன்று குதிரைகள் பூட்டிய வண்டி ஒன்று அங்கே வந்து நின்றது. அதிலிருந்து பெரிய அதிகாரி ஒருவர் இறங்கினார். அவருக்குப் பின்னால் இரண்டு வீரர்கள் வந்தார்கள்.

அவர் அக்ஸனோவை அணுகி விசாரணை செய்யத் தொடங்கினார். அவன் யார், எங்கிருந்து வந்தான் என்றெல்லாம் கேட்டார். அவனும் விவரமாகப் பதில் அளித்தான். பிறகு, "என்னோடு சேர்ந்து டீ சாப் பிடுங்களேன்" என்று உபசரித்தான்.

ஆனால் அந்த அதிகாரி விசாரணையைத் தொடர்ந்து நடத்தலானார். "நேற்று ராத்திரி நீ எங்கே தங்கி யிருந்தாய்? நீ தனியாக இருந்தாயா; இன்னொரு வியாபாரியுடன் தங்கினாயா? அந்த வியாபாரியை இன்று காலையில் நீ பார்த்தாயா? விடிவதற்கு முன்பே நீ ஏன் விடுதியை விட்டுப் புறப்பட்டு வந்தாய்?" என்று விசாரித்தார்.

இவ்வாறெல்லாம் தான் ஏன் விசாரிக்கப்பட வேண்டும் என்ற வியப்பு அவனுக்கு ஏற்பட்டது.

என்றாலும் அக்ஸனேவ் நடந்த விஷயத்தை விரிவாக எடுத்துக் கூறினான். "நான் என்ன திருடனா, கொள்ளைக்காரனா? என்னை ஏன் இப்படிக் குறுக்கு விசாரணை செய்கிறீர்கள்? எனது சொந்தத் தொழில் காரணமாக நான் பிரயாணம் செய்கிறேன். என்னைக் கேள்வி கேட்க வேண்டிய அவசியமே கிடையாது" என்றும் சொன்னான்.

உடனே அந்த அதிகாரி இரண்டு வீரர்களையும் அருகே அழைத்தார். 'நான் இந்த வட்டாரத்தின் போலீஸ் அதிகாரி. நேற்று இரவு உன் கூடத் தங்கி யிருந்த வியாபாரி கழுத்தறுபட்டுக் கிடந்தான். அதனால் தான் நான் உன்னை விசாரிக்கிறேன். இப்பொது உன் சாமான்களை சோதனை போட வேண்டும்" என்று அவர் விளக்கினார்.

அவ் வீரர்களும் போலீஸ் அதிகாரியும் அக்ஸனே வின் சாமான்களை எல்லாம் பரிசோதித்தார்கள். திடீ ரென்று ஒரு பையிலிருந்து கத்தி ஒன்றைக் கண் டெடுத்த அதிகாரி "இது யார் கத்தி?" என்று கூவினார்.

அக்ஸனேவ் பார்த்தான். ரத்தம் தோய்ந்த கத்தியைக் கண்டதும் அவன் திடுக்கிட்டான்.

"இந்தக் கத்தியில் ரத்தம் எப்படி வந்தது?"

அக்ஸனேவ் பதில் சொல்ல முயற்சித்தான். அவனுக்கு சரியாகப் பேச வரவில்லை. "நான் வந்து.... எனக்குத் தெரியாது....என்னுடைய தில்லை" என்று அவன் குளறினான்.

"வியாபாரி கழுத்து அறுபட்டு படுக்கையில் கிடந்தது இன்று காலையில் தெரிந்தது. நீ ஒருவன்

தான் அந்த மாதிரி வேலை செய்திருக்க முடியும். வீடு உள்ளே தாழிட்டுப் பூட்டப்பட்டிருந்தது. அங்கே வேறு ஆளே கிடையாது. இதோ ரத்தக்கறை படிந்த கத்தி உன் பையிலிருந்து கிடைத்தது. உன் முகமும் உனது நடத்தையும் உன்னைக்காட்டிக் கொடுக்கின்றன. உண்மையைச் சொல்லிவிடு. நீ அவனை எப்படிக் கொலை செய்தாய்? எவ்வளவு பணம் திருடினாய்?" என்று கேட்டார் அந்த அதிகாரி.

தான் கொலை செய்யவில்லை; இரண்டுபேரும் சேர்ந்து டீ குடித்துவிட்டுப் பிரிந்த பிறகு தான் அவ் வியாபாரியைப் பார்க்கவே இல்லை; தனது சொந்தப் பணமான எட்டாயிரம் ரூபிள்களைத் தவிர தன்னிடம் வேறு பணமே கிடையாது; அந்தக் கத்தி தன்னுடையது அல்ல என்று அக்ஸனேவ் சத்தியம் செய்தான். ஆனாலும், அவன் குரல் கம்மியது. அவன் முகம் வெளிறித் தோன்றியது. அவனே குற்றம் செய்து விட்டவனைப்போல் பயந்து நடுங்கிக் கொண்டிருந்தான்.

அவனைக் கட்டி வண்டியில் ஏற்றும்படி அதிகாரி உத்திரவிட்டார். வீரர்கள் அவன் கால்களை இறுகப் பிணைத்து அவனை வண்டியினுள் தள்ளியபோது, அக்ஸனேவ் சிலுவை அடையாளம் செய்து கண்ணீர் வடித்தான். அவனது பணமும் சரக்குகளும் அவனிட மிருந்து பறிக்கப்பட்டன. அருகில் உள்ள நகரின் சிறைக்கூடத்துக்கு கைதியாக அனுப்பப்பட்டான் அவன்.

அவனுடைய நடத்தையைக் குறித்து விளாடிமிர் நகரத்தில் விசாரணை செய்யப்பட்டது. முன்பெல்லாம் அவன் குடித்து வீண்பொழுது போக்கி வந்தான்;

என்ருலும் அவன் நல்ல மனிதன்தான் என்றே அந் நகரத்தின் வியாபாரிகளும் மற்றவர்களும் அறிவித் தார்கள். பிறகு வழக்கு விசாரணைக்கு வந்தது. ரியஜான் நகரிலிருந்து வந்த வியாபாரியைக் கொலை செய்து, அவனிடமிருந்த இருபதிஞயிரம் ரூபிள்களை அக்ஸனேவ் அபகரித்துக் கொண்டான் என்று குற்றம் சாட்டப்பட்டது.

அவன் மனைவி குழப்பத்தில் ஆழ்ந்தாள். எதை நம்புவது என்றே அவளுக்குப் புரியவில்லை. அவளது குழந்தைகள் அனைவரும் சின்னஞ் சிறுசுகள். பால்குடி மறக்காத சிறுபிள்ளை ஒன்றும் இருந்தது. எல்லாக் குழந்தைகளையும் அழைத்துக் கொண்டு அவள் கணவன் ஜெயிலில் கிடந்த நகரை நோக்கிச் சென்ருள். முதலில் அவனைச் சந்திப்பதற்கு அவளுக்கு அனுமதி கிடைக்கவில்லை. பிறகு, எவ்வளவோ அழுது கெஞ்சி யதன் பயனுக அதிகாரிகளிடமிருந்து அவள் அனுமதி பெற முடிந்தது. அவள் கணவனிடம் அவளைக் கூட்டிச் சென்ருர்கள்.

ஜெயில் உடுப்பு அணிந்து, விலங்குகள் மாட்டப் பெற்று, திருடர்களோடும் கொடிய குற்றவாளி களுடனும் அடைத்து வைக்கப்பட்டிருந்த கணவனைப் பார்த்த உடனேயே அவள் தலைசுற்றி கீழே விழுந்து விட்டாள். வெகு நேரம் வரையில் அவள் விழிப்பு அடையவே இல்லை.

பிறகு தனது குழந்தைகளைச் சேர்த்து அணைத்துக் கொண்டு அவள் அவனுக்கு அருகே அமர்ந்தாள். வீட்டு விஷயங்களைப்பற்றி அவனிடம் பேசிஞள். அவனுக்கு என்ன நேர்ந்தது என விசாரித்தாள். அவன் நடந்தது முழுவதையும் அவளிடம் சொன்ஞன்.

"இனிமேல் நாம் என்ன செய்யலாம்?" என்று அவள் கேட்டாள்.

"குற்றம் எதுவும் செய்யாத ஒருவன் அழிந்து போகாதபடி காப்பாற்ற வேணும் என்று கோரி ஜார் மன்னனுக்கு மனுச் செய்யவேண்டும்." தான் அவ்விதம் ஒரு மனு தயாரித்து ஜாருக்கு அனுப்பியதாகவும், அது ஏற்றுக் கொள்ளப்படவில்லை என்றும் அவள் அறிவித்தாள்.

அக்ஸனேவ் மறுபேச்சு பேசவில்லை. அவன் முகம் வாட்டத்துடன் தாழ்ந்தது.

அவன் மனைவி சொன்னாள்: "உங்கள் தலைமுடி நரைத்துப் போனதாக நான் சொப்பனம் கண்டேனே, ஞாபகம் இருக்கிறதா? அதில் அர்த்தம் இல்லாமல் இல்லை. நீங்கள் அன்றைக்கு பயணம் தொடங்கி இருக்கக்கூடாது." பிறகு அவனது தலைமயிரினூடே தன் விரல்களை ஓடவிட்டவாறே அவள் கேட்டாள் "எனது அருமை வான்யா, உங்கள் மனைவியிடம் உண்மையைச் சொல்லுங்கள். அந்தக் காரியம் செய்தது நீங்கள் இல்லையே?" என்று.

"அப்படியானால், நீ கூட என்னைச் சந்தேகிக்கிறாயா!" என்றான் அக்ஸனேவ். அவன் முகத்தைத் தனது கைகளால் மூடிக்கொண்டு அழ ஆரம்பித்தான். மனைவியும் மக்களும் அங்கிருந்து போய்விட வேண்டும் என்று காவல்காரன் வந்து தெரிவிக்கவே, அக்ஸனேவ் தனது குடும்பத்திற்குப் பிரிவு வணக்கம் அறிவித்தான். அவனுடைய இறுதி உபசாரம் அதுதான்.

அவர்கள் போய்ச் சேர்ந்ததும், மனைவி பேசியதை எல்லாம் எண்ணிப் பார்த்தான் அக்ஸனேவ். தனது

மனைவிகூடத் தன்மீது சந்தேகப்படுகிருள் என்ற நினைப்பு எழவும், "கடவுள் ஒருவருக்குத்தான் உண்மை தெரியும் போலிருக்கிறது. அவருக்குத்தான் நாம் மனுச் செய்து கொள்ளவேண்டும். அவரிடமிருந்துதான் நாம் கருணையை எதிர்பார்க்கவேண்டும்" என்று அக்ஸனேவ் தன்னைத்தானே தேற்றிக் கொண்டான்.

ஆகவே அக்ஸனேவ் அதற்குப் பிறகு எந்த விதமான மனுவும் எழுதவில்லை. தனக்கு விடுதலை கிடைக்கும் என்கிற நம்பிக்கையை அவன் துறந்து விட்டான். ஆண்டவனை நினைத்துப் பிரார்த்தனை மட்டும் புரிந்து வந்தான்.

அவனுக்குக் கசைஅடி கொடுக்கவேண்டும்; அப்புறம் சுரங்க வேலைக்கு அவனை அனுப்பிவிட வேண்டும் என்று தண்டனை விதிக்கப்பட்டது. அவ்வாறே அக்ஸனேவ் கசையினுல் அடிக்கப் பட்டான். அதனுல் ஏற்பட்ட காயங்கள் ஆறிய பிறகு, இதர குற்றவாளிகளுடன் அவனும் சைபீரியாவுக்கு அனுப்பப்பட்டான்.

இருபத்தாறு வருட காலம் அக்ஸனேவ் சைபீரியாவில் குற்றவாளியாகத் தண்டனை அனுபவித்து வாழ்ந்தான். அவனுடைய தலைமயிர் பனி மாதிரி வெளுத்துப் போயிற்று. அவனது தாடி நீண்டு, மெல்லியதாய், நரை ஓடி வளர்ந்தது. அவனது உற்சாகம் ஒழிந்து போய்விட்டது. அவன் கூனிக் குறுகிப் போனுன். அவன் நடையிலே தளர்ச்சி காணப்பட்டது. அவன் அதிகமாகப் பேசுவதில்லை. ஒருபோதும் சிரிப்பதில்லை. ஆனுல் அடிக்கடி பிரார்த்தனை செய்தான் அவன்.

சிறையில் செருப்பு தைக்கும் தொழிலைக் கற்றுத் தேர்ந்தான் அக்ஸனேவ். அதன்மூலம் அவனுக்குக் கொஞ்சம் பணம் கிடைத்தது. அதைக்கொண்டு அவன் 'ஞானிகளின் வாழ்க்கை' என்ற புத்தகத்தை வாங்கினான். சிறையினுள் வெளிச்சம் நிலவுகிற வரையில் அவன் அந்த நூலைப் படிப்பான். ஞாயிற்றுக்கிழமைகளில், சிறையில் உள்ள மாதா கோயிலில் பிரார்த்தனை நேரத்தின்போது, புதிய ஏற்பாட்டில் உள்ள திருமுகத்தை அவன்தான் வாசிப்பான். தேவகீதம் பாடுவதிலும் அவன் கலந்து கொள்வான். அவனுடைய குரல் மட்டும் இன்னும் நன்றாகவே இருந்தது.

அவனது சாந்த குணத்திற்காக அக்ஸனேவை சிறை அதிகாரிகள் பெரிதும் விரும்பினார்கள் அவனுடன் வசித்த இதர கைதிகள் அவனிடம் மரியாதை காட்டினார்கள். அவர்கள் அவனை 'தாத்தா' என்றும் 'ஞானி' என்றும் அழைத்து வந்தனர், எதையாவது குறித்துச் சிறை அதிகாரிகளுக்கு மனுச் செய்து கொள்ள நேர்ந்தால், அவர்கள் அக்ஸனேவையே தங்கள் பிரதிநிதியாகத் தேர்ந்தெடுப்பது வழக்கம். கைதிகளுக்குள் ஏதாவது தகராறு ஏற்பட்டுவிட்டால், விஷயத்தை விசாரித்து விவகாரத்தைத் தீர்த்து ஒழுங்கு படுத்துவதற்காக அவர்கள் அவனையே நாடினார்கள்.

அக்ஸனேவின் வீட்டிலிருந்து எவ்விதத் தகவலும் எட்டவில்லை. அவனது மனைவியும் மக்களும் உயிரோடு இருந்தார்களா, இறந்து போனார்களா எனும் விஷயமே அவனுக்குத் தெரியாமல் போய்விட்டது.

ஒருநாள், அந்த ஜெயிலுக்கு புதிதாகக் கைதிகளின் கூட்டம் ஒன்று வந்து சேர்ந்தது. மாலை

வேளையில் பழைய கைதிகள் புதிய ஆசாமிகளைச் சூழ்ந்து கொண்டு, யார் யார் எந்த எந்த ஊரி லிருந்து வந்திருக்கிருர்கள், என்ன காரணத்திற்காகத் தண்டனை பெற்றுள்ளார்கள் என்றெல்லாம் விசாரித் தார்கள். மற்றவர்களோடுகூடி அக்ஸஞேவும் புதிதாக வந்தவர்களுக்கு அருகே உட்கார்ந்திருந்தான். அவன் உற்சாகமற்ற முறையிலேயே அனைத்தையும் கேட்டுக் கொண்டிருந்தான்.

புதிய குற்றவாளிகளில், திடகாத்திரமான நெட் டையன் ஒருவன் இருந்தான். அவனுக்கு அறுபது வயது இருக்கும். ஒட்ட வெட்டி விடப்பட்ட தாடி வைத்திருந்தான் அவன். தான் எதற்காகக் கைது செய்யப்பட்டான் என்பதைப்பற்றி அவன் பேசிக் கொண்டிருந்தான்.

''சறுக்கு வண்டியில் கட்டியிருந்த ஒரு குதிரையை நான் ஓட்டிச் சென்றேன். அதற்காக என்னைப் பிடித்துக் கொண்டார்கள். திருட்டுப் பட்டமும் கட்டி விட்டார்கள். நான் சொன்னேன்—வீட்டுக்கு விரை வாகப் போய்ச் சேர வேண்டுமே என்றுதான் நான் இந்தக் குதிரையை அவிழ்த்தேன். அப்புறம் இதை அதன் போக்கிலே விட்டுவிட எண்ணியிருந்தேன். மேலும், அந்த வண்டிக்காரன் எனது நெருங்கிய நண்பன் ஆவான். ஆகையினுலே, இதில் தவறு ஒன்றும் கிடையாது என்றேன். 'இல்லை. நீ திருடத் தான் செய்தாய்' என்கிருர்கள் மற்றவர்கள். ஆனுல், நான் எங்கே திருடினேன், எப்படித் திருடினேன் என்பது எதையும் அவர்களால் சொல்ல முடியவில்லை. ஒருசமயம் உண்மையாகவே நான் தவருன ஒரு காரி யத்தைச் செய்தேன். நியாயமாகப் பார்த்தால் ரொம்ப

காலத்துக்கு முன்னாலேயே நான் இங்கே வந்திருக்க வேண்டும். ஆனால் அந்தச் சந்தர்ப்பத்தில் என்னை யாரும் கண்டுகொள்ளவில்லை. இப்பொழுதோ, ஒன்று மில்லாததற்காக என்னை இங்கே அனுப்பி விட்டார்கள். ....அஹ, நான் இப்ப சொல்வது பொய்தான். முன்னாலேகூட நான் சைபீரியாவுக்கு வந்திருக்கிறேன். ஆனால் ரொம்பநாள் தங்கியிருக்கவில்லை."

"நீ எங்கிருந்து வருகிறாய்?" என்று ஒருவன் கேட்டான்.

"விளாடிமிரிலிருந்து. எனது குடும்பத்தாருக்கு அந்த ஊர்தான். மகார் என்பது என் பெயர். செமினிச் என்றும் என்னைக் கூப்பிடுவார்கள்" என்றான் அவன்.

அக்ஸனோவ் தலை நிமிர்ந்து அவனைப் பார்த்தான். "செமினிச், விளாடிமிர் நகரில் உள்ள அக்ஸனோவ் குடும்பத்தாரைப்பற்றி உனக்கு ஏதாவது தெரியுமா? அவர்கள் இன்னும் உயிரோடு இருக்கிறார்களா?" என்று கேட்டான்.

"தெரியாமல் என்ன! ரொம்ப நன்றாகத் தெரியும். அக்ஸனோவ் குடும்பத்தினர் நல்ல பணத்தோடு வாழ்கிறார்கள். அவர்களுடைய தகப்பனார்தான் சைபீரியாவில் வசிக்கிறார். அவரும் நம்மைப்போல் பாபம் செய்தவர் போலிருக்கிறது! அது சரி, தாத்தா, நீ எப்படி இங்கே வந்து சேர்ந்தாய்?" என்றான் மற்றவன்.

தனது துரதிர்ஷ்டம் பற்றிப் பேச அக்ஸனோவுக்கு இஷ்டமில்லை. அவன் வெறுமனே பெருமூச்செறிந்தான் "எனது பாபங்களுக்காக நான் இருபத்தாறு வருடகாலம் சிறையில் கிடக்கிறேன்" என்றான்.

"என்ன பாபம்?" என்று மகார் செமினிச் கேட்டான்.

ஆனல் அக்ஸனேவிச், "ஊம், ஊம்........எனக்கு ஏற்ற தண்டனையாகத்தான் இருக்கும்" என்று மட்டுமே சொன்னன். அவன் அதற்குமேல் எதுவும் பேசியிருக்க மாட்டான். ஆனல் அவனுடைய சகாக்கள் விஷயத்தை எடுத்துச் சொன்னர்கள். எவனே ஒருவன் யாரோ ஒரு வியாபாரியைக் கொலை செய்துவிட்டு கத்தியை அக்ஸனேவின் சரக்குகளுக்கிடையே பதுக்கி வைத்துவிடவே, அவன் அநியாயமாகத் தண்டிக்கப்பட்டு சைபீரியா வந்து சேர்ந்த விவரத்தை அறிவித்தார்கள்.

இதைக் கேள்வியுற்றதும் மகார் செமினிச் அக்ஸனேவைக் கூர்ந்து நோக்கினன். தனது முழங்கால் மீது ஓங்கித் தட்டிக்கொண்டு அவன் உற்சாகமாகக் கத்தினன். "அட, இது ஆச்சர்யம்தான். ஆனல், தாத்தா, நீ எவ்வளவு முதியவனக வளர்ந்துவிட்டாய்!" என்ருன்.

அவனுக்கு ஏன் அவ்வளவு ஆச்சர்யம் ஏற்பட்டது என்றும், அதற்குமுன் அக்ஸனேவை அவன் எங்கே பார்த்திருக்கிருன் என்றும் மற்றவர்கள் அவனைக் கேட்டார்கள். ஆனல் மகார் சரியாகப் பதில் சொல்லவில்லை. "நாங்கள் இங்கே சந்திக்க நேர்ந்தது ஆச்சர்யமே" என்றுதான் சொன்னன்.

இவ் வார்த்தைகள் அக்ஸனேவை சிந்திக்கத் தூண்டின. அந்த வியாபாரியைக் கொலை செய்தது யார் என்கிற விவரம் இவனுக்குத் தெரிந்திருக்குமோ என்று நினைத்தான் அவன். ஆகவே, "செமினிச்,

ஒருவேளை நீ அந்தச் சம்பவம்பற்றி முன்பே கேள்விப் பட்டிருந்தாயோ? அல்லது நீ என்னை இதற்கு முந்தி பார்த்தது உண்டோ?" என்று கேட்டான்.

"கேள்விப்படாமல் இருக்க முடியுமா என்ன! உலகம் பூராவும் வதந்திகள் பறந்து திரிகின்றன. ஆனால் இது ரொம்ப காலத்துக்கு முந்திய சங்கதி. நான் என்ன கேள்விப்பட்டேன் என்பதே எனக்கு மறந்து போய்விட்டது."

"அந்த வியாபாரியைக் கொன்றவன் யார் என்பதை நீ கேள்விப்பட்டது உண்டோ?" என்று வினவினான் அக்ஸனேவ்.

மகார் செமினிச் சிரித்துவிட்டுச் சொன்னான்: எவனுடைய பையில் கத்தி கண்டெடுக்கப்பட்டதோ அவனேதான் கொலை செய்திருக்க வேண்டும். வேறு எவனாவது அந்தக் கத்தியை அங்கே பதுக்கி வைத்திருக்கக் கூடுமே என்றால்—'அகப்படாமல் இருக்கிற வரையில் அவன் திருடன் இல்லை' என்பது வசனம். உன்னுடைய பைக்குள், அது உன் தலைக்குக் கீழே இருந்தபொழுது, வேறொருவன் கத்தியை எப்படித் திணித்திருக்க முடியும்? அப்படிச் செய்யும் பொழுது உன் தூக்கம் கலைந்து போயிருக்காதா?"

இந்தப் பேச்சைக் கேட்டதுமே, வியாபாரியைக் கொன்ற ஆள் இவன்தான் என்ற உறுதி அக்ஸனேவுக்கு ஏற்பட்டது. அவன் எழுந்து அங்கிருந்து போய்விட்டான்.

அன்று இரவு முழுவதும் அக்ஸனேவ் தூங்கவே இல்லை. கடுமையான துயரம் அனுபவித்துக் கிடந்தான் அவன். பலரகமான நிழல்களும் அவனது மன

அரங்கிலே ஊசலிட்டன. அவனுடைய மனைவியின் உருவம், அவன் சந்தைக்குப் புறப்பட்ட சமயத்தில் விட்டுப் பிரிந்தபோது காட்சி தந்து நின்ற நிலையில், இப்பொழுதும் தோன்றியது. கண் முன்னால் அவளே நிற்பதுபோல் தோன்றியது அவனுக்கு. அவள் முகமும், அவளுடைய கண்களும் மிகத் தெளிவாகப் புலனாயின. அவள் பேசுவதையும் சிரிப்பதையும் அவன் கேட்டான். அப்புறம், அவன் தனது குழந்தைகளைக் கண்டான். அந்தக் காலத்தில் இருந்தது போல், சின்னஞ் சிறுசுகளாய் கண்டான். ஒன்று சிறு சட்டை அணிந்திருந்தது. மற்றொன்று அம்மாவின் மார்பில் முகம் புதைந்திருந்தது. அதற்குப் பிறகு அவன் தன்னையே, முன்பு தான் இருந்தது போல வாலிபமும் உற்சாகமும் நிறைந்த தோற்றத்தில் கண்டான். கைது செய்யப்படுவதற்கு முன்பு விடுதியின் முற்றத்தில் அமர்ந்து இசைக் கருவியை மீட்டிக் கொண்டு தான் பாடியிருந்த நிலையை எண்ணிப் பார்த்தான் அவன். அக்காலத்தில் எப்படி வாழ்ந்தான் அவன், கவலை என்பதையே அறியாதவனாக! தான் கசையடி பட்ட விதத்தையும், தண்டனை கொடுத்தவனையும், சுற்றி நின்று வேடிக்கை பார்த்த ஜனத்திரளையும் அவன் மனத்திரையிலே கண்டான். விலங்குகளையும், குற்றவாளிகளையும், இருபத்தாறு வருடச் சிறை வாழ்க்கையையும், அகாலத்திலேயே வந்து விட்ட மூப்பையும் பற்றி நினைத்தான் அவன். அந்த எண்ணமெல்லாம் அவனுக்கு வேதனையே தந்தது. தன்னைத் தானே அழித்துவிடலாமா என்று யோசிக்கிற அளவுக்கு வெறுப்பு ஏற்படுத்தியது.

"எல்லாம் இந்தக் கயவனின் செயலால்தான்" என்று நினைத்தான் அக்ஸஞேவ். மகார்செமினிச் மீது மாபெரும் ஆத்திரம் உண்டாயிற்று அவனுக்கு. அவன் பேரில் வஞ்சம் தீர்த்துக் கொள்ள வேண்டும்; அம் முயற்சியில் தானே அழிந்து பட்டாலும் சரிதான் என்ற அவா எழுந்தது. ராத்திரி பூராவும் அவன் பிரார்த்தனை பண்ணியும் பயன் இல்லை. மனம் அமைதி காண முடியாமல் தவித்தது. பகல் வேளையில் அவன் மகார் செமினிச்சின் அருகில் செல்லவே இல்லை; அவன் பக்கம் திரும்பியும் பார்க்கவில்லை.

இந்த விதமாக இரண்டு வாரங்கள் கழிந்தன. இரவு நேரங்களில் அவன் தூங்குவதே இல்லை. என்ன செய்வது என்று புரியாமல் குழம்பித் திண்டாடினான் அவன்.

ஓர் இரவில் அவன் சிறையினுள் சுற்றி வந்து கொண்டிருந்தான். ஓர் இடத்தில், கைதிகள் படுத்து உறங்குவதற்குரிய பகுதியின் ஒரு பக்கத்திலிருந்து, மண் உருண்டுபுரண்டு வெளியேவருவதை அவன் கவனித்தான். அது என்ன என்று ஆராய்வதற்காக அவன் அங்கேயே நின்றான். திடீரென்று உள்ளேயிருந்து மகார் செமினிச் வெளியே ஊர்ந்து வந்தான். அக்ஸஞேவைக் கண்டதும் பயத்தினால் அவன் முகம் வெளிறியது. அக்ஸஞேவ் அவனைப் பாராததுபோல் அப்பால் செல்ல முயன்றான். ஆனால் மகார் அவன் கையைப் பற்றி நிறுத்தினான். தான் சுவருக்கு அடியில் ஒரு துவாரம் தோண்டி விட்டதாகவும், தோண்டி எடுத்த மண்ணை கொஞ்சம் கொஞ்சமாக பூட்ஸில் வைத்து ஒவ்வொருநாளும் வெளியே எடுத்துச் சென்று, கைதிகள் வேலைக்குப் போகிற வழியில்

ரஸ்தாவில் கொட்டி அப்புறப்படுத்தி விட்டதாகவும் மகார் சொன்னுன்.

"நீ சும்மா வாயை மூடிக் கொண்டிரு, கிழவா. நீயும் வெளியேறி விடலாம். நீ உளறி விட்டாயானுல், என் தோலை உரித்து உயிரை எடுத்து விடுவார்கள். ஆனுல் அதற்கு முந்தி நான் உன்னை ஒழித்துக்கட்டி விடுவேன்" என்று அவன் எச்சரித்தான்.

தனது பகைவனைப் பார்க்கப் பார்க்க அக்ஸனோவுக்குக் கோபம் பொங்கியது. அதனுல் அவன் தேகம் பதறியது. அவன் தனது கையை இழுத்துக் கொண்டான். "தப்பி ஓடவேணும் என்கிற ஆசை எனக்கு இல்லை. நீ என்னைக் கொல்லவேண்டும் என்கிற தேவையுமில்லை. ரொம்ப காலத்துக்கு முந்தியே நீ என்னைக் கொன்றுவிட்டாய். உன்னைக் காட்டிக் கொடுக்கிற விஷயத்தில்—நான் உள்ளதைச் சொல்லி விடலாம்; சொல்லாமலுமிருக்கலாம். அது கடவுள் திருவுள்ளப்படி நடக்கும்" என்று சொல்லி விட்டான்.

மறுநாள், குற்றவாளிகளை வேலைக்கு இட்டுச் சென்றபோது, கைதிகளில் எவனே ஒருவன் பூட்ஸில் மண்ணை எடுத்து வந்து வெளியே கொட்டுவதாகக் காவல் வீரர்கள் கண்டுபிடித்துவிட்டார்கள். சிறை முழுவதும் சோதனை போடப்பட்டதில், கள்ள வழி அம்பலமாகி விட்டது. அவ் விஷயம் அறிந்த கவர்னர் வந்தார். அப்படி வழி தோண்டியவன் யார் என்று கண்டு பிடிப்பதற்காக அவர் எல்லாக் கைதிகளையும் விசாரித்தார். தங்களுக்கு எதுவுமே தெரியாது என்று எல்லோரும் சாதித்தார்கள். தெரிந்து வைத்திருந்த

வர்கள் மகார் செமினிச்சைக் காட்டிக் கொடுக்க விரும்பவில்லை. அவ்வாறு செய்தால், கசைஅடி கொடுத்து அவனைச் சாகடித்து விடுவார்கள் என்பதை அனைவரும் அறிவர். கடைசியாக, கவர்னர் அக்ஸ ஞேவ் பக்கம் திரும்பினர். அவன் நீதி தவருத மனி தன் என்பது அவருக்குத் தெரியும். ஆகவே, அவர் கேட்டார் "உண்மையே பேசும் முதியவன் நீ. கடவு ளுக்குப் பொதுவாகச் சொல்லு. இப்படிக் குழி பறித் தவன் எவன்?" என்று.

மகார் செமினிச், தனக்கு எதுவுமே சம்பந்தம் இல்லாதது போல, கவர்னரையே பார்த்தபடி நின்றுன். அவன் அக்ஸஞேவ் மீது சிறு பார்வை கூடச் செலுத்திஞனில்லை.

அக்ஸஞேவின் உதடுகளும் கரங்களும் துடித்தன. வெகுநேரம் வரை அவனுல் ஒரு வார்த்தை கூடப் பேசமுடியவில்லை. "என் வாழ்க்கையைப் பாழ்படுத் தியவனை நான் ஏன் மூடி மறைக்கவேண்டும்? நான் அனுபவித்த கொடுமைகளுக்கு ஈடாக அவன் துயரப் பட வேண்டியதுதான். ஆனுல், நான் சொல்லி விட் டால், இவர்கள் அவனை சவுக்கால் அடித்துக் கொன்று விடுவார்களே. நான் அவனைச் சந்தேகிப்பது தவருக வும் இருந்து விடலாம். பார்க்கப் போனுல் இதனுல் இனி எனக்கு என்ன நன்மை வந்துவிடப் போகிறது?" என்றெல்லாம் யோசித்தான் அவன்.

"உம். உண்மையைச் சொல்லு, கிழவா. சுவ ருக்குக் கீழே வழி தோண்டியது யார்?" என்று கவர்னர் மறுபடியும் கேட்டார்.

அக்ஸஞேவ் மகார் செமினிச்சைப் பார்த்தான். "என்னுல் சொல்ல முடியாது, எஜமான். நான்

சொல்லியே தீர வேண்டும் என்பது கடவுளின் விருப்பம் அல்ல. என்னை நீங்கள் என்ன வேண்டு மானாலும் செய்து கொள்ளுங்கள். நான் உங்கள் ஆதிக்கத்தில் இருப்பவன்" என்றான் அவன்.

கவர்னர் எவ்வளவோ முயன்றும் முடியாது போயிற்று. அக்ஸனேவ் அதிகப்படியாக எதுவும் பேசவேயில்லை. ஆகையினால் அந்த விவகாரத்தை அப்படியே விட்டுவிட நேர்ந்தது.

அன்று இரவில் அக்ஸனேவ் படுக்கையில் கிடந்து கண் அயரும் சமயத்தில் யாரோ மெதுவாக வந்து படுக்கை மீது உட்காருவதை உணர முடிந்தது. இருளினூடு உற்று நோக்கிய போது, அப்படி வந்தவன் மகார் தான் என்பதை அவன் புரிந்து கொண்டான்.

"இன்னும் உனக்கு என்னதான் வேண்டும்? நீ ஏன் இங்கு வந்தாய்?" என்று அக்ஸனேவ் கேட்டான்.

மகார் செமினிச் மௌனமாக இருந்தான். ஆகவே அக்ஸனேவ் எழுந்து உட்கார்ந்து பேசினான். "உனக்கு என்ன வேண்டும்? இங்கிருந்து போய் விடு. இல்லாவிடில் காவல்காரனைக் கூப்பிடுவேன்" என்றான்.

அக்ஸனேவை நெருங்கிக் குனிந்தவாறு மகார் முணுமுணுத்தான் "ஐவான் டிமிட்ரிச், என்னை மன்னித்து விடு" என்று,

"எதற்காக?" என்று கேட்டான் அக்ஸனேவ்.

"அந்த வியாபாரியைக் கொன்று, கத்தியை உன் பைக்குள் மறைத்து வைத்தவன் நான்தான். நான்

உன்னையும் ஒழித்துவிட எண்ணினேன். ஆனால் வெளியே ஏதோ சத்தம் கேட்கவும், கத்தியை உன் பைக்குள் திணித்து விட்டு, ஜன்னல் வழியாக நான் தப்பி ஓடிவிட்டேன்.”

அக்ஸனேவ் பேசவில்லை. என்ன சொல்வது என்றே தோன்றவில்லை அவனுக்கு.

மகார் செமினிச் படுக்கையிலிருந்து கீழிறங்கி, தரை மீது மண்டியிட்டபடி பேசினான்: “ஐவான் டிமிட்ரிச், என்னை மன்னித்துவிடு. கடவுளின் மீது கொண்டுள்ள அன்பு காரணமாக நீ என்னை மன்னித்து விடு. அந்த வியாபாரியைக் கொலை செய்தவன் நான் தான் என்பதை நான் ஒப்புக்கொண்டு விடுகிறேன். நீ உன் வீடு போய்ச் சேரலாம்.”

“இப்படிப் பேசுவது உனக்கு எளிதாக இருக்கலாம். ஆனால் உனக்காக நான் இந்த இருபத்தாறு வருடகாலம் அனுபவித்த கொடுமைகள் கொஞ்சநஞ்சமல்ல. இனிமேல் நான் எங்கே போக முடியும்? என் மனைவி செத்துப் போனாள். என் மக்கள் என்னை மறந்து விட்டார்கள். எனக்குப் போக்கிடம் எதுவுமே இல்லை” என்று சொன்னான் அக்ஸனேவ்.

மகார் செமினிச் எழுந்திருக்கவே இல்லை. அவன் தரைமீது தன் தலையை மோதிக்கொண்டு அழுதான். “ஐவான் டிமிட்ரிச், என்னை மன்னித்துவிடு. அவர்கள் என்னை கசையினால் அடித்து நொறுக்கிய போது கூட எனக்கு இவ்வளவு கஷ்டமாக இல்லை. இப்போதைய நிலையில் உன்னைப் பார்க்கும் போதுதான் என்னால் சகிக்கமுடிய வில்லை. என்றாலும் நீ எனக்காக இரக்கப் பட்டாய். என்னை நீ காட்டிக் கொடுக்கவே இல்லை.

நான் ஒரு அதமன். கிறிஸ்து பேரால் கெஞ்சுகிறேன், என்னை மன்னித்து விடு" என்றான்.

அவன் அழுது புலம்புவதைக் கேட்டதும் அக்ஸனோவுக்கும் அழுகை பொங்கி வந்தது. அவன் சொன்னான்: "கடவுள் உன்னை மன்னிப்பார். பார்க்கப்போனால் நான் உன்னைக் காட்டிலும் நூறு மடங்கு மோசமானவனாக இருக்கலாம்."

இவ் வார்த்தைகளைச் சொன்னதும் அவன் உள்ளத்தின் சுமை கரைந்தே போயிற்று. வீட்டுக்குப் போகவேணும் எனும் ஆசை கூட அவனை விட்டுப் போய்விட்டது. சிறையை விட்டு வெளியேற வேண்டும் என்கிற ஆசை இப்பொழுது அவனுக்கு இல்லவே இல்லை. தனக்கு மரணம் விரைவில் விடுதலை அளிக்கும் என்றுதான் நம்பினான் அவன்.

அக்ஸனோவ் எவ்வளவோ எடுத்துச் சொல்லிய போதிலும், மகார் தான் செய்த குற்றம் பற்றிய உண்மையை ஒப்புக்கொண்டு விட்டான். ஆனாலும், விடுதலை உத்திரவு வந்து சேர்வதற்குள் அக்ஸனோவ் இறந்து போனான்.